# மின்தமிழ் மேடை



## "நம் மண் - நம் மரபு"

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 17*
*ஏப்ரல் – 2019*




**17**

# மின்தமிழ் மேடை

காட்சி: 17

---

ஏப்ரல் - 2019

***“நம் மண் - நம் மரபு”***



முன்னட்டைப் படம்:   மகேந்திரவாடி குடைவரையின்  முன் மரபுப்பயணம் மேற்கொண்ட தமிழ் மரபு அறக்கட்டளை குழுவினர்




தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு

http://www.tamilheritage.org/

இதழ் தொகுப்பு:  தேமொழி

# தலையங்கம்: மரபுப் பயணம் - பாரம்பரியம் மிக்க தமிழ் மரபை அறிந்து கொள்வோம்

வணக்கம்.



வரலாற்று நோக்கில் ஆராய முற்படும்போது தமிழகம் ஆய்வாளர்களுக்குப் புதிய சவால்களைத் தொடர்ந்து வழங்கிக் கொண்டே இருக்கின்றது. எத்தனை எத்தனையோ மரபுகள் செழித்து வளர்ந்த நிலம் தமிழ் பூமி. கிராமங்களாகட்டும்... சிறு நகரங்களாகட்டும்.. பெரிய நகரங்கள் ஆகட்டும்.. சாலைகள், தெருக்கள் என எல்லா பகுதிகளிலும் புராதனச் சின்னங்கள் பல, தமிழகத்தின் மூலை முடுக்குகளில் நிறைந்து காணப்படுகின்றன.

மூதாதையர் வழிபாடு, இயற்கை வழிபாடு, இறந்தோர் வழிபாடு, தாய் தெய்வ வழிபாடு என்று மனித இனத்தோடு நெருக்கமான உறவு கொண்ட உளவியல் ரீதியான இறை நம்பிக்கைகள் ஒருபுறம். பண்டைய வழிபாட்டுக் குறியீடுகளாக அமைகின்ற கொற்றவை வழிபாடு, நவகண்ட வழிபாடு, வீரர்கள் வழிபாடு, தாந்திரீக வழிபாடு என்பது ஒரு புறம். அமைப்பாக்கப்பட்ட வழிபாடுகளாகத் தத்துவ அடிப்படைகளோடு இணைந்து வருகின்ற சாக்தம், பௌத்தம், சமணம், வைணவம், சைவம், கிருத்துவம், இஸ்லாம் மற்றும் ஏனைய பல வழிபாடுகள் என இவை ஒரு புறம். இவையெல்லாம் தமிழகத்தின் பன்முகத்தன்மையை விளக்க நம் முன்னே சான்றுகளாக இருப்பவை.

***இந்த பன்முகத் தன்மை தான் தமிழக வரலாற்றின் வளம். தமிழ் நிலத்தின் சொத்து!***

சடங்குகள், நாட்டார் இலக்கியங்கள், கூத்துக்கள், நாடகங்கள் இவை அனைத்தும் தொன்றுதொட்டு தமிழர் மரபின் தொடர்ச்சியாக, தமிழ் நிலத்தில் வாழ் மக்களின் சிந்தனைகளின் வெளிப்பாடுகளாகப் பரிணாமம் பெற்று மக்கள் வாழ்வியலில் அங்கத்துவம் பெற்றுத் தொடர்கின்றன. இந்தப் பன்முகத்தன்மையை அழித்து, ஒற்றைத் தன்மையை உருவாக்க முற்பட்டால் தமிழ் நிலத்தின் வளமான மரபு இறந்து போகும். ஒற்றை தெய்வ மரபு தமிழக நிலப்பரப்பின் அடையாளமல்ல. தமிழ் நிலத்தின் அடையாளம் இந்தப் பன்முகத்தன்மையே.

தமிழக வரலாற்றையும், தமிழ்மொழியின் தொன்மையையும், நூல்களின் வாசிப்பின் வழி அறிந்து கொள்ளும் அதே நேரம், நேரடியாகச் சென்று, புராதன சின்னங்களைப் பார்த்து அனுபவித்து அறிந்து கொள்வது சிறந்த அனுபவமாக அமையும். அவை தரும் அனுபவங்கள் மனதில் பசுமையாகப் படிந்திருக்கும். இந்தக் கருத்தின் அடிப்படையில் தமிழ் மரபு அறக்கட்டளை இந்த ஆண்டு ஒரு வரலாற்றுப் பயணத்தை ஏற்பாடு செய்திருந்தது.






*மார்ச் மாதம் 17ஆம் தேதி தமிழகத்தின் சென்னைக்கு அருகாமையில், வேலூர் மற்றும் திருவண்ணாமலை மாவட்ட புராதன சின்னங்கள் சிலவற்றை தொல்லியல் ஆய்வாளர்களுடன் இணைந்து சென்று அவற்றை நேரில் பார்த்து ஆராய்ந்து வர இந்தப் பயணம் அடிப்படையை வகுத்திருந்தது. 35 தன்னார்வலர்கள் இந்தப் பயணத்தில் இணைந்து கொண்டனர். மகேந்திரவாடி, திருவல்லம், மேல்பாடி, ஆற்காடு, மாமண்டூர் ஆகிய பகுதிகளுக்கு இந்த பயணத்தின் போது நேரடியாகச் சென்று காணும் வாய்ப்பு அமைந்தது. மனதில் ஆழமாகப் பதியும் வகையில் வரலாற்றுத் தகவல்களை இப்பயணத்தில் கலந்து கொண்ட அனைவருக்கும் நல்வாய்ப்பை இந்தப் பயணம் வழங்கியது.*












இத்தகைய வரலாற்றுப் பயணங்களும் தமிழ் மரபு அறக்கட்டளையின் தொடர் பணிகளில் ஒன்றாக இவ்வாண்டு தொடக்கம் இணைக்கப்படுகின்றது என்பதை வாசகர்கள் அனைவருக்கும் பகிர்ந்து கொள்வதில் தமிழ் மரபு அறக்கட்டளை மகிழ்கின்றோம். முதலாம் மரபுப் பயணம் தந்த வெற்றியின் அடிப்படையில் இவ்வாண்டு மேலும் ஒரு மரபுப் பயணம் இவ்வாண்டு அக்டோபர் மாதம் நடைபெறும். அது தொடர்பான செய்திகளை அறிய தமிழ் மரபு அறக்கட்டளையின் வலைப்பக்கங்களையும், அறிவிப்புச் செய்திகளையும் தொடர்ந்து வாசித்து வாருங்கள்.

சீரிய ஆய்வுகளின் வழி பன்முகத்தன்மை கொண்ட பெரும் பாரம்பரியம் மிக்க தமிழ் மரபை அறிந்து கொள்வோம். தமிழர் மரபைப் பேணிக்காப்போம்.

**அன்புடன்**

**முனைவர்.க.சுபாஷிணி**
**தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை**

இந்த இதழில் ...

## மின்தமிழ்மேடை - காட்சி: 17; ஏப்ரல் - 2019

# "மரபுப் பயணம்: பாரம்பரியம் மிக்க தமிழ் மரபை அறிந்து கொள்வோம்"

*(மின்தமிழில் ஜனவரி 16, 2019 – ஏப்ரல் 15 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

**உள்ளடக்கம்** **பக்கம்**


**தலையங்கம்: மரபுப் பயணம் - பாரம்பரியம் மிக்க தமிழ் மரபை அறிந்து கொள்வோம்**
— முனைவர் க.சுபாஷிணி *ii*

1. **காணக்கிடைத்த செப்பேடுகள்**
— முனைவர். வீ. ரேணுகா தேவி *1*

2. **தஞ்சை பெரிய கோவிலில் இராஜராஜரின் பிரபல வாழைப்பழ வாய்ப்பாடு**
— மா. மாரிராஜன் *7*

3. **இராயண்டபுரம் சிற்றூரில் இராசராசன் கல்வெட்டுகள்**
— துரை.சுந்தரம் *11*

4. **கொறுக்கை வீரட்டேசுவரர் கோயிலின் அடிமைகள் பற்றிய கல்வெட்டு**
— சேசாத்திரி சிறீதரன் *19*

5. **கடம்பூர் பகுதியில் தொல்லியல் தடயங்கள்**
— துரை.சுந்தரம் *25*

6. **திருப்புடைமருதூர் ஸ்ரீநாறும்பூநாதர் சித்திரக்கூடம்**
— முனைவர் க.சுபாஷிணி *43*

7. **தொண்டாமுத்தூரை நோக்கி ஒரு சிறு பயணம்**
— துரை.சுந்தரம் *48*

8. **திருசூலம் ஓர் தேவாரவைப்புத்தலம்**
— நூ.த.லோகசுந்தரம் *60*

9. **சீர்காழி - புதுத்துறை - சிவன் கோயில்**
— துரை.சுந்தரம் *71*

10. **மூன்று பள்ளிப்படை கோவில்கள்**
— மா. மாரிராஜன் *77*

11. **இராஜசிம்மேசுவரம் - காஞ்சி கைலாசநாதர் கோயில்**
— துரை.சுந்தரம் *82*

12. **பெண்ணையாற்றுத் திருவிழா**
— சிங்கநெஞ்சம் சம்பந்தம் *94*

13. **கோவை மாநகர்... அன்றும் இன்றும் ...**
— துரை.சுந்தரம் *97*

14. **திருவண்ணாமலை அண்ணாமலையார் கோவில் - திருஅமுது படையல்**
— மா. மாரிராஜன் *105*

15. **சங்கமித்தை - மாதகல் சம்பில்துறை பௌத்த அடையாளங்கள்**
— முனைவர் க.சுபாஷிணி *108*

**உள்ளடக்கம்** **பக்கம்**


*16.* **இலங்கைக் கோட்டை**
— முனைவர் க.சுபாஷிணி *111*
*17.* **8ம் நூற்றாண்டில் வடவிலங்கை அரசு**
— ப. முகுந்தன் *114*
*18.* **சிலோன் தீவு வரைப்படம்**
— முனைவர் க.சுபாஷிணி *133*
*19.* **மன்னார் தீவு வரைப்படம்**
— முனைவர் க.சுபாஷிணி *136*
*20.* **நானிலத் தெய்வங்களும்; பண்டைத் தமிழர் வழிபாடுகளும்**
— முனைவர் ச.கண்மணி கணேசன் *138*
*21.* **பழந்தமிழகத்தில் தொல்சமயத்தின் சிதைவும் சமயஉருவாக்கமும்**
— ஆ.சிவசுப்பிரமணியன் *145*
*22.* **'நந்தனார்' - 18-19-ஆம் நூற்றாண்டுக்கால சமூகப் பதிவு**
— ஆறு.அன்புஅரசன் *168*
*23.* **திருப்புன்கூர்**
— தேமொழி *175*
*24.* **மந்திரம் - ஒரு பொருள் விளக்கம்**
— இராம.கி. *178*
*25.* **நார்த்தமலை - பெயர் விளக்கம்**
— நூ.த.லோகசுந்தரம் *181*
*26.* **இசையாய், இசை தரும் பொருளாய் ...**
— தேமொழி *184*
*27.* **தமிழ் நிறங்கள்**
— தாமரைச்செல்வன் *187*
*28.* **கலைச்சொல்லாக்க உத்திகள்**
— திருத்தம் பொன். சரவணன் *190*
*29.* **காதல் ...**
— கவின்மொழிவர்மன் *194*
*30.* **தண்ணீர்ப்பந்தல்?**
— முனைவர். ப.பாண்டியராஜா *196*
*31.* **ஆற்றுப்படையும் ஆறுபடையும்**
— முனைவர் ச.கண்மணி கணேசன் *198*
*32.* **கூத்தராற்றுப்படையில் உணவும் உருக்காட்சியும்**
— முனைவர் ச.கண்மணி கணேசன் *203*
*33.* **ஜெர்மன் தமிழியல் — நெடுந்தமிழ் வரலாற்றின் திருப்புமுனை**
— தேமொழி *211*
*34.* **தமிழ் ஆள; தமிழ் பேசு...**
— வித்யாசாகர் *218*

## உள்ளடக்கம் பக்கம்

### கவிதைகள்


35. கனவது விரியட்டும்; தமிழெங்கும் பரவட்டும்...
— வித்யாசாகர் 222

36. யார் தமிழன்?
— நரசிங்கபுரத்தான் ஜெய். சுரேஷ்குமார் 224

37. வரலாற்றுக்கான உரிமை...
— ஆர்.பாலகிருஷ்ணன், இஆப 225

38. அறிவும் உணர்ச்சியும்
— ரவி அண்ணாசாமி 226

39. சந்தை
— ருத்ரா இ.பரமசிவன் 227

40. கற்பனை ஊற்றுக்கண்ணின் அடைப்பு ---ச்சி
— முனைவர் ச.கண்மணி கணேசன் 229

41. ஒரு தாலாட்டு
— ருத்ரா இ.பரமசிவன் 230

42. தந்தைமை
— முனைவர் ச.கண்மணி கணேசன் 231

43. நாற்பது பேர்
— ருத்ரா இ.பரமசிவன் 232

44. மரத்தின் சிரிப்பு
— திருத்தம் பொன். சரவணன் 233

தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள் 234







மின்தமிழ்மேடை இதழ்கள் தொகுப்பு:
http://mintamilmedai.tamilheritage.org/wp/

'மின்தமிழ்மேடை' இதழுக்கு தங்கள் படைப்புக்களை அனுப்ப விரும்புபவர்
editorthfjournal@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பலாம்

## 1. காணக்கிடைத்த செப்பேடுகள்

*— முனைவர். வீ. ரேணுகா தேவி*

*அச்சு இயந்திரங்களின் வருகைக்கு முன்னர் எழுதப்படும் பொருள்களாகக் கல், ஓலை, உலோகம், மரம், சங்கு, துணி, சுடுமண் என பலவகைப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டன. இவற்றில் கல், ஓலை, செம்பு ஆகியவற்றின் பயன்பாடு மிகுதியாகும்.*

*கல்லில் எழுதப்பட்ட செய்திகள் கல்வெட்டாகவும், ஓலையில் எழுதப்பட்டவை சுவடிகளாகவும், செம்பில் எழுதப்பட்ட செய்திகள் செப்பேடுகளாகவும் இன்றளவும் ஆங்காங்கே காணக்கிடைக்கின்றன. இவை எண்ணிக்கையில் மட்டுமல்லாமல் வெளிப்படுத்தும் வரலாறு, பண்பாடு, கலை, சமயம். சமுதாயம் மற்றும் பொருளாதாரம் பற்றிய செய்திகளும் வளமானவை. அவை ஒரு மொழியின், சமூகத்தின் வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்து கொள்வதற்குப் பெரிதும் பயன் உடையதாக உள்ளன.*

*தமிழகத்தில் முதலில் கல்வெட்டுக்களைத் தொகுக்க ஆரம்பித்த ஆங்கிலேய அதிகாரிகள் தங்கள் கள ஆய்வுகளில் செப்பேடுகளையும் புதையல்களாகக் கண்டறிந்தனர். வரிவிலக்கு அளிப்பது தொடர்பாக ஆங்கிலேய அரசு பழைய ஆவணங்களைப் பெற்றுக்கொண்டு புதிய வடிவில் தாள் ஆவணங்கள் வழங்கியபோது ஏராளமான செப்பேடுகள் அரசின் கருவூலங்களைச் சென்றடைந்தன.*

*தமிழகத்தைச் சேர்ந்த சுமார் 400 செப்பேடுகள் இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் ஆங்கிலக் குறிப்புகளுடன் பதிவாகியுள்ளன. பல செப்பேடுகள் படங்கள், வாசகங்கள், எழுத்துப் பெயர்ப்பு, மொழி பெயர்ப்பு ஆய்வுக்குறிப்புகளுடன் எபிகிராபிகா இண்டிகா தொகுதிகளில் வெளிவந்துள்ளன. இந்தியன் ஆன்டிகுவரி, தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் ஆகியவற்றிலும் சில வெளிவந்துள்ளன. தமிழகச் செப்பேடுகள் தொகுதி-1 இல் 40 செப்பேடுகள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் ஒன்று வெள்ளிப் பட்டயம், இரண்டு தெலுங்கு மொழியில் உள்ளவை.*

*சிதறல்களாக ஆங்காங்கே வெளியிடப்பட்டுள்ள செப்பேடுகளைத் தேடி ஆய்வு செய்வதில் உள்ள சிரமங்களைக் கருத்தில்கொண்டு தி.நா.சுப்பிரமணியன் பல்லவர் செப்பேடுகள் 30, பாண்டியர் செப்பேடுகள் 10 என்ற இரு தொகுதிகளை தமிழ் வரலாற்றுக் கழகம் வாயிலாக 40 ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட்டுள்ளார்.*

*இராமேசுரம் கும்பாபிஷேக மலர் தொகுத்த சோம. லெ. இராமநாதபுரம் அரண்மனையிலிருந்த செப்பேடுகளைத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துணை கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்களைக் கொண்டு படித்து அவற்றின் 30*

வாசகங்களை வெளியிட்டார். இதன் காரணமாக ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டு பலரும் செப்பேடுகளைத் தேடி இதழ்களில் வெளியிடும் போக்கு முனைப்பு பெற்றது. மராட்டியர் செப்பேடுகள், சேதுபதி செப்பேடுகள், கொங்கு நாட்டுச் சமூக ஆவணங்கள், திருவாடுதுறை ஆதீனச் செப்பேடுகள், திருப்பனந்தாள் ஆதீனச் செப்பேடுகள் எனப் பல்வேறு தொகுதிகளாகச் செப்பேடுகள் வெளியிடப்பட்டன.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வேளஞ்சேரி திருத்தணி செப்பேடுகள், திருமலை நாயக்கர் செப்பேடுகள் ஆகிய இரு தொகுதிகளை வெளியிட்டதோடு, கல்வெட்டு காலாண்டிதழ் கருத்தரங்கு கட்டுரைத் தொகுதி, மாவட்டக் கையேடு ஆகியவற்றில் அவ்வப்போது செப்பேட்டு வாசகங்களை வெளியிட்டுள்ளது. இதன் தொல்லியல் செய்தி மடலில் ஐந்து செப்பேடுகள் பற்றிய குறிப்புகளை வெளியிட்டுள்ளது.

இதுவரை அச்சில் வெளிவந்த செப்பேடுகள் அனைத்தையும் பற்றிய செய்திகளை விவரிக்க இயலாமையால் தமிழகச் செப்பேடுகள் என்ற தொகுதியில் வெளிவந்த 40 செப்பேடுகள் பற்றிய செய்திகள் விரித்துரைக்கப்படுகின்றன.

தமிழகச் செப்பேடுகள் தொகுதி – 1ல் மதுரை நாயக்க மன்னர் தொடர்பான செப்பேடுகள் பத்தும், சேதுபதிகள் தொடர்பானவை ஐந்தும், உள்ளன. நத்தம் பாளையப் பட்டுகள் - 3, கூளப்ப நாயக்கர்-2, அரியலூர் மழவராயர் -2, தென்காசிப் பாண்டியர் -1, வீரபாண்டிய கட்டபொம்மன்-1, விஜயநகர நாயக்கர்-1, ஆங்கிலேயர்-2 என மொத்தம் 27 செப்பேடுகளில் ஆட்சியாளர்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஏனைய 13 செப்பேடுகளில் ஆட்சியாளர்கள் பற்றிய குறிப்புகள், பெயர்கள் இல்லாதவை.

இச்செப்பேடுகள் அனைத்தும் ஒரு ஏட்டில் மட்டும் வாசகம் உடையவை. மயிலாடுதுறை, சேடபட்டி, மேல்சேவூர் ஆகிய செப்பேடுகள் வார்ப்பு முறையில் செய்யப்பட்டவை. ஏனையவை செப்புத் தகடுகளாக உள்ளவை. முன்னதில் உருவங்கள் வார்ப்பு முறையில் புடைப்பாக உள்ளன. தகடுகளாக உள்ள பலவற்றில் உருவங்கள் கோட்டுருவங்களாக உள்ளன.

பெரும்பாலான செப்பேடுகள் தமிழகத்தின் தென்பகுதியைச் சேர்ந்தவை. திருவண்ணாமலை, மேல்சேவூர், நெய்வேலிச் செப்பேடுகள் வட பகுதியைச் சேர்ந்தவை. இச்செப்பேடுகள் பலவும் தமிழ்ச் சமூகங்கள் தொடர்பானவை. சமூகங்களின் தோற்றம் பற்றிய விரிவான புராணங்கள் நெய்வேலி, மானூர், திருவண்ணாமலை செப்பேடுகளில் காணப்படுகின்றன.

திருமானூர், அரியலூர், நத்தம், மேல்சேவூர், திருவாடுதுறை, செங்கல்பட்டு (வெள்ளிப் பட்டயம்) திருநெல்வேலி 1, 2, மானூர், இராமநாதபுரம், மூலைக்கொத்தளம் -2, முசிறி ஆகியச் செப்பேடுகள் கோயில்களுக்கு அளிக்கப்பட்ட கொடைகள் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

*அரியலூர், நத்தம் செப்பேடுகள் சந்தைகளில் பெறப்பட்ட வரி வருமானம் கோயில்களுக்குக் கொடுக்கப் பட்டதைச் சொல்கின்றன.*

*நத்தம் செப்பேடு பேட்டைகளில் உள்ள வணிகர்களில் இந்துக்கள் மட்டுமல்லாது இஸ்லாமியரும் வரி வருமானத்தைக் கோயில்களுக்குத் தர ஒப்புதல் அளித்ததாகக் காட்டுகின்றன.*

*இந்து கோயில்களுக்கான இஸ்லாமியர் பங்களிப்பு பற்றி உத்திர கோசமங்கை, திருநாகேஸ்வரம், நயினார் குப்பம் கல்வெட்டுக்கள் வழியாக அறிய முடிகின்றது. இவற்றின் வழியாகப் பெறப்படும் செய்திகள் சமயப் பூசல்களைக் குறைத்துச் சமயப் பொறையை ஏற்படுத்தக்கூடியவை.*

*மேல்சேவூர் செப்பேடு செட்டிகள் தங்கள் சமூக மக்களிடையே நிகழும் நன்மை நிகழ்வுகளில் விதிக்கப்படும் கட்டணங்களைக் கோயில் வழிபாட்டிற்கு வருவாய் ஏற்படுத்தியதைக் காட்டுகின்றது.*

*இவ்வாறு பல சாதி சமூகங்கள் தங்களுக்கான மடங்களை ஏற்படுத்திக் கொள்வதையும், அவற்றின் நடவடிக்கைகளையும், திருவண்ணாமலை 24 மனை செட்டிகள் செப்பேடு, சேடப்பட்டி அம்பலக்காரர் செப்பேடு, மதுரை ஆரப்பாளையம் குயவர் - செட்டியார் செப்பேடு ஆகிய செப்பேடுகள் வெளிப்படுத்துகின்றன.*

*அரசனால் பாராட்டப்பட்டு நாட்டாண்மை; தலைமை பெறுவதை சந்தையூர், தாருகாபுரம், பாலக்கோப்பை செப்பேடுகளும், சமயத் தலைவர் ஒருவரால் நாட்டாண்மைச் சிறப்புப் பெற்றதை பள்ளப்பட்டிச் செப்பேடும் காட்டுகின்றன.*

*கைக்கோளர் சமூகத்தைப் புகழ்ந்து பாடியவருக்குக் கொடுத்த மரியாதைச் சிறப்புகளை மயிலாடுதுறைச் செப்பேடு காட்டுகிறது. இடங்கை, வலங்கை பிணக்கில் இடங்கையினருக்குச் சாதகமான உண்மைகளை வெளிக்கொண்டு வந்தவரைப் பாராட்டி மரியாதைகள் செய்யப்பட்டதை நெய்வேலி பண்ணாட்டார் செப்பேடு கூறுகின்றது.*

*சந்தையூர் செப்பேடு சந்தையூர் சலுப்ப பெத்தண்ண செட்டி அதிகாரம் செய்து வந்தபோது அவனிடம் மாதம் 9 கலம் தானியக் கூலிக்கு வீரண்ண சேர்வை காவல் பணி செய்து வந்தான், சந்தையில் இருவருக்கும் சச்சரவு ஏற்பட்டு வீரண்ணன் சேர்வை சலுப்ப பெத்தண்ணனின் தலையை வெட்டி ரத்தக்கைகளோடு நடுச் சாமத்தில் கூளப்ப நாயக்கர் முன்கொண்டு வந்து வைத்து சந்தையூரை கூளப்ப நாயக்கரின் பாளையப்பட்டு ஊராக்கினான். கூளப்ப நாயக்கரும் ராணுவரும் மகிழ்ந்து அவனுக்கு சந்தையூரைச் சேர்ந்த 18 பட்டி காவல் நாட்டாண்மை அளித்தனர். அவனது சாதியை அவனை கம்பளக்காரனாகவும், தென் மலை குத்தகைக்காரனாகவும் அங்கீகரித்து பட்டயம் எழுதிக் கொடுத்தனர். கூளப்ப நாயக்கர் பாளையப்பட்டு ஏரிகள் பாசனத்தில் 30 கலம் விதைப்பாடு நஞ்சை நிலமும், 60 சங்கிலி புஞ்சை நிலமும் தரப்பட்டது. 18 பட்டி கிராமத்து வீடுகள் ஒவ்வொன்றும் 1 பணம் 3 குறுணி தானியம் தருவதென்றும்,*

*ஆடு உள்ளவர்கள் 1 கிடாய் தருவதென்றும், அரண்மனைக்கு அடுத்து இரண்டாவதாக இவனுக்குக் கோயில்களில் தீர்த்தம் திருமாலை தருவதென்று முடிவாயிற்று என்று செப்புகின்றது.*

*சாட்சிகள், பட்டயம் எழுதியவர் பெயர்களும் ஓம்படைக்கிளவியில் சதுரகிரி சிவன் பெருமாள் கோயில்களும் சொல்லப்பட்டுள்ளன.*

*பஞ்சமா சப்த வாத்தியக் கருவியை இயக்குபவர்களான நாகாபாசத்தார் தங்களுக்கென்று தலைவரைத் தேர்வு செய்து அவருக்கு மரியாதைச் சிறப்புகள் செய்ததை ஆழ்வார்பேட்டை செப்பேடு-1 பதிவு செய்துள்ளது.*

*பாளையப்பட்டுப் பாளையக்காரர்கள் பொது நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்ததை நத்தம், வேலன்பட்டி, பழனிச் செப்பேடுகள் காட்டுகின்றன. திருச்செந்தூர்க் கோயில் திருப்பணிக்கு பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரன் வீரபாண்டிய கட்டபொம்மன் தன் ஆளுகைப் பகுதி வரி வருமானத்தை அளித்ததைப் பற்றி திருவாடுதுறை செப்பேடு காட்டுகிறது.*

*பாளையப்பட்டுக்களை அடக்கி ஆங்கிலேயர் கம்பெனி ஆட்சியை நிறுவிய அரசியல் நிகழ்வுகளை எட்டயபுரம் விளம்பிச் செப்பேடு செப்புகின்றது.*

*ஆங்கிலேய ஆட்சி நிலைபெற்றதும் கடல் கடந்து வெகு தொலைவிலிருந்த அரசுத் தலைமையைப் போற்றித் தமிழகத்தில் அன்னதானம் இலவச ஆடைகள் மற்றும் தெய்வத்திற்கு அணிகலன் வழங்கியதைச் செங்கல்பட்டு வெள்ளிச் செப்பேடு வெளிப்படுத்துகின்றது.*

*மீனாட்சிபுரம் செப்பேடு குரும்பர் சமுதாயப் பெண்களின் மானத்தைக் காப்பாற்றிய "தீண்குலச் சமயத்தைச்" சேர்ந்த இஸ்லாமியரைப் போற்றுவதைப் பார்க்கலாம். சமயங்களிடையே சமயப்பொறை மட்டுமின்றி இடருற்ற காலங்களில் உதவும் சகோதரத்துவமும் இருந்தமைக்கு இச்செப்பேடு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.*

*பண்டைய காலத்தில் வழக்கிலிருந்த வராகன், பணம் முதலிய செலவாணிகளிலும் பேட்டைகளிலும் துறைமுகங்களிலும் வந்து சென்ற சரக்குகள் அவற்றிற்கான வரி விதிப்புகள் சமூக மக்கள் ஒவ்வொரு நிகழ்விற்கும் விதித்துக் கொண்ட கட்டணங்களும் பொருளாதாரச் செய்திகளை அறிந்துகொள்ளப் பெரிதும் உதவுபவையாக உள்ளன.*

*வெம்பக் கோட்டைச் செப்பேடு அரசின் ஆதரவோடு எப்படி வரிவிதிப்பு உண்டாக்கப்பட்டது அது மக்களால் எதிர்க்கப்பட்டது, பின்னர் அது தவிர்க்கப்பட்டது போன்ற செய்திகளை வெளிப்படுத்துவதாக உள்ளது.*

வெள்ளிக்குறிஞ்சி செப்பேடு பண்டாரம் உறவின் முறையார் தங்களிடையே உள்ள மண உறவுகள் பற்றிய நெறிமுறை ஏற்படுத்திக் கொண்டதை வெளிப்படுத்துகின்றது.

பழனிச் செப்பேடு குமார லிங்கைய நாயக்கர் தனது தந்தை ஏறுதாது லிங்கைய நாயக்கர் மற்றும் தாயார் தாதம்மாள் அவர்கள் பெயரில் இரண்டு சத்திரங்கள் கட்டி நிர்வாகச் செலவுக்காக ஏற்கப்பட்டி கிராமம், காரைக்குண்டு, அம்மாபட்டி ஆகிய ஊர்களைக் கொடுத்துள்ளார். இவ்வூர்களில் உள்ள நிலங்களில் எல்லைகளின் திசைகள் ஈசானிய, அக்னி, நிருதி, வாயு என்று திரை பாலகர்களின் பெயரில் சொல்லப்பட்டுள்ளது. நிலத்தின் ஒவ்வொருத் திருப்பத்திலும் எல்லைக் கல்லாகச் சூலக்கல் நடப்பட்டதால் ‘சூலக்கல் 11க்குள் சேர்ந்த’, ‘சூலக்கல் 14க்குள் சேர்ந்த’ என்று நிலங்கள் குறிக்கப்படுகின்றன.

இச் செப்பேட்டில் உள்ள வாசகம் அப்படியே நத்தம் அருகில் உள்ள சத்திரம் ஊராளிப் பட்டியில் கல்வெட்டாகவும் பொறிக்கப்பட்டுள்ளது.

கல்லிலும், செம்பிலும் வெட்டிக்கொள்க என்று வரும் கல்வெட்டுச் சொற்றொடர்க்கு இச்செப்பேடு நல்ல காட்டாக உள்ளது. இதனில் சொல்லப்படும் சத்திரங்கள் இன்றுப் பழனிக்குப் பாதயாத்திரை செல்லும் வழித்தடத்தில் உள்ளன.

தாருகாபுரம் செப்பேடு தென்காசிப் பாண்டியர் எல்லைக்குட்பட்ட மலையங்காட்டுப் பகுதியில் தீயவனும், மிருகத்தன்மை உடையவனுமான சந்திரன் என்ற ஒரு எதிரி இருந்ததாகவும் அவன் பல அரசர்களைக் கொன்று வந்ததாகவும் அவனை கொண்டையன்கோட்டை மறவரில் ஒருவனான திருவண்ணாத் தேவர் வெட்டி வெற்றி கொண்டான். ஆதலால் திருவண்ணாத் தேவர்க்கு இந்திரத் தலைவன் என்று பட்டம் தரப்பட்ட செய்தி சொல்லப்பட்டுள்ளது. இவருக்கு நிலமை காணி ஆட்சியாக, உம்பளச் சர்வமானியமாக 22க்கும் மேற்பட்ட கிராமங்கள் வழங்கப்பட்டன. இவ் கிராமங்களின் பெயரும் அவை உள்ளடக்கிய பகுதியின் எல்லையும் இச் செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது. இவர் தமக்குப் பல்லக்கு, தீவட்டி, குடை, கொடி, சாமரம் முதலிய பரிவாரங்கள் வைத்துக் கொள்ளத் தேங்காய் தொட்டு உரிமை வழங்கியதும், கோயில் மரியாதை வழங்கியதையும் சொல்வதாக உள்ளது.

அரித்துவாரமங்கலச் செப்பேடு தஞ்சாவூரை ஆண்ட ரகுநாத நாயக்கருக்கு வெள்ளாளர்கள் அனைவரும் ஒன்று கூடி கோயில்களுக்கு நிவந்தம் அளித்ததைப் பதிவு செய்து அளித்ததைக் குறிப்பதாக உள்ளது. தமிழ்நாடு முழுவதும் வாழ்ந்த பல்வேறு பிரிவு வெள்ளாளர்களைப் பற்றியும் அவர்கள் கோயில்களுக்கு அளித்த, கொடைகள் பற்றியும் கூறுவதாக இச் செப்பேட்டுச் செய்திகள் உள்ளன.

செப்பேடுகளின் பொதுவாகக் கோயில் கொடைகள், மக்களுக்கு விதிக்கப்பட்ட வரிகள், வசூல்கள், அரசர்களின் மெய்தீர்த்திகள் பற்றிய செய்திகளையே உள்ளடக்கமாகக் கொண்டுள்ளன.

ஒன்பது கம்பளம், கவுண்டர்கள், செங்குந்தர், பண்டாரம், பள்ளு, செட்டி, வெள்ளாளர், நாயக்கர், தேவர் எனச் சாதீயப் பெயர்களும் செப்பேடுகளில் காணக் கிடைக்கின்றன. பழைய அளவு முறைகள் பற்றிய செய்திகளும் காணக் கிடைக்கின்றன.

கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள் ஒரு மொழியின் தொன்மையைப் பறைசாற்றுபவை. அவை மொழி வரலாறு, மொழி அமைப்பு, மொழி நடை, சமூக வரலாறு, அமைப்பு, பண்பாடு, கோயில் வழிபாடு, கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிவந்தங்கள், நி;நிலக்கொடைகள், வரி விதிப்பு, வரி வசூல், அரசியல் அமைப்பு, பொருளாதாரம் பற்றிய செய்திகளை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணையாக அமைந்துள்ளன. அவற்றை எரியூட்டி மகிழாது போற்றிப் பாதுகாப்பது நமது தலையாயக் கடமையாகும்.

தொடர்பு:
முனைவர் வீ.ரேணுகாதேவி
(prof.renuga@gmail.com)
தகைசால் பேராசிரியர்
மேனாள் துறைத்தலைவர்
மொழியியல் துறை
மேனாள் புலத்தலைவர்
மொழியியல் மற்றும் தகவல் தொடர்பியல் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

## 2. தஞ்சை பெரிய கோவிலில் இராஜராஜரின் பிரபல வாழைப்பழ வாய்ப்பாடு

***— மா. மாரிராஜன்***

*இக்கல்வெட்டு இராஜராஜனின் தொலைநோக்குப் பார்வை, நிதி மேலாண்மை, என்று பல ஆய்வாளர்கள் சிலாகித்துக் கூறுவர். பெருவுடையார் கோவிலின் மேற்குப்புற திருச்சுற்றுமாளிகையின் உட்புறத்தில் உள்ள சிறு பிள்ளையார் முகப்பில் கீழ்க்கண்ட கல் வெட்டு உள்ளது.*

*இக்கோவில் பிள்ளையாருக்கு தினசரி அமுது படைத்தல் வேண்டும்.! தினம் ஒன்றுக்கு 150 வாழைப்பழங்கள் வேண்டும். இந்த அமுது படையல் நிகழ்வானது வருடம் முழுவதும் தடையின்றி நடக்க அரசர் ஒரு ஏற்பாட்டை நிறுவினார்.*

*ஒரு வைப்புத்தொகை உருவாக்கப்பட்டது. வாழைப்பழம் வாங்குவதற்காக வைப்புத் தொகை அளிக்க, தஞ்சையின் முக்கிய நான்கு தெருக்களைச் சேர்ந்த நகரத்தார்கள் முன் வந்தார்கள். அவர்கள் முறையே 60 காசு., 120 காசு., 120 காசு., 60காசு என மொத்தம் 360 காசுகள் நிவந்தனம் அளித்தனர். இந்த வைப்புத்தொகை 360 காசுகள் தஞ்சை வணிகர்களுக்கு ஆண்டுக்கு 12.5 % என்ற வட்டி விகிதத்தில் கடன் வழங்கப்பட்டது.! வருட வட்டியாக 45 காசுகள் ( 360 ÷12.5% = 45) பெறப்பட்டது.!*

*பிள்ளையாருக்கு அமுத படைக்க நாளொன்றுக்கு 150 வாழைப்பழங்கள் தேவை. ஆண்டுக்கு 360 நாட்கள் எனத் தெரிகிறது. ஆக... ஒரு வருடத்திற்குத் தேவைப்படும் வாழைப்பழங்களின் எண்ணிக்கை 360 × 150 = 54000. அன்றைய நாளில் ஒரு காசுக்கு 1200 வாழைப்பழங்கள் கிடைத்தன!*

*வட்டித்தொகையாக கிடைத்தது 45 காசுகள்! எனவே 45 ×1200 =54000 வாழைப்பழங்கள் கிடைத்தன! பிள்ளையாருக்கும் தடையின்றி வருடம் முழுவதும் படையல் தொடர்ந்தது.! இச் செய்தியினை விரிவாகக் கூறும். கல் வெட்டு வரிகளைப் படித்துப் பாருங்கள்.!*

*சமுத்திரம் போல் இருக்கும் தஞ்சை பெரிய கோவிலில் ஒரு சிறு துளிபோல் காணப்படும் பிள்ளையார் கோவிலுக்கு தினசரி நெய்வேத்தியம் செய்ய இவ்வளவு ஏற்பாடுகள் என்றால், தஞ்சை பெருவுடையாருக்கு பூஜைகள் நடக்க எவ்வளவு , எவ்வளவு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும்.? ஒட்டு மொத்த சோழ தேசத்துக் கோவில்களின் நிர்வாகம் எப்படி இருந்திருக்கும்.?*

*ஒட்டுமொத்த சோழநாட்டின் நிர்வாகம்..! ராஜராஜ சோழனின் சிறப்பை எவ்வாறு விவரிக்க முடியும் !!!!*

**இராசராசனின் 'வாழைப்பழ வாய்ப்பாட்டு'க் கல்வெட்டு:**

*"ஸ்வாதிஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார்க்கு வாழைப்பழம் அமுது செய்தருள உடையார் பண்டாரத்துப் பொலிசையூட்டுக்கு வைத்தருளின காசும் இக்காசு பொலிசையூட்டுக்கு கொண்ட அங்காடிகளும் கல்லில் வெட்டியது.*

*ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார்க்கு அமுது செய்தருள நிசதம் வாழைப்பழம் நூற்றைம்பதாக ஒராட்டைக்கு வந்த வாழைப்பழம் ஐம்பத்து நாலாயிரத்துக்கு காசு ஒன்றுக்கு வாழைப்பழம் ஆயிரத்திருநூறாக வந்த காசு நாற்பத்து ஐஞ்சுக்கு காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைகாற் காசு பொலிசையூட்டாக செல்லவைத்த காசு முன்னூற்று அறுபது*

*இக்காசில் தஞ்சாவூர்க் கூற்றத்து தஞ்சாவூர்ப் புறம்படி நித்த விநோதகப் பெருந்தெருவில் நகரத்தார் உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பசான் முதல் கொண்ட காசு அறுபதினாற் காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற் காசு பொலிசையாகக் கடவ பொலிசைக் காசு ஏழரைக்கு உடையார் பண்டாரத்தே நிசதம் இடக்கடவ வாழைப்பழம் இருபத்தைஞ்சு*

*தஞ்சாவூர்க் கூற்றத்து தஞ்சாவூர்ப் புறம்படி மும்முடிச் சோழப் பெருந்தெருவில் நகரத்தார் உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பசான் முதல் கொண்ட காசு நூற்றிரு பதினாற் காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற் காசு பொலிசையாகக் கடவ பொலிசைக் காசு பதினைஞ்சுக்கு உடையார் பண்டாரத்தே நிசதம் இடக்கடவ வாழைப்பழம் ஐம்பது*

*தஞ்சாவூர்க் கூற்றத்து தஞ்சாவூர்ப் புறம்படி வீரசிகாமனிப் பெருந்தெருவில் நகரத்தார் உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பசான் முதல் கொண்ட காசு நூற்றிரு பதினால் காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற் காசு பொலிசையூட்டாக ஆட்டை வட்டம் அரைக்காற் காசு பொலிசையாகக் கடவ பொலிசைக் காசு பதினைஞ்சுக்கு உடையார் பண்டாரத்தே நிசதம் இடக்கடவ வாழைப்பழம் ஐம்பது*

*தஞ்சாவூர்க் கூற்றத்து தஞ்சாவூர்ப் புறம்படி திரிபுவன மாதவிப் பேரங்காடி நகரத்தார் உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது பசான் முதல் கொண்ட காசு அறுபதினாற் காசு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற் காசு பொலிசையாகக் கடவ பொலிசைக் காசு ஏழரைக்கு உடையார் பண்டாரத்தே நிசதம் இடக்கடவ வாழைப்பழம் இருபத்தைஞ்சு"*

[34.] கூற்றத்து தஞ்சாவூர்ப்புறம்படி வீரசிகாமணிப்பெருந்தெருவில்
[35.] [ந]கரத்தார் உடையார் ஸ்ரீராஜராஜதேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவ-
[36.] [து பசான்] முதல் கொண்ட க[ா]சு நூற்றிருபதினால் ஒன்றுக்கு ஆட்டை[ட]
[37.] வட்டம் அரைக்காற்காசு பொலி[ஸ]யூட்டாக்கடவ பொலிசைக்காசு [ப]-
[38.] தினைஞ்சுக்கு நநூராக்கோலக் [உ]டையார் பண்டாரத்தே நிசதம் இடக்கட [வ]-
[39.] வாழைப்பழம் ஐம்பது |— [இ*] தஞ்சாவூர்க்கூற்றத்து தஞ்சா[வ]-
[40.] ஊர்ப்புறம்படி திரிபு[வ]னமாதேவிப்பேரங்காடி நக[ர]-
[41.] த்தார் உடையார் ஸ்ரீராஜராஜதேவற்கு யாண்டு இருபத்தொ[ன]-
[42.] ன்பதாவது பசான் முதல் கொண்ட காசு அறுபதிநாற்-
[43.] [கா]சு ஒன்றுக்கு ஆட்டை வட்டம் அரைக்காற்காசு பொ[லி]-
[44.] சையூட்டாக்கடவ பொலிசைக்காசு ஏழரைக்கு [ந]-
[45.] நூராக்கோலக் உடையார் பண்டாரத்தே நிசதம் இடக்கட-
[46.] வ வாழைப்பழம் இருபத்தஞ்சு [௨*]

TRANSLATION.

1. Hail! Prosperity! There was engraved on stone (1) the money, which the lord Śrî-Râjarâjadêva had been pleased to deposit in the treasury of the lord, to be put out to interest (*for supplying*) plantains, to be offered to (*the image of*) Pillaiyâr Ganapati in the (*surrounding*) hall (*âlaya*),[1] and (2) the markets, which had received this money on interest.

2. Three hundred and sixty *kâśu* were deposited (*under the condition*) that, as long as the moon and the sun endure, an interest of one eighth *kâśu* per year should be paid for each *kâśu*, in order to realize forty-five *kâśu* for (*purchasing*),—at the rate of one thousand and two hundred plantains for each *kâśu*,—fifty-four thousand plantains per year, *viz.*, one hundred and fifty plantains per day, to be offered to (*the image of*) Pillaiyâr Ganapati in the (*surrounding*) hall.

3. The citizens of the high-street (*perundeṟu*) (*called after*) Nittavinôda within the limits[2] of Tañjâvûr, (*a city*) in Tañjâvûr-kûṟṟam, have to supply every day, as long as the moon and the sun endure, twenty-five plantains to the treasury of the lord in payment of the interest,—which amounts to seven and a half *kâśu* (*per year*),—on the sixty *kâśu*, which they have received out of this money after (*the harvest of*) the *pasân* in the twenty-ninth year (*of the reign*) of the lord Śrî-Râjarâjadêva,—the rate of interest being one eighth *kâśu* per year for each *kâśu*.

4. The citizens of the high-street (*called after*) Mummuḍi-Śôra within the limits of Tañjâvûr, (*a city*) in Tañjâvûr-kûṟṟam, have to supply every day, as long as the moon and the sun endure, fifty plantains to the treasury of the lord in payment of the interest,—which amounts to fifteen *kâśu* (*per year*),—on the one hundred and twenty *kâśu*, which they have received after (*the harvest of*) the *pasân* in the twenty-ninth year (*of the reign*) of the lord Śrî-Râjarâjadêva,—the rate of interest being one eighth *kâśu* per year for each *kâśu*.

5. The citizens of the high-street (*called after*) Vîraśikhâmaṇi within the limits of Tañjâvûr, (*a city*) in Tañjâvûr-kûṟṟam, have to supply every day, as long as the moon

[1] *Âlaya* has the same meaning as *parivârâlaya* in No. 36, and as *tiru-suṟṟu-mâligai* in No. 31, paragraph 2.
[2] See page 121, note 2.

தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி 2 - எண் 37.
*S.I.I vol. 2. No 37.*

*தொடர்பு: மா. மாரிராஜன் (marirajan016@gmail.com)*

## 3. இராயண்டபுரம் சிற்றூரில் இராசராசன் கல்வெட்டுகள்

*— துரை.சுந்தரம்*

***முன்னுரை:***

*ஆராய்ச்சியாளர்கள் வியப்படையும் வகையில், திருவண்ணாமலை மாவட்டம், தண்டராம்பட்டுப் பகுதியில், இராயண்டபுரம் என்னும் முகம் தெரியாக் குறுஞ்சிற்றூரில் சோழப்பேரரசன் முதலாம் இராசராசனின் கல்வெட்டுகள் பல கண்டறியப்பட்டுள்ள செய்தி "நக்கீரன்" 29-01-2019 இதழில் வெளியாகியுள்ளது. இச்செய்தியை முக நூல் பகுதியில் நேற்றுப் பார்க்க நேர்ந்தது. செய்தியும் உடன் கொடுக்கப்பட்டிருந்த ஒளிப்படங்களும் மிகவும் ஈர்த்தன. அது பற்றிய ஒரு பகிர்வு இங்கே;*

***குக்கிராமத்தில் இராஜராஜன் காலக் கல்வெட்டுகள்:***
***நக்கீரன் 29-01-2019 இதழில் வெளியான செய்தி***

> *திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவத்தின் சார்பில் மாவட்டத்தில் வாரந்தோறும் வரலாற்று ஆவணங்களைத் தேடி அதனை ஆவணப்படுத்தி வருகின்றனர். அதன்படி தண்டராம்பட்டு அடுத்த ராயண்டபுரம் கிராமத்தில் தென்பெண்ணையாற்றின் கரையில் உள்ள பழைய சிவன் கோயில் அருகில் அண்மையில் ஆய்வு மேற்கொண்டனர். ஆய்வின் போது இராயண்டபுரம் - தொண்டமானூர் செல்லும் வழியில் தென்பெண்ணையாற்றின் தென்கரையில் அமைந்துள்ள சிவன்கோயில் அருகில் உள்ள பாறையில் சோழர்காலத்தைச் சேர்ந்த 6 கல்வெட்டுகள் கண்டெடுக்கப்பட்டன. இக்கல்வெட்டுகளில் 3 சிதைந்த நிலையிலும் 3 நல்ல நிலையிலும் உள்ளன. இக்கல்வெட்டுகளைச் படித்த கல்வெட்டியல் அறிஞர் சு. இராஜகோபால் இக்கல்வெட்டுகள் சோழ அரசன் முதலாம் இராஜராஜனின் காலத்தில் வெட்டப்பட்டுள்ளது என்றும் இக்கல்வெட்டு இங்குள்ள சிவன் கோயிலுக்கு விளக்கெரிக்க ஆடுகளை தானம் செய்த விவரம் குறிப்பிடப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.*

*முதல் கல்வெட்டில் வாணகோப்பாடி பெண்ணைத் தென்கரையில் இராஜகண்டபுரத்தில் உள்ள கானநங்கை என்ற கொற்றவை தெய்வத்திற்கு ஒரு நந்தா விளக்கெரிக்க 96 ஆடுகளை மும்முடிச் சோழ வாணகோவராயன் என்ற தொங்கல மறவன் என்ற இப்பகுதியில் இருந்த சிற்றரசன் இக்கல்வெட்டை வெட்டியுள்ளான்.*

இரண்டாவது கல்வெட்டு இராஜராஜ சோழனின் 12 வது ஆட்சியாண்டில் வெட்டப்பட்டதாகும். இதில் இராஜகண்டபுரத்தைச் சேர்ந்த கோசக்கர எழுநூற்றுவர் என்ற வணிகக்குழு இவ்வூரில் உள்ள திருக்குராங்கோயில் என்ற சிவபெருமானுக்கு இரண்டு நந்தாவிளக்கு எரிக்க 192 ஆடுகள் தானமாக விடப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

மூன்றாவது கல்வெட்டில் இவ்வூர் மன்றாடிகளில் ஒருவரான அமத்தனின் மகன் காமன் என்பவர் இவ்வூரில் உள்ள திருக்குரால் ஆள்வார் கோயிலுக்கு விளக்கெரிக்க 30 ஆடுகள் கொடுத்த செய்தி வெட்டப்பட்டுள்ளது. மற்ற கல்வெட்டுகளில் சிதைந்து இருந்ததால் அதன் முழு விவரம் அறியஇயலவில்லை.

இக்கல்வெட்டுகளில் கிடைக்கும் செய்திகளிலிருந்து தற்போது ராயண்டபுரம் என்று அழைக்கப்படும் இவ்வூர் 1000 ஆண்டுகளுக்கு முன்பு இராஜகண்டபுரம் என்று வழங்கப்பட்டுள்ளது. மேலும் இவ்வூரில் உள்ள இக்கோயில் இறைவன் பெயர் இது வரை வெளியில் தெரியாமல் இருந்தது- தற்போது இக்கோயில் பெயர் திருக்குராங்கோயில் என்றும் இவ்வூரில் கானநங்கை என்ற கொற்றவை சிற்பம் இருந்தது பற்றியும் குறிப்புகள் உள்ளன. ஆனால் கொற்றவை சிற்பம் தற்போது கிடைக்கவில்லை. சோடச லிங்கம் என்ற பதினாறு பட்டை ஆவுடையாரும் சண்டிகேஸ்வரர் சிலையும் தற்போது கோயிலில் உள்ளது. பழைய கோயிலும் தற்போது இல்லை புதியதாக செய்த இரும்பு ஷீட் கொட்டகையில் இக்கோயில் சிலைகள் வைத்துள்ளார்கள்.

இக்கோயில் அக்காலத்தில் மிகவும் சிறப்படைந்த கோயிலாக இருந்திருக்க வேண்டும் ஏனெனில் இக்கோயிலுக்கு வழங்கப்பட்ட தானத்தில் மன்றாடி என்று வழங்கப்படுகின்ற இடையரும், கோச்சகர எழுநூற்றுவர் என்ற எண்ணை வணிகக்குழுவும், வாணகோவராயன் என்ற சிற்றரசனும் இக்கோயிலுக்கு தானம் அளித்துள்ளார்கள். மற்ற கல்வெட்டுகள் சிதைந்து போனால் பல வரலாற்றுத்தகவல்கள் தெரியாமல்போயின. இக்கோயில் அமைந்துள்ள பகுதியில் 3 கல்செக்குகள் காணப்படுகின்றன. இவை இக்கோயில் இறைவனுக்கு விளக்கெரிக்க எண்ணை வழங்குவதற்கு ஏற்படுத்தப்பட்டதாகும்.

இப்பகுதியில் பாயும் தென்பெண்ணையாற்றுக் கரையில் மிகப்பழங்காலந்தொட்டே மனிதநாகரிகம் வளர்ந்த சான்றுகள் உடையது. தொண்டைமானூரில் உள்ள பெருங்கற்கால நினைவுச்சின்னமும் பாறைக்கீறல்களும், இப்பகுதியில் கண்டெடுக்கப்பட்ட நடுகற்களும் கல்செக்குகளும் இப்பகுதியின் தொன்மையை பறைசாற்றுகின்றன. தொடர்ந்து இப்பகுதியில் ஆய்வு செய்தால் மேலும் பல வரலாற்றுச்சிறப்பு மிக்க தகவல்கள் கிடைக்கக்கூடும் என்று வரலாற்று ஆர்வலர்கள் தெரிவித்தனர்.

இந்த ஆய்வுக்கு வரலாற்று ஆய்வு மைய தலைவர் த.ம.பிரகாஷ், செயலாளர் ச. பாலமுருகன், பொருளாளர் ஸ்ரீதர், இணைச்செயலர் மதன்மோகன் போன்றோர் ஊர் பொதுமக்கள் ஆதரவுடன் நடத்தி கண்டறிந்துள்ளனர். அதனைத் தொடர்ந்து அப்பகுதியில் கூடுதல் ஆதாரங்கள் உள்ளனவா எனவும் ஆய்வு செய்ய முடிவு செய்துள்ளனர்.

***கல்வெட்டுப்படங்கள்- ஓர் ஆய்வு:***



முதல் படம்

***முதல் படம்:*** செய்திக் கட்டுரையில், இக்கல்வெட்டுப் படம் மூன்றாவதாகக் குறிப்பிடப்படுகிறது.

***கல்வெட்டின் பாடம்:***

*1 ஸ்வஸ்திஸ்ரீ கோவி(ரா)[ச]*
*2 (சே)க . பந்ம(ற்)கியாண்டு ..(றா) வது*
*3 கோப்பாடிப் பெண்ணைத் தென்கரை [ரா]*
*4 சகண்டபுரத்து இ[ரு]ந்து வாழு மன்றா(டி)*
*5 அமத்தன் மகன் காமன் திரு*
*6 ர்க்கு விள*
*7 இவை ப*

*குறிப்பு: சிவப்பு எழுத்துகள் கிரந்தம்.*

விளக்கம்: கல்வெட்டின் ஒளிப்படத்தில் முழுப் பாடமும் காணப்படவில்லை. எனவே, இறைவர் பெயர் திருக்குரால் ஆள்வார் பெயரையும், கொடை ஆடுகள் முப்பது என்னும் செய்தியையும் காண இயலவில்லை. 'இராசகேசரி' என்னும் தொடர் இக்கல்வெட்டில் பிழையாக எழுதப்பட்டுள்ளதுபோல் தோன்றுகிறது. காரணம், இரண்டாம் வரியில், முதல் இரண்டு எழுத்துகள் ''சேக'' என்பதாக உள்ளன. அரசனின் ஆட்சியாண்டைக் குறிப்பிடும் தொடரில், வழக்கமாக ''யாண்டு'' என்னும் சொல்லையடுத்து ஆட்சியாண்டு எண்களால் குறிக்கப்பெறும். இங்கும் அதே முறை கையாளப்பட்டுள்ளதா என உறுதியாகக் கூற இயலவில்லை. காரணம், ''றாவது'' என்று படிக்கும் படியாகக் கல்வெட்டுப் பாடம் அமைந்திருக்கிறது. நான்காவது வரியில், ''மன்றாடி'' என்னும் சொல்லில், ''றா'' எழுத்து வழக்கமாகக் கல்வெட்டுகளில் எழுதப்படுவதுபோல் அமையவில்லை. தற்காலம் நாம் எழுதுவது போல் ''ற'' குறில் எழுத்தை அடுத்துக் கால் சேர்த்ததுபோல் எழுதப்பட்டுள்ளமை வியப்பளிக்கிறது. இது மெய்யானதுதானா அல்லது தோற்ற மயக்கமா எனத் தெரியவில்லை. ஒப்பீட்டுக்காக இரண்டு எழுத்துகளையும் தனிப்படங்களில் கீழே காட்டியுள்ளேன்.



**றா** வது



மன்**றா**(டி)

ஊரின் பெயரான இராஜகண்டபுரம் மற்ற கல்வெட்டுகளில், "இராஜகண்டபுரம்" என்றே எழுதப்பட்டிருக்க, இக்கல்வெட்டில் வடமொழி எழுத்தான "ஜ" , சகரமாக எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. கொடையாளியான அமத்தன் மகன் காமன் இராசகண்டபுரத்தில் வாழ்கின்றவன் என்பதைக் குறிப்பிடும் "இருந்து வாழும் மன்றாடி" என்னும் தொடர், "இந்து வாழு மன்றாடி" என்று எழுதப்பட்டுள்ளது. "ரு' எழுத்து விடுபட்டமையைப் பிழை எனக்கொள்ளலாம். ஆனால், "வாழும்+மன்றாடி" என்பது, இலக்கண மரபில் மகர ஈறு கெட்டது எனக் கொள்ளலாம்.



இரண்டாம் படம்

**இரண்டாம் படம்:** செய்திக் கட்டுரையில், இக்கல்வெட்டுப் படம் முதலாவதாகக் குறிப்பிடப்படுகிறது.

***கல்வெட்டின் பாடம்:***

1 ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜராஜ
2 கேசரி பன்மற்கி யாண்டு 7 ஆவ
3 து வாணகோப்பாடிப் பெண்
4 ணைத் தென்கரை இராஜகண்ட பு
5 ரத்தில் காந நங்கைய்க்கு ஸ்ரீமன்மு
6 ம்முடிச் சோழ வாணகோவரை

7 யனாகிய தொங்கல மறவன் வை
8 ய்த்த திருநொந்தா விளக்கு ஒன்று
9 ஒன்றிநால் ஆடு … இது பந்மா
10 ஹேச்வர ரக்ஷை

குறிப்பு: சிவப்பு எழுத்துகள் கிரந்தம்.

விளக்கம்: செய்திக்கட்டுரையில், அரசனின் ஆட்சியாண்டு குறிப்பிடப்பெறவில்லை. ஆனால், இரண்டாம் வரியில், அரசனின் ஆட்சியாண்டு குறிப்பிடப்பெறும் பகுதியில், ஏழாம் ஆண்டைக் குறிக்கும் … எண் குறியீடு "எ" என்பது தெளிவாகப் புலப்படுகிறது. எனவே இக்கல்வெட்டின் காலம் கி.பி. 992 எனலாம். கொற்றவையைக் குறிக்கும் … "காந நங்கை" என்னும் சொல் கல்வெட்டுகளில் மிகுந்த புழக்கத்தில் இல்லை எனத்தெரிகிறது. "காடு கிழாள்" என்னும் சொல்லுக்கு ஒப்பான ஒரு சொல்லாக இதைக் கருதலாம். "நங்கை" என்னும் சொல் இக்கல்வெட்டில் சொல்லின் இறுதியில் கூடுதலாக "ய்" என்னும் மெய் சேர்ந்து "நங்கைய்" என எழுதப்பட்டுள்ளது. இந்த எழுத்து முறையைத் தமிழ் பிராமிக் கல்வெட்டுகளில் காணலாம். அவற்றில் (பிராமிக் கல்வெட்டுகளில்), "ப(ள்)ளிய்" என்றும், "கணிய்" என்றும் "அந்தைய்" என்றும் பல இடங்களில் வருவதைக் காணலாம். 5-ஆவது வரியின் இறுதியிலும், 6-ஆவது வரியின் தொடக்கத்திலும் சேர்ந்து "மும்முடிச்சோழன்" என்னும் சிறப்புப் பெயர் காணப்படுகிறது. இப்பெயருக்கு முன்னொட்டாக "ஸ்ரீமன்" என்னும் வடசொல் கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ளது வியப்புக்குரியது. ஏனெனில், 10-நூற்றாண்டில் இராசராசன் காலத்துக் கல்வெட்டுகளில் "ஸ்ரீமன்" என்னும் சொல் பயின்று வரக்காணோம். இச்சொல், விஜயநகரர், நாயக்கர் காலத்துப் பயன்பாடு. கொடையாகக் கொடுக்கப்பட்ட ஆடுகளின் எண்ணிக்கை 96 என்று செய்திக்கட்டுரை கூறுகிறது. எண்ணிக்கையைச் சுட்டும் தமிழ் எண்களுக்கான குறியீடு வழக்கமான குறியீடாகத் தோன்றவில்லை.

**மூன்றாம் படம்:** செய்திக் கட்டுரையில், இக்கல்வெட்டுப் படம் இரண்டாவதாகக் குறிப்பிடப்படுகிறது.

**கல்வெட்டின் பாடம்:**

1 ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூர்ச் சாலை கலம
2 றுத்த கோவிராஜராஜ கேசரி பந்மற்கு யா
3 ண்டு 12 ஆவது வாணகோப்பாடிப்
4 பெண்ணைய்த் தென்கரை இராஜக
5 ண்டபுரமுடைய கோசக்கர எழுநூற்று
6 வரோம் இவ்வூர்த் திருக்குராங்கோ
7 யில் மாஹாதேவர்க்கு வைய்த்த திரு
8 நொன்தா விளக்கு இரண்டு இரண்டிநால்
9 ஆடு … இது பந்மாஹேச்வர ர
10 க்ஷை



மூன்றாம் படம்

குறிப்பு: சிவப்பு எழுத்துகள் கிரந்தம்.

விளக்கம்: மற்ற கல்வெட்டுகளினின்றும் இக்கல்வெட்டு மாறுபட்டுள்ளது. இராசராசனின் மெய்க்கீர்த்தியில் காணப்பெறும் "காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளிய" நிகழ்வு இக்கல்வெட்டில் முதல் வரியில் அமைந்துள்ளது. இக்குறிப்பு செய்திக்கட்டுரையில் குறிக்கப்படவில்லை. ஆட்சியாண்டு 12 என்பது ஓரளவு புலப்படுகிறது. இக்கல்வெட்டிலும் சொல்லின் இறுதியில் "ய்" என்னும் மெய்யெழுத்து கூடுதலாக எழுதப்பட்டுள்ளது. "பெண்ணைய்" (வரி 4, "வைய்த்த" (வரி 7) ஆகியன சான்று. இக்கல்வெட்டில் கோயிலின் பெயர் திருக்குராங்கோயில் என உள்ளது. மேலே மற்றொரு கல்வெட்டில், செய்திக் கட்டுரைப்படி இறைவரின் பெயர் "திருக்குரால் ஆள்வார்" என்று குறிக்கப்பட்டுள்ளது. இந்த மாறுபாடு குறிப்பிடத்தக்கது. இறைவனைக் குறிக்கும் "மஹாதேவர்" என்னும் வடசொல் இங்குப் பிழையாக "மாஹதேவர்" என எழுதப்பட்டுள்ளது.




புவிவரைபட உதவி: மயிலை நூ.த.லோக சுந்தரம்

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 4. கொறுக்கை வீரட்டேசுவரர் கோயிலின் அடிமைகள் பற்றிய கல்வெட்டு

***— சேசாத்திரி சிறீதரன்***

***40 குடும்பத்து 105 அடிமைகள் பற்றிய கல்வெட்டு:***

*நாகை மாவட்டம், மயிலாடுதுறை வட்டம், கொறுக்கை என்னும் தேவாரப் பாடல் பெற்ற தலம். இங்குள்ள வீரட்டேசுவரர் கோயில் மகாமண்டபம் வடக்கு சுவர் கல்வெட்டு. இது மூன்றாம் இராசராசனின் 19 ஆவது ஆட்சி ஆண்டில் (கி.பி. 1235) வெட்டிய கல்வெட்டு என்பது எழுத்தமைதியால் கணிக்கப்பட்டுள்ளது.*

கொறுக்கை வீரட்டேசுவரர் கோயில்







*இதில் மக்கள் குடும்பம் குடும்பமாக அடிமைகளாகக் கோவிலுக்கும் தனி ஆள்களுக்கும் விற்றுக் கொண்ட செய்தி உள்ளது. இவர்களுக்குள்ள உறவுமுறையும் குறிக்கப்பட்டுள்ளது. இவர்கள் கடன்வாங்கித் திருப்பி செலுத்த முடியாமல் ஓட்டாண்டி (திவால்) ஆகி அடிமைசெய்வாராக ஆனார்களா? அல்லது சாதி நீக்கி ஊராரால் ஒதுக்கப்பட்டு அடிமையாக வந்தார்களா? அல்லது ஏதேனும் நேர்த்திக்கடன் செலுத்த அடிமை ஆனார்களா? அல்லது கோவில் சலுகை ஒன்றைப் பெற அடிமை ஆனார்களா? இப்படி எந்த முடிவும் கொள்வதற்கு இடம் தரும்படியாக கல்வெட்டில் எந்த ஒரு துப்பும் இல்லை. சிலர் இறைவனுக்கு அடிமையாய் தாமே ஒப்புக்கொண்டவர், விலைக்கு விற்றுக் கொண்ட அடிமைகள் சிலர், இன்னும் சிலர் விலைக்கு வாங்கி தானம் கொடுக்கப்பட்ட அடிமைகள்.*

*இதற்கும் முற்பட்ட இரண்டாம் இராசாதிராசன், மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் அடிமையானோரும் இக்கல்வெட்டின் பிற்பகுதியில் குறிக்கப்படுகின்றனர். விந்தையாக இந்த அடிமைகளின் பெயர்களை உற்று நோக்கும் போதும்; இதில்*

*குறிக்கப்பட்டுள்ள அகமுடையாள் என்ற பிராமணர் வீட்டில் புழங்கும் சொல்லையும் நோக்க இந்த அடிமைகள் பலரும் பிராமண குடும்பத்தவர் என்று தெரிகின்றது. சில அரசுகுடியோர் பெயரும் இடம்பெறுகின்றது. இணைப்பில் உள்ள 2/1994 கல்வெட்டின் இறுதியில் சில பிராமணர்கள் கையொப்பம் இட்டுள்ளனர். அதைக் கொண்டு இவர்கள் பிராமணர் என முடிவுகட்டப் பட்டது. கல்வெட்டு பாடத்தைப் படிக்கும் முன் அதன் கீழே கொடுக்கப்பட்டுள்ள வரிக்குவரி விளக்கத்தைப் படித்தால் இதன் பொருளை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம். பின்பு கல்வெட்டு பாடத்தைப் படித்தால் எளிதாகப் பொருள் புரியும்.*

***கல்வெட்டு பாடம்:***

*1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஇராஜராஜ தேவற்கு யாண்டு பத்தொன்பதாவது விருதராஜ பயங்கர [வளநாட்டுக்] குறுக்கை நாட்டுத் திருக்குறுக்கை உடையார் திருவீரட்டானமு[டை]யார் மூலபிருத்தியரான சண்டேசுர தேவ[ற்]கு [திருவாய்மொழிந்]தருளின திருமுகப்படி பெற்ற அடிமைக்கும் பலர் பக்கலும் விலைகொண்ட அடிமைக்கும் தானத்தால் பெற்ற அடிமைக்கும் கல்வெட்டினபடி திருமுகப்படி ஆழ்வாரடிமையாய் பெற்ற ஆச்சபிடாரன், இவன் அகமுடையாள் சோழி. இவன் மகன் எழுவடியான் இவந் தம்பி தேவன் இவன் தம்பி திருவெண்காடு டையான் இவந் தம்பி வள்*

*2. ளல். இந்த ஆச்சபிடாரன் மகள் ஆளுடையாள். இவள் மகன் திருவெண் காடுடையாந் இவந் தம்பி மணவாளன். இவந் தங்கை ஆண்ட நங்கை இவள் தங்கை செல்வம். வீரவிநோத வேளான் இவந் தம்பி சிங்க பிரான். இவன் தங்கை மண்டையாண்டி அழ[கி]யாந் மகந் வ _ _ _ [த]ங்கை செல்வம். இவள் மகன் பெருமாள். இவன் தங்கை ஆண்டாள். சிவசரணத்தின் அகமுடையாள் மண்டை இவள் மகந் பெருங்காடந் இவந் தம்பி வேங்கடம் இவந்தம்பி வள்ளல் இவந் தங்கை பெற்றாள். இவள் _ _ _ உடையாந் இவன் தங்கை பெரியாள். இந்தப் பெருங்காடந் சிறிய தாய் ஆழ்வா நங்கை. இவள் மகந் வடையாந் இவந்தம்பி பெருமாள். இவந் தங்கை பெரியாள். இவள் மகள் ஆண்டாள் இ*

*3. ப்பெரியான் தங்கை செல்வம். இவள் ம[க்]கள் உமையாண்டாள் சீவேதவனப் பெருமாள் நங்கை. இச்செல்வத்தின் தங்கை பொற்சாத்தி. தாழஞ்சேரிக் கம்பந் மருமகன் திருவீரட்டானமுடையான். கோவிந்தன் ஆச்சபிடாரன் உடப்பிறந்தாள் நாராயணி. இவள் மகள் செல்வம். இவள் மகந் திருவெண் காடுடையாந். இவந்தம்பி செல்வந் இவந்தம்[பி உய்]யவந்தாந் இவந் தம்பி இருள்நீக்கி. கவிணிந உத்தம சோழந் சூரிய தேவர் தாநம் பண்ணி[னபே]ர், ஆடவலாந் கொத்தில் செல்வி. இவள் மக்கள் இவள் தங்கை பெற்றாள் கொத்து. இவள் தங்கை திருச் சிற்றம்பல முடையாள். சடையன் அகமுடையாள் செல்லகொத்து. வெண்ணைக் கூத்தந் அகமுடையாள் பெருங்காடி. மகந் கோவிஞ்சி கொத்து இவள் தங்[கை] மந்றமுடையாள் கொத்து. இவ*

*4. ள் தம்பி திருச்சிற்றம்பலமுடையாந். நாற்பத்தெண்ணாயிரம் பிச்சந் அகமுடையாள் நங்கை கொத்து. சந்திரந் அ[க]முடையாள் திருவிந் கொத்து. கீர்த்தி நாராயணஞ் சிங்கப்*

*பிராந் பக்கல் தாநத்தால் பெற்ற சந்திரசேகர திருவெண்காட்டு நங்கை. இவள் மகந் சோறுடையான் இவன் தங்கை பெற்றாள். கவிணியன் சூரியதேவந் தெக்ஷணாமூர்த்தி பக்கல் விலை கொண்டுடைய பெருங்காடனந் கெங்கை இவன் மகந் திருச்சிற்றம்பல முடையாந் பெருங்காடி பாரத்துவாஜி. தில்லை நாகந் பெரியநம்பி பக்கல் கொண்டுடைய வீரட்டந் சொறி. இவள் மகந் பிடாரந் தவுமியந் வெண்காடு தேவந். சோமாசி _ _ _ மா[றனும்], கண்ணுவநந் கருமாணிக்கம் சீரிளங்*

*5. கோ பட்டநும் பக்கல் கொண்ட வீரட்டந் பெற்றாள். கவிணியந் சூரிய தேவந் திருச்சிற்றம்பல முடையாந் பக்கல் விலை கொண்ட பெருங்காடந் சோறுடையான். தவுமியந் வெண்காடு தேவந், திருச்சிற்றம்பல முடையாந் பட்டசோமாசியார் பக்கல் கொண்ட தத்தபட்டன் திரு. இவள் மகந் அற்ப சந்தோஷி வீரட்டந் இவந் தங்கை ஆண்டமை. பிரமதேச ராஜராஜச் சருப்பேதி மங்கலத்து பாரத்துவாஜி திருவிக்கிரமனும், இவந் தம்பி உ[மா சகி]தந் திருச்சிற்றம்பல முடையானும் பக்கல் கொண்டுடைய கூத்தாடி சூற்றிய தேவி இவள் மகள் மண்டையாண்டி. இவள் தம்பி கண்ணந் இவள் தங்கை*

*6. பெற்றாள். இவந்தம்பி இராம தேவந். இவந் தங்கை உமையாண்டாள் இவள் தம்பி திருநட்டப் பெருமான். பெற்ற கோவில் சோழ விழுப்பரையன் பக்கல் கொண்ட கேசவந் சீ _ _ _ _. இவன் மகந் பெற்றாந் கேசவந் வேதம் உடைய பிரான். இவன் தங்கை அவையம் புக்காள் இ _ _ _ _ கள் கூத்தாடி நங்கை. இவன் தங்கை _ _ _ க்குடுத்தி. திருமங்கலத்து அரயந் அரயந் நாகந் பிள்ளையாழ்வாந்நாந குலோத்துங்க சோழக் கெணியாத ராயர் பக்கல் விலை கொண்ட அரயந் உடையாண்டி. இவள் மகள் அம்மச்சி. நித்தந் திருவடியும், நித்தந் சிங்கனூரானும் பக்கல் கோயில் கொண்டு இவன் பக்க*

*7. ல் பெற்ற நித்தந் னம்பி. இவந் தம்பி சிங்கப்பிரான். தவுமியந் வெண்காடு தேவந், ஆதித்த தேவந் பக்கல் கொண்ட வீரட்டந் சோறுடையாள். இவள் மகள் ளாசு பாரத்துவாசி. இரவிதாஸந் சக்கரபாணி, பிராம்மணி வாழ்வி தாட்சானி பக்கல் கொண்ட பிராந்தக தேயந் ஸ்ரீகிருஷ்ணந். திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ஒன்பதாவது கவினிய நாகனூர் ஆதி சண்டேசுர தேவர்கு விற்ற அடியாள் ஆவாள். இவ்வூர் கவுணியன் சூரிய தேவன் திருச் சிற்றம்பல முடையான் பக்கல் விலை கொண்டுடையநாய் இத்தேவர் சிவநாமத்து இக்கவிணியன் நாகனூரன் சூற்றி பெருங்காடி பின்பு இவன் பெற்ற மகள் உ*

*8. டையள். இவன் தங்கை பெரியாள். இவள் தம்பி சூற்றி. இவன் தங்கை சோறாண்டி. இவன் தம்பி தியம்பகன்.இ பெண்களில் பெரியாள் மகன் சூற்றி. இளவாண்டை நாளில் வரகூரான ஜயஸிம்ஹ குலகாலச் சருப்பேதி மங்கலத்து காஸ்யபந் தவதேவிசந் _ _ _ _ பட்டநாந அருமாரி நம்பி ஆதிசணேடேசுவர தேவற்க்கு விற்றுக் குடுத்த அடிமையாளாவாள் பொறப்பா _ _ _ யும், இவள் மகள் உய்யவந்தாளும். இவள் தங்கை செல்வமும் [கல்வெட்டு எண் 2] திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜாயிராஜ தேவற்கு*

*யாண்டு ஏழாவது நாளில் விருதராஜ பயங்கர வளநாட்டுக் குறுக்கை நாட்டு ஆற்றூராந ராஜநாராயணச் சருப்பேதி மங்கலத்து திருபுவன மாதேவிச்சேரி குரவிசிரின வீரட்டநீ*

*9. பிராமணி உய்ய வந்தாள் சாநி கோமுத்தந் மகன் குரவிநாராயண பட்டநை முதுகண்ணாகக் கொண்டு இவ்வுய்யவந்தாள் [சா]நி பக்கல் காசு 60 காசு அறுபதுக்கு விலைகொண்ட நங்கை மகள் அம்மையாண்டாள். இவள் மகள் பெரியாண்டாள் இவள் தங்கை நித்த[கல்யா]ணப் பிச்சந் _ _ _ _ இவள் தங்கை குளுந்தாள், இவ[ள்] தங்கை னங்கை. திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க தேவற்கு யாண்டு பத்தாவது செயங்கொண்டு சோழ வளநாட்டு விளைநாட்டு விளைநகரான நித்த விநோதச் சருப்பேதி மங்கலத்துப் பாலாசிரி[ய]ந் இளைய சங்[கர]ச் சிவனும், இவந் பிந்நோ நாத்தமையன் மகந் சிவந் சங்கரநும் பக்கல் பத்தொந்பது காசுக்கு விலைகொண்ட [அடிமை] அரை*

*10. யா நாகமுடையாள். இவள் மகள் சோறுடையாள் செல்வி. இவள் மகள் சோறுடையாள் சீதேவி நங்கை. இவள் மகள் சோறுடையாள் ஆழ்வாந் நங் _ _ _ _ ள் மகன் சோறுடையான் பெருங்காடன். இவன் மகன் சோறுடையாந் புற்றிடங் கொண்டான்.*

*ஆழ்வாரடிமை – இறைஅடிமை; அகமுடையாள் – மனைவி (பிராமணர் வழக்கு); பட்டன் – சமஸ்கிருத அறிஞனான வேத பிராமணன்; வேளான் – அரசன், அரசமரபினர்; பிடாரன் – ஆசிரியர், மருத்துவர்; பக்கல் – சார்பாக, on behalf; சாநி – பிராமணப் பெண் பெயர்ப் பின்னொட்டு; முதுகண் – supervisor, caretaker, கங்காணி;*

*விளக்கம்: 1 - 2 வரிக்கு > பிராமணன் ஆச்சபிடாரன் குடும்பம் அவன் மகள் குடும்பம் என இரு குடும்பத்தில் பேரன், பேத்திகள் உட்பட 7 ஆடவர், 4 மகளிர் இறைவனுக்கு தம்மை அடிமை ஆக்கினர். வீரவிநோத வேளான் அரசகுடியினர் ஆவார். இவரது பேரன், பேத்திகள் உட்பட இரு குடும்பத்தில் 4 ஆடவர், 3 பெண்கள் தம்மை இறைவனுக்கு அடிமை ஆக்கினர். பிராமணர் சிவசரணத்தின் பேரன் பேத்திகள் உள்ளிட்ட 5 குடும்பத்து உறவினர் 6 ஆடவர், 9 மகளிர் தம்மை இறைவனுக்கு அடிமை ஆக்கினர்.*

*விளக்கம்: 3 – 4 வரிக்கு > 1 மருமகன். பிராமணர் ஆச்சபிடாரன் உடன்பிறந்தாள் பேரன், பேத்தி உட்பட 3 குடும்பத்து 5 ஆடவர் 2 மகளிர் தம்மை இறைவனுக்கு அடிமை ஆக்கினர். சூரியதேவர் தானமாகக் கொடுத்த அடிமைகள், கொத்தில் செல்வி குடும்பத்தில் 3 மகளிர். சடையன் மனைவி ஒருத்தி. வெண்ணைக் கூத்தன் 2 குடும்பத்தில் 2 ஆடவர், 2 மகளிர். நாற்பத்தெண்ணாயிரம் பிச்சன் மனைவி குடும்பத்தில் இருவர். சந்திரன் குடும்பத்தில் மனைவி ஒருத்தி. சிங்கப் பிராந் சார்பாக ஒரு குடும்பத்து 1 ஆண், 2 மகளிர் தானமாகத் தரப்பட்டனர். தக்ஷிணாமூர்த்தி சார்பாக விலை கொடுத்துப் பெற்ற ஒரு குடும்பத்துப் பிராமண அடிமைகள் 2 ஆடவர். பெரியநம்பி சார்பாக விலைக்குப் பெற்ற அடிமை ஒரு குடும்பத்து 1 ஆண், 1 பெண்.*



கல்வெட்டு 2/1994

எழுத்து இப்படிக்குக் கவிணியந் நக்கநாதநான பெரியகோயில் [நம்பி] எழுத்து இப்படிக்குத்தொவுமியந் சீகாரி மாறன் சிங்கப்பிராந் பட்டன் எழுத்து இப்படிக்கு இவை தௌவுமியந் கருமாணிக்கந் திருவேங்கட பட்டந் எழுத்து இப்படிக்குப் பாரதாயந் சங்கரநாராயணந் எழுத்து இப்படிக்கிவை திருப்பேற் சீராம பட்டந் எழுத்து இப்படிக்கு கிளிநலூர்ப் பரமேஶ்வர

6. ட்டந் எழுத்து இப்படியறிவேந் பாரத்துவாசந் பெரியநம்பி பட்டந் எழுத்து இப்படியறி[வேந்] வேந்தௌமயந் வெண்காடு தேவந் திருநீல கண்டந் எழுத்து [இப்]படிக்கு தவுமியந் வெண்காடு தேவந் கருமாணிக்க பட்டந் எழுத்து இப்படிக்கு சிவமான தேவந் எழுத்து இப்படிக்கு பாரதாயந் குமார மிகைய்யுகிரா[ளி] எழுத்து இப்படியறிவேந் தவுமியந் சிகாரிமாறன் திருநீலகண்டபட்டந் எழுத்து இப்படிக்குப் பாரதாயந் சிங்கப்பிராந் சீரங்கநாத[ந்] எழுத்து இப்படி அறிவேந் பாரதாயந் சிங்கநுய்ய வந்தாந் பட்டந் எழுத்து இப்படிக்குப் பாரதாயந் சீராமந் கையுகிராளி பட்டந் அக்கி சித்தந் எழுத்து இப்படியறிவேந் தவுமிய[ந் திரு] வெண்காடு தேவந் நாராயண பட்டந் எழுத்து இப்படி யறிவேந் தவுமியந் சிகாரி மாறந்காடு சிறுக்க பட்டந் எழுத்து இப்படிக்கு தவுமியந்

7. கருமாணிக்கந் கைய்யுகிரான் பட்டந் எழுத்து இப்படிக்குத் தவுமியந் வெண்காடு தேவந் ஆதித்த தேவந் எழுத்து இப்படி அறிவேந் சேஞலூர் புருசோத்தம பட்டந் எழுத்து இப்படிக்கு கண்ணுவந் கருமாணிக்கந் சீரிளங்கோவெந் எழுத்து இப்படிக்கு பாரத்துவாசி கோவிந்தந் சுப்பிரமணி(ண)யநேந் எழுத்து இப்படிக்கு கோவிந்த பட்டந் எழுத்து இப்படிக்கு சுப்பிரமணியன் சம..யபிரியன் எழுத்து இப்படிக்கு இவை காஶ்யபந் கட்ட நாகந் இவை எந்தெழுத்து இப்படிக்கு திருக்கடலூர் ஸோமஷேந் பாண்டந்..தந் எழுத்து இப்படியறிவேன் கவிணியந் .... எழுத்து இப்படியறிவேன் காஶ்யபந் திருச்சி

8. ற்றம்பலமுடையாந் அம்பலத்தடிகள் எழுத்து இப்படிக்கு கவிணியந் நாகன் கோவிந்த நம்பி எழுத்து இப்படிக்கு கவிணியந் தியம்பகன் திருவெண்காடு பட்டன் எழுத்து இப்படி அறிவேன் சீராமபட்ட ஸோமயாக யார்[1] மகன் சங்க[ர*] நாராயண பட்டன் எழுத்து இப்படிக்கு தவுமயன் சூரிய தேவன் திருச்சிற்றம்பலமுடையான் எழுத்து இப்படிக்கு இவை திருப்பேர் உமைநம்பி எழுத்து இப்படிக்கு இவை திருக்கடலூர் பாலாசிரியன் ஆன நதவார் கழலேன் எழுத்து இப்படிக்கு இவை

208

*விளக்கம்: 5 -6 வரிகள் > சோமாசி & கண்ணுவந் ஆகிய இருவர் சார்பாக விலைக்கு வாங்கிய ஒரு குடும்பத்து அடிமை 1 ஆண். கவிணியன் விலையால் கொண்ட ஒரு குடும்பத்து அடிமை 1 ஆண். பட்டசோமாசியார் சார்பாக விலைக்குப் பெற்ற ஒரு குடும்பத்துப் பிராமண அடிமைகள் 2 ஆடவர், 1 மகளிர். பிராமணர் திருவிக்கிரமன், தம்பி உமாசகிதன் இருவர் சார்பில் ஒரு குடும்பத்து 4 ஆடவர், 3 மகளிர் விலைக்கு வாங்கப்பட்டனர். அரசகுடி விழுப்பரையன் விலையாகக் கொண்ட 2 குடும்பத்து அடிமைகள் 3 ஆடவர், 2 மகளிர். அரசகுடி அரயன் பிள்ளையாழ்வான் ஒரு அரசகுடும்பத்து அடிமைகளான 2 பெண்ணை விலைக்கு வாங்கினான்.*

விளக்கம்: 7 – 8 வரிகள் > நித்தன்திருவடி & சிங்கனூரன் இந்த இருவர் சார்பாக கோயில் பெற்ற அடிமைகள் ஒரு குடும்பத்து 2 ஆண்கள். தவுமியன் & ஆதித்தன் இந்த இருவர் சார்பாக பெற்ற அடிமை ஒரு பிராமண குடும்பத்து 2 பெண்கள். சக்கரபாணி & பிராம்மணி என்ற பிராமணர் சார்பாக 1 குடும்பத்து அடிமை 1 ஆண். இதற்கு முன்பு மூன்றாம் குலோத்துங்கன் 9 ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1187) விலைக்கு வாங்கி இறைவனுக்கு உரிமையாக்கி விடப் பட்டவர் குறிக்கப்படுகின்றனர். நாகனூர் கவுணியன் ஒரு குடும்பத்து ஒரு பெண்ணை இறைவனுக்காக விற்றான். சூரியதேவன் சார்பாக பெற்ற அடிமை 2 குடும்பத்து 5 ஆடவர், 2 மகளிர் ஆவர். அருமாரி நம்பி இறைவனுக்கு விற்றுக் கொடுத்த அடிமை 1 குடும்பத்து 3 மகளிர் ஆவர்.

விளக்கம்: 9 – 10 வரிகள் > இரண்டாம் இராசராசனின் 7 ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1153) பிராமணி சாநி சார்பாக கோவிலுக்குத் தானமளிக்க அவள் மகன் மேற்பார்வையில் 1 குடும்பத்து 5 மகளிர் 60 காசுக்கு வாங்கப்பட்டனர். மூன்றாம் குலோத்துங்கன் 10 ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1188) பாலாசிரியன் & சங்கரசிவன் சார்பில் 19 காசுக்கு 3 குடும்பத்து 2 ஆடவர், 3 மகளிர் விலைக்கு வாங்கப்பட்டு கோவிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டனர்.

ஆக நான்கு வெவ்வேறு காலங்களில் மூன்று வேந்தர் ஆட்சியில் 40 குடும்பத்து 48 ஆடவர், 57 மகளிர் என 105 அடிமைகள் கோவிலுக்கு தம்மைத் தாமே தானமாகத் தந்தும், பிறரால் பணம் கொடுத்து வாங்கப் பெற்று கோவிலுக்குத் தானமாகத் தரப்பட்டவர்களும் ஆவர். இந்த அடிமைத்தனம் ஏதோ ஒரு நம்பிக்கையின் காரணமாக நடந்தேறியதாகவே தோன்றுகிறது. எண்ணிப் பார்க்கையில் சிறுபிள்ளை விளையாட்டாகவே உணரமுடிகிறது. ஆனால் பலரும் இக்கல்வெட்டுகளைப் பலவராகப் புரிந்துகொண்டு திட்டிதீர்த்து வெறுப்பை உமிழ்கிறார்கள்.

பார்வை நூல்: தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள், பக். 202-205, 2004, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீடு, எழும்பூர், சென்னை – 8.

தொடர்பு: சேசாத்திரி சிறீதரன் - Seshadri Sridharan (sseshadri69@gmail.com)

# 5. கடம்பூர் பகுதியில் தொல்லியல் தடயங்கள்

***— துரை.சுந்தரம்***

***முன்னுரை:***

*சத்தியமங்கலத்தைச் சேர்ந்த தர்மராஜ் அவர்கள் ஒரு நாளிதழ் செய்தியாளர். செய்திகளுக்காக ஆங்காங்கே பயணம் செய்துகொண்டிருப்பவர். அவர் புதிய இடங்கள், புதிய காட்சிகள் என்று தேடும் பயணங்களில் சத்தியைச் சுற்றியுள்ள மலைக்கிராமங்களுக்கும் அவ்வப்போது பயணம் மேற்கொள்வது வழக்கம். அது போன்ற ஒரு பயணத்தில், சத்தியமங்கலம் பகுதியில் உள்ள கடம்பூர் மலைக்கிராமத்தில் நடுகற்கள் சிலவற்றைப் பார்த்ததாகவும், வாய்ப்பிருந்தால் வந்து பாருங்கள் எனவும் கூறியிருந்தார். சத்திப்பகுதியில் ஏற்கெனவே அறிமுகமாயிருந்த நண்பர் இராமசாமி அவர்களும் கடம்பூர் செல்ல ஆர்வம் காட்டியிருந்தார். நாங்கள் மூவரும் முன்னரே, 2016-ஆம் ஆண்டு சில நண்பர்களுடன், நீரில் மூழ்கிய டணாயக்கன் கோட்டைக் கோயிலை – நீர் வற்றியதால் - வெளியே தெரிந்த நிலையில் சென்று பார்த்திருக்கிறோம். தற்போது நாங்கள் மூவரும் இணைந்து கடம்பூர் செல்ல முடிவாயிற்று.*

***மலைச் சாலையில் பயணம்:***

*10-12-2018 அன்று பயணம் தொடங்கியது. கோவையிலிருந்து புறப்பட்டு இரண்டு மணி நேரப்பயணத்தில் சத்தி-அத்தாணி சாலையில் அமைந்த, ”நால் ரோடு” என்று மக்கள் பேச்சு வழக்கில் குறிப்பிடும் சாலைக் கூடலை அடைந்தேன். தமிழகத்தின் நீண்ட சாலைகளில் ஆங்காங்கே நான்கு சாலைகள் இணையும் (அல்லது பிரியும்) இடங்கள் உண்டு. சாலைகள் இணைவதால் கூட்டுச் சாலை என அழைப்பது பொருத்தமாயிருக்கும். ஆனால், நாட்டுப்புற மக்களும் தற்காலத்தே சாலை, வழி ஆகிய தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தாது “ரோடு” என்னும் ஆங்கிலச் சொல்லையே பயன்படுத்தப் பழகிவிட்டனர். எனவே, கூட்டுச் சாலை, மக்கள் வழக்கில் நால் ரோடு என்றும் சிற்சில ஊர்களில் கூட்டு ரோடு என்றும் அழைக்கப்படுகிறது. காலை பத்து மணி அளவில் நான் கூட்டுச் சாலையை அடையும்போது நண்பர்கள் இருவரும் அங்கு வந்திருந்தனர்.*

*பயணம் மகிழுந்தில். கூட்டுச் சாலையில் ஒரு சாலை கடம்பூர் நோக்கிச் செல்கிறது. கடம்பூர், சத்தியை அடுத்துள்ள மலைத்தொடரில் அமைந்த ஒரு கிராமம். எனவே, கூட்டுச் சாலையிலிருந்து சற்றுத் தொலைவுப் பயணத்தில் மலைச்சாலை தொடங்கியது. காலை பத்து மணி ஆகியிருந்த போதும் அன்று வெயில் இல்லை. மெலிதான பனி மூட்டம், வளைவான சாலை, ஒரு பக்கம் - மலைப்பாறைகளை உடைத்துச் சாலை அமைத்திருந்ததால் - பாறைச்சுவர், மறுபக்கம் மரங்கள் அடர்ந்த மலைச் சரிவு என மலைப்பாதைகளுக்கே உரிய காட்சி அழகுகள். குளிர்ந்த காற்று.*

*சமவெளியில் நகரங்களுக்கே உரிய கட்டிடக்குவியல்கள், மரங்களை இழந்த மொட்டைச் சாலைகள், சாலைகளில் ஊரும் ஊர்திகளின் குவியல்கள், அவை வெளிப்படுத்தும் மாசுப்புகை, நடந்து செல்லும் மனிதர் வானத்தை அண்ணாந்து ஒரு முறையேனும் பார்க்க இயலாதவாறு நம் பார்வையை எதிரில் சாலையில் நிலை குத்தவைக்கும் சாலைப் போக்குவரத்தின் நெருக்கடி எனப் பலவும் நம்மைச் சூழ்ந்து நடத்தும் தாக்குதல்களிலிருந்து விடுபட்டு எங்கோ புதியதொரு உலகுக்கு வந்திருக்கிறோம் என்ற உணர்வு அந்த மலைச்சாலைப் பயணத்தில் ஏற்பட்டது.*

மலைச்சாலைப் பயணக்காட்சிகள் சில



***மல்லியம்மன் கோயில்:***

*கூட்டுச்சாலையிலிருந்து அரை மணிப் பயணத்தில் நாங்கள் சேர்ந்த இடம் மல்லியம்மன் கோயில். சாலையின் மலைச் சுவர்ப்பக்கம் பாறைச் சரிவில் கூரையுடன் கூடிய ஒரு சிறிய அறைதான் மல்லியம்மன் கோயில். கோயிலை ஒட்டிப் பாறைக்கற்களால் அமைந்த, மழைக்காலங்களில் மட்டுமே அருவியாகத் தோற்றமளிக்கும் நீர் வழிந்தோடும் பாதை. அண்மையில் பெய்த பெருமழையின்போது காட்டருவி நீர், கோயிலை மூடியவண்ணம் பாய்ந்தோடியுள்ளது என்றார் நாளிதழ் நண்பர்.*

மல்லியம்மன் கோயில்



மல்லியம்மன்



மல்லியம்மன் கோயிலுக்கு எதிரே



*மேலே தொடரவிருக்கும் மலைச் சாலைப்பயணத்துக்கு முன்னர் இந்த அம்மனை வணங்கியே ஊர்திகள் செல்வது வழக்கம். ஒவ்வொரு மலைச் சாலையிலும் இவ்வகையான சிறு தெய்வங்களின் கோயில்களைக் காணலாம். மல்லியம்மன், காடுறை தாய்த் தெய்வத்தின் ஒரு வடிவம். நாட்டார் வழக்கிலும், பழங்குடிகள், காடுவாழ் குடிகள் ஆகியோர் மரபிலும் வந்த வழிபாட்டுத் தொடரெச்சங்களே இது போன்ற சிறு தெய்வக் கோயில்கள். மக்கள் நம்பிக்கையில் இத்தெய்வங்கள் காவல் தெய்வங்கள்; இத்தெய்வங்களின் மீது பல்வேறு புனைவுகள் சாத்தப்படுகின்றன. கோபால் என்னும் பெயருடைய கோயில் பூசையாளர் – ஓர் இளைஞர் - மல்லியம்மனைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார். இந்த மலைத்தொடரில் மேலே இரண்டு மலை அடுக்குகளின் உச்சியைக் கடந்து சென்றால் மல்லியம்மன் துர்கம் என்னும் ஓரிடம் உள்ளது. அங்கு இயற்கையின் வியப்புக்குரிய பல கூறுகளும், காட்சிகளும் உள்ளனவாம். குகைகள், சுருங்கைகள் மட்டுமல்லாது, தொல்லியல் தொடர்பான வேறு சிலவும் இருப்பதாக அவர் கூறியது மிகுந்த வியப்பை அளித்தது. ஒரு வேளை, கற்கால மக்களின் வாழ்விடங்களும், பாறை ஓவியங்களும் அங்கிருக்கக் கூடும். ஆங்கிலேயர் காலத்துத் தடயங்களும் அங்கிருப்பதாக அவர் கூறினார்.*

*கோயிலுக்கு எதிரில் ஆங்காங்கே குரங்குகள். பயணம் செல்வோர் அவற்றுக்குப் பல தின்பண்டங்களைக் கொடுத்துப் பழக்கியதால், அவை எதிர்பார்ப்போடு ஊர்திகளின் அருகில் வர முயல்வதைக் கண்டோம்.*

***கடம்பூர்:***

*மேற்கொண்டு இருபது நிமிடப்பயணத்தில் கடம்பூர் மலைக்கிராமத்தை அடைந்தோம். கடம்பூரைச் சுற்றிலும் பல கிராமங்கள் உள்ளன. பசவணபுரம், மாக்கம்பாளையம், குன்றி, குத்தியாலத்தூர் ஆகியன ஒரு சில ஊர்ப்பெயர்கள். இவை அனைத்தும், கடம்பூர் உட்படக் குத்தியாலத்தூர் ஊராட்சியைச் சேர்ந்தவை. கடம்பூரில், அரசு மருத்துவ மனை, வனச் சரக அலுவலகம் ஆகியவை உள்ளன. கடம்பூரை அடைந்ததும் பேருந்து நிலையத்தைக் கடந்து, கடைத்தெரு போல விளங்கிய சாலையில் எங்களை இறங்கச் சொல்லிய நாளிதழ் நண்பர், அருகே ஒரு நடுகல் சிற்பம் உள்ளதாகக் கூறினார்.*

***கடம்பூர் புலி குத்தி நடுகல்:***

*நண்பர் காட்டிய இடத்தில் சாலையிலிருந்து மேட்டுப்பாங்காக ஒரு மண்பாதை உயர்ந்து சென்றது. அதில் சற்று ஏறிச்சென்றதும், புதரும் செடியுமாய் இருந்த ஓரிடம். தென்னை மரம் ஒன்றை ஒட்டிக் கற்களை அடுக்கிச் சிறிய மேடை போலாக்கி வைத்திருந்தனர். அந்த இடத்தில் நிறுத்தப்பட்ட ஒரு பலகைக் கல் காணப்பட்டது. நெருங்கிச் சென்று, கல்லைச் சுற்றிலும் இருந்த சிறு செடிகளைக் களைந்தோம். அது ஒரு மூன்றடுக்கு கொண்ட நடுகல். புலிகுத்திக்கல் என்று கொங்குப்பகுதியில் அழைக்கப்படும் வீரக்கல். பெரும்பாலும், ஒற்றைக்கல் முழுதுமே புலியை வீரன் குத்துவது போன்ற சிற்பக்காட்சி இருக்கும். சிற்சில இடங்களில், பலகைக் கல்லானது மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவிலும் ஒவ்வொரு புடைப்புச்*

சிற்பமாக மூன்று சிற்பங்களைக் கொண்டிருக்கும். இவ்வகை நடுகற்கள், அடுக்கு நிலை நடுகல் என்றழைக்கப்படும். அருகில் சென்று ஒளிப்படம் எடுத்துக்கொண்டோம்.

கடம்பூர் புலி குத்தி நடுகல் - சில தோற்றங்கள்









முதல் அடுக்கில், வீரன் ஒருவன் தன் வலக்கையால் நீண்ட வாளினைப் புலியின் நெஞ்சுப்பகுதியில் பாய்ச்சியவாறு காணப்படுகிறான். அவனுடைய இடக்கை, புலியின் வாய்ப்பகுதியில் காணப்படுகிறது. பெரும்பாலான புலிகுத்திக் கற்களில் காணப்படும் அமைப்பே இது. இடக்கையில் உள்ள குறுவாளினைப் புலியின் வாய்ப்பகுதியில் செலுத்தியது போல் அமைந்திருக்கும். இச் சிற்பத்தில் கையின்

வடிவம், குறுவாளின் வடிவம் ஆகியவை தெளிவாகப் புலப்படவில்லை. சிற்பம் நேர்த்தியாகவும், நுண்மையாகவும் வடிக்கப்படாததே காரணம். புலியின் வால் நிமிர்ந்த நிலையில் உள்ளது. வீரனின் அருகில் அவனது மனைவியின் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. அவள் தன் கையில் ஒரு மதுக்குடுவையை வைத்திருக்கிறாள். இருவருமே தலையின் வலப்புறத்தில் கொண்டை முடிந்திருக்கின்றனர். இருவர் கைகளிலும் வளைகள் காணப்படுகின்றன. கண், மூக்கு ஆகியவை தடித்துச் செதுக்கப்பட்டுள்ளன. இந்த முதல் அடுக்கு முழுதும் மண்ணும் சாணமும் பற்றுப்போல் படிந்துவிட்டதால் சிற்ப நுணுக்கங்களைப் பார்க்கக் கூடவில்லை. இருவரின் ஆடை அமைப்புப் புலப்படவில்லை.

அடுத்த (இரண்டாம்) அடுக்கில் மூன்று பெண்ணுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அடுக்கு நிலை நடுகல் எழுப்பும் மரபுப்படி, இப்பெண்ணுருவங்கள் தேவலோகப் பெண்டிரைக் குறிப்பன. அதாவது, இறந்து பட்ட வீரனைத் தேவ மகளிர் தேவர் உலகுக்கு அழைத்துச் செல்வதைக் குறிக்கும் குறியீடு. இந்த அடுக்கிலும் சற்றே மண்ணும் சாணமும் படர்ந்திருந்தாலும், சிற்ப உருவங்களில் ஆடை அமைப்பு காணப்படுகிறது. மூன்று பெண்டிரும் தம் இரு கைகளையும் உயர்த்திய நிலையில் வைத்திருக்கிறார்கள். மூவருமே, வலப்புறமாகக் கொண்டை முடிந்துள்ளனர்.

மூன்றாம் அடுக்கில், நடுவில் சிவலிங்கமும், சிவலிங்கத்தின் ஒருபுறம் நந்தி உருவமும், மறு புறம் சிவலிங்கத்தை வணங்கிய நிலையில் உள்ள நடுகல் வீரனின் உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. இந்தக் காட்சி, வீரன் சிவபதவி அடைந்ததைக் குறிக்கும் குறியீடு. பிறைநிலவின் உருவமும் கதிரவனைக் குறிக்கும் முழு வட்ட உருவமும் செதுக்கப்பட்டிருந்தன. நிலவும் கதிரும் உள்ளவரை இந்த நினைவு வீரக்கல் பாதுகாக்கப்படவேண்டும் என்னும் கருத்தைக் குறிப்பது. கல்வெட்டுகளில் ‘’சந்திராதித்தவரை’’ என்று எழுதப்படும் அதே மரபு.

**கல்கடம்பூர் - நடுகற்சிற்பம்:**

அடுத்து, நாளிதழ் நண்பர் எங்களை அழைத்துச் சென்றது கல்கடம்பூர் என்னும் பகுதி. கடம்பூரை ஒட்டியுள்ள புறக்குடியிருப்புப் பகுதியே கல்கடம்பூர். மிகுதியான தொலைவு இல்லை. சாலை மிகவும் சிதைந்திருந்தது. சாலையின் இருபுறமும் விளை நிலங்கள். அங்கே மருத்துவர் தோட்டம் என்று மக்கள் அழைக்கும் ஒரு புன்பயிர் நிலத்தருகே நண்பர் எங்களை நிறுத்தி, அந்தத் தோட்டத்துக்குள் இருக்கும் நடுகல்லைக் காட்டினார். பக்கத்து நிலத்திலெல்லாம் வேலி இல்லை. ஆனால் இந்தத் தோட்டத்தில் கற்றூண்களில் சுற்றிக் கட்டப்பட்ட முள் முடிச்சுகளுடன் கூடிய கம்பிகளாலான வேலி இருந்தது. நடுகல் சிற்பம் சாலையிலிருந்தே பார்வைக்குத் தெரிந்தாலும் ஒரு பலகைக் கல்லாக மட்டுமே தோற்றமளித்தது. அதில் இருக்கும் சிற்ப வடிவங்கள் புலனாகவில்லை.

முள் கம்பிகளின் மீது கால் வைத்து ஏற இயலாது. ஆனால் தோட்டத்துக்குரியவர் அந்நிலத்துக்குள் சென்றுவர இரும்புக் கட்டமைப்பில் ஒரு பெரிய நுழைவு வழி (GATE)

அமைத்திருந்தனர். அது பூட்டப்பட்டிருந்ததால், நண்பர் அதன் மீது ஏறி உள்ளே சென்று தாம் மட்டும் ஒளிப்படம் எடுத்துவருவதாகக் கூறினார். இன்னொரு நண்பர் உடல் நலக்குறைவின் காரணமாக வண்டியிலேயே அமர்ந்துகொண்டார். நடுகல் சிற்பத்தை அண்மையில் பார்க்கவேண்டும் என்னும் ஆவலில், அகவைக்குரிய இயலாமையைப் பொருட்படுத்தாது நான் கம்பிகளின் இடையே கால்களை நுழைத்து ஒருவாறு மேலே ஏறிக் கீழிறங்கினேன். செடிகளுக்கிடையில் நடந்து சென்று நடுகல்லைப் பார்வையிட்டோம். ஒளிப்படம் எடுத்துக்கொண்டோம். நடுகல், வேலிக் காலாக இருந்த கல் தூணின்மீது சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. கீழே கடம்பூரில் பார்த்த நடுகல் போலவே இதுவும் ஒரு மூன்றடுக்கு நடுகல்லாகும். அதே அமைப்பு. அதில் உள்ள சிற்பக்காட்சிகளே இதிலும்.

கல்கடம்பூர் - நடுகற்சிற்பம் - சில காட்சிகள்



***பாட்டப்பன் சாமி:***

*கல்கடம்பூரிலிருந்து மீண்டும் கீழே கடம்பூருக்குத் திரும்பும் வழியில் கல்கடம்பூரின் ஊருக்குள் நுழைந்து செல்லும் மற்றொரு பாதையில் சென்றோம். ஒரு சிறிய திடல். ஊராட்சி ஒன்றியத் தொடக்கப்பள்ளியின் அருகில் மரத்தடி மேடை ஒன்று. மேடை மேல் நிறுத்தப்பட்டிருந்த சிற்பம் கண்ணில் பட்டது. அருகில் சென்று பார்த்தால், அது ஒரு சிறிய கோயில் அமைப்பாகக் காணப்பட்டது. ஒரு மரத்தைச் சுற்றி, ஓரிரு படிக்கட்டுகளுடன் அமைக்கப்பட்ட மேடை. மேடையின் காரைப்பூச்சு மரத்தின் அடிப்புறத்தில் இல்லை. மரத்தைச் சுற்றிலும் நிலத்தை மண்ணோடு விட்டு வைத்துள்ளனர். மண்ணில் சிறு சிறு கற்களை அடுக்கி வைத்துள்ளனர். இது போன்ற சிறு கற்களை அடுக்கி வழிபடும் இவற்றைப் பொட்டுசாமிகள் எனக் கிராமங்களில் அழைப்பார்கள்.*

*சக்தி பிரகாஷ் என்பவர் தம் முக நூலில் கீழ்க்கண்டவாறு பதிவிட்டுள்ளார்:*

> ***”கொங்குப் பகுதியில் பெருவாரியான ஊர்களில் இன்றளவிலும் மக்களால் வணங்கப்படும் ஒரு தெய்வம்தான் "பொட்டுசாமி". இந்த பொட்டுசாமி நமது தொன்ம வழிபாடான நடுகல் வழிபாட்டின் நீட்சியாகக் கருதலாம். கொங்குப்பகுதிகளில் பொட்டு சாமியை ஊர் மந்தையிலும், குலதெய்வக் கோவில்களிலும், பிள்ளையார் மாரியம்மன் கோவில்களுக்கு நடுவிலும், நடுகற்களின் அருகிலும் காணலாம். பொட்டுசாமியை 1,3,5,7,9 என வரிசையாக கூர்மையான கற்களை நட்டு வழிபடுவர். சில இடங்களில் அதற்கு வெள்ளையடித்தும் , சிவப்பு கருப்பு இட்டும் வழிபடுகின்றனர். பெரும்பாலும் தனிமேடை அமைத்து அதன்மீது வைக்கப்பட்டுள்ளது.”***

*பொட்டுசாமிக் கற்களுக்கு நடுவில், பலகைக் கல்லில் வடிக்கப்பட்ட புடைப்புச் சிற்பம் ஒன்று காணப்பட்டது. ஆண் ஒருவரின் சிற்பம். மனித உருவத்தின் அளவீடுகளும், சிற்ப அழகும் இன்றி வடிக்கப்பட்ட சிற்பம். முறையாகச் சிற்ப இலக்கணங்களை அறிந்திராத, நாட்டுப்புறக் கைவினையாளர் ஒருவர் வடித்த சிற்பமாக இருத்தல்வேண்டும். முகத்தை உள்ளடக்கிய தலைப்பகுதி பெரிதாகத் தோற்றமளித்தது. தலைப்பகுதியில் முடி இல்லை. நீண்ட செவிகள். மூடிய நிலையில் கண்கள். மேற்புறமாக வளைந்த கொடுக்கு மீசை. கழுத்துக்குக் கீழே, மாட்டு வண்டியின் நுகத்தடியை ஒத்த நேர்கோட்டு வடிவத்தில் தோள்கள். தோள்களின் வடிவத்திலேயே முழங்கைகளும் சேர்ந்துள்ளன. தோள்பகுதியிலிருந்து கீழே இறங்கும் முன் கைகள். இடக்கை இடுப்புப் பகுதியில் வைக்கப்பட்டுள்ளது. வலக்கை உடலின் மீது படாமல் தொங்கும் நிலையில் உள்ளது. மார்புப் பகுதியிலிருந்து கால்கள் வரை சதுர வடிவம். கால்களின் இறுதியில் விரல்களோடு கூடிய பாதங்கள் காணப்படவில்லை.*

பாட்டப்பன் சாமி



அருகிலிருந்த முதியவர் ஒருவரைக் கேட்டபோது, இது பாட்டப்பன் சாமி என்னும் பெயரில் ஊர் மக்களால் வழிபடப்படுகிறது என்று கூறினார். கிராமக்கோயில் வழிபாட்டு மரபில், முனியப்பன், அய்யனார், வேடியப்பன் போன்ற நாட்டார் தெய்வங்களில் பாட்டப்பன் சாமியும் ஒன்று. ஈரோடு மாவட்டம், பவானி வட்டத்தில் செம்புலிச்சாம்பாளையம், சேலம் மாவட்டம் மகுடஞ்சாவடி, நாமக்கல் மாவட்டம், இராசிபுரம் வட்டம், திம்மநாயக்கன் பட்டி, ஈரோடு மாவட்டம் இலுப்பிலி ஆகிய ஊர்களில் பாட்டப்பன் சாமி கோயில்கள் உள்ளன. இவ்வழிபாடு, நாட்டார் மரபில் முன்னோர் வழிபாட்டின் இன்னொரு வடிவம் ஆகலாம்.

திடலின் ஓரத்தில் ஆங்காங்கே பெருங்கற்காலச் சின்னங்களில் காணப்படும் கற்கள் கிடந்தன. கடம்பூர்ப் பகுதி, பெருங்கற்காலத்துடன் தொடர்புடைய இடம் என்பதற்கான சான்றுத் தடயங்கள்.

**குன்றி – அணில் நத்தம்:**

கடம்பூரிலிருந்து இருபத்து மூன்று கல் தொலைவில் உள்ள மாக்கம்பாளையத்தில் சில தொல்லியல் தடயங்களைப் பார்த்து வருவதுதான் அடுத்த திட்டமாக இருந்தது. ஆனால், அவ்வூருக்கு மகிழுந்து போன்ற வண்டிகள் செல்ல

*இயலா. மோசமான மலைப்பாதை. 'ஜீப்' வகை வண்டிகள் மட்டுமே செல்ல இயலும். வாடகைப் பயணத்துக்குக் கிடைக்கும் 'ஜீப்' வண்டிகள் அன்று கிடைக்காததால் அருகில் உள்ள குன்றி என்னும் மலைக்கிராமம் வரை சென்று திரும்ப முடிவு செய்து எங்கள் பயணத்தை மகிழுந்திலேயே தொடர்ந்தோம். இந்த மலைப்பாதையும் சற்று மோசமான பாதையே. பாதை முழுக்க யானைகள் நடமாடும் பகுதிகள் நிறையக் குறுக்கிட்டன. தார்ச் சாலையிலிருந்து இரு புறமும் பிரிந்து செல்லும் யானைத்தடங்கள்.*

*ஒரு சில இடங்களில் நீர் நிலைகளும் அவற்றைக் கடந்துள்ள யானைத் தடங்களும். பகல் நேரமே ஆயினும், எந்த நேரத்திலும் யானைகள் குறுக்கிடும் அச்சமான சூழ்நிலை. ஆயினும், கடம்பூரிலிருந்து குன்றி மலைக்கிராமத்துக்குக் கிராம மக்கள் இரு சக்கர வண்டிகளில், பெரும்பாலும் ஆண்கள் தனித்தும், சில சமயங்களில் தம் துணையருடன் சேர்ந்தும் சென்ற வண்ணமாக இருந்தனர். யானைகளை எதிர்கொள்தல் பலருக்கும் நிகழ்வதுண்டு. சற்றுத் தொலைவிலேயே யானைகளைக் கண்டுவிட்டு அமைதியாக நின்று, யானைகள் அகன்றதும் பயணத்தைத் தொடர்வதை வழக்கமாகக் கொள்கிறார்கள். நாளிதழ் நண்பர், தாம் ஒரு முறை, பத்தடித் தொலைவில் யானையைப் பார்த்து நின்று, யானை அகன்றபின் மேலே பயணத்தைத் தொடர்ந்த ஒரு நிகழ்வைச் சொல்லும்போதே அச்சமாக இருந்தது. அந்த இடத்தையும் காட்டினார். சாலையை ஒட்டிய நீர் நிலை.*

*யானையின் இருப்பை நமக்கு உணர்த்தி அச்சம் சேர்க்கும் வகையில், சாலையில் ஆங்காங்கே யானைச் சாணம் காணப்பட்டது. அரவமற்ற சாலை. சாலையின் இருபுறமும் காடு. தனிமையும், அமைதியும் அச்சத்தை ஏற்படுத்தினாலும், விலங்குகள் எவற்றையும் எதிர்கொள்ளாதவரை, நம் பயணம் நம்மை இழுத்துச் சென்றது. குன்றி மலைக்கிராமத்தை அதன் எல்லையில் நெருங்கும்போதே ஓரிடத்தில் மூன்று நான்கு இளைஞர்கள் தம் வண்டியை நிறுத்திவிட்டுக் கைப்பேசியில் பேசியவண்ணம் இருப்பதைக் கண்டு வியந்தோம். அந்த இடம், மலைப்பாதையில் வருகின்ற காட்சி முனை போன்று, கைப்பேசிகளின் இயக்கத்துக்கான அலை வீச்சு முனை என்றார் நண்பர். காரணம், அந்த முனைக்கப்பால் கைப்பேசிகள் இயங்கா. மொத்தத்தில் குன்றி கிராமத்துக்குள் சென்றுவிட்டால் உலகத்தொடர்பு இருக்காது. இயற்கை மட்டுமே. நகரத்தின் இயல்பு வாழ்க்கையிலிருந்து விடுபட இதை விடுத்து வேறிடம் இல்லை எனலாம்.*

***குன்றியில் பழங்காலக் கிணறு:***

*குன்றியில் ஒரு பழங்காலக் கிணற்றைக் காட்டினார் நண்பர். ஆண்டு முழுதும் வற்றாத ஊற்று நீரைக் கொண்ட கிணறு. மிகுந்த வறட்சிக் காலத்திலும் நீர் நிறைந்திருக்கும் கிணறு. குன்றி-அணில் நத்தம் ஆகிய இரு பெயர்களையும் சேர்த்தே இந்தப் பகுதி அறியப்படுகிறது. ஊற்றுக் கிணற்றுக்கு அருகில் வீடமைத்து வாழும் சிவபசவன் என்ற இளைஞர், ஊரை அடுத்துள்ள காட்டுக்குள் பல தொல்லியல் தடயங்கள் இருப்பதாகக் கூறினார். பின்னொரு நாள் இங்கு வரவேண்டும். அணில்*

நத்தத்தில் ஓராசிரியர் பள்ளி ஒன்றுள்ளது. மலைக்கிராம மக்கள் சிறிய அளவில் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கிறார்கள். பயறு வகைகள் பயிரிடப்படுகின்றன.

குன்றியில் பழங்காலக் கிணறு - சில தோற்றங்கள்





ஆஞ்சநேயர் சிற்பம் - சில தோற்றங்கள்







**ஆஞ்சநேயர் சிற்பம்:**

குன்றியிலிருந்து கடம்பூர் திரும்பும் வழியில், ஒரு பெரிய பாறையில் ஆஞ்சநேயர் சிற்பம் புடைப்புருவமாகச் செதுக்கப்பட்டிருந்ததைக் கண்டோம். அதன் முன்புறம் சில வேல்கள் நடப்பட்டிருந்தன. விளக்குக்கென ஒரு மாடமும் உள்ளது. மக்கள் வழிபாட்டில் இச்சிற்பம் உள்ளது. ஆஞ்சநேயர் தம் இடது கையை அபய முத்திரையில் தூக்கி வைத்தவாறும், தம் வலது கையில் சௌகந்தி மலரைத் தாங்கிப்பிடித்தவாறும் காணப்படுகிறார். அவர்தம் வால், தலைக்கு மேல் உயர்த்தப்பட்ட நிலையில் உள்ளது. வாலின் நுனியில் மணி கட்டப்பட்டுள்ளது. இவ்வகை அமைப்பு வியாசராஜர் எழுந்தருளிவித்த ஆஞ்சநேயர் சிற்பங்களில் காணப்படுகின்ற அமைப்பாகும்.

**பெரும்பள்ளம் அணை:**

கடம்பூரிலிருந்து திரும்பும் பயணத்தின்போது, மலைப்பாதையில் பார்வை முனை ஒன்றில் நின்று, கீழே பள்ளத்தாக்கில் தெரிந்த பெரும்பள்ளம் அணையின் காட்சியைக் கண்டு மகிழ்ந்தோம்.

தொலைவில் - பெரும்பள்ளம் அணை



**கொடிவேரியில் ஒரு கல்வெட்டு:**

*மலைப்பகுதியை விட்டுக் கீழே வந்தபோது மாலைப்பொழுதாகிவிட்டிருந்தது. நண்பர் இராமசாமி அவர்கள், அருகில் கொடிவேரி பத்ரகாளியம்மன் கோயிலில் உள்ள கல்வெட்டைக் காண்பிப்பதாகச் சொல்லி அங்கு அழைத்துச் சென்றார். கொடிவேரி என்னும் இவ்வூர் இங்குள்ள ஒரு தடுப்பணைக்குப் புகழ் பெற்றது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் (கி.பி. 1125) மைசூர்ப்பகுதியில் ஆட்சி செய்த ஜெயங்கொண்ட சோழ கொங்காழ்வான் என்னும் அரசனால் கட்டப்பெற்றது. கல்வெட்டுகளில் இவ்வூர் ''கொடுவேலி'' என்று அழைக்கப்பெறுகிறது. கொடுவேலி என்னும் ஒரு தாவரம் இங்கு மலிந்திருந்ததன் காரணமாக இப்பெயர் ஏற்பட்டதாக வரலாற்றாளர்கள் கருதுகிறார்கள். தமிழ்நாடு சுற்றுலாத் துறையின் இணையதளத்தில் உள்ள குறிப்பு, கொடிவேரி என்னும் பெயர் "கொடிவரி" என்னும் பெயர் அடிப்படையில் அமைந்ததாகக் கூறுகிறது. "கொடுவரி" என்பது புலியைக் குறிக்கும் தமிழ்ச் சொல்; கொடிவேரியைச் சூழ்ந்த வனப்பகுதியில் புலிகள் நிறைய இருப்பதன் காரணமாகக் கொடிவரி என்னும் பெயர் பெற்றுப் பின்னர் கொடிவேரி என மருவியது.*

பத்ரகாளியம்மன் கோயில் - கொடிவேரி



*பத்ரகாளியம்மன் கோயிலில் இருக்கும் கல்வெட்டு ஒரு தனிப்பலகைக் கல்லில் வெட்டப்பட்டுள்ளது. இக்கல், தரையிலேயே நீண்ட காலம் கிடந்ததாலும், அதன் மேற்பரப்பில் மக்கள் அமர்ந்ததாலும் மேற்பரப்பில் பொறிக்கப்பட்ட எழுத்துகள் தேய்ந்துபோயின. இன்னொரு பக்க எழுத்துகள் காணுமாறு உள்ளன. தற்சமயம், இக்கல்லைக் கிடப்பு நிலையிலிருந்து மேலெழுப்பி நிறுத்தியிருக்கிறார்கள். கல்வெட்டு எழுத்துகளின் மீது மாவு பூசிப் படித்தோம்.*

***கல்வெட்டுப் பாடம்:***

*1 ஸ்வஸ்திஸ்ரீ . . . . .*
*2 [ஸம்வத்]ஸரத்து ஐற்பசி (மீ) . .*
*3 தியதி ஒடுவங்கா நாட்*
*4 டுக் கொடுவேலி[யி]*
*5 ல் ஊரு[ம்] ஊராளிகளு*
*6 ம் எங்க ஊரில் தந்*
*7 திரத்தா(ர்) உபைய*
*8 ப்ரமாணம் பண்ணி*
*9 குடுத்த பரிசாவது*
*10 எங்கள் ஊரில் இரு*
*11 க்கு[ம்] கைக்கோள[ர்]க்கு*

கல்வெட்டு - படியெடுக்கும் முன்



கல்வெட்டு - படியெடுத்த பின்



***விளக்கம்:***

*கல்வெட்டு அகராதியில் தந்திரத்தார் என்னும் சொல் இல்லை. தந்திரம் என்பதற்கு அருச்சனை அல்லது கோயில் பூசை என்பதாகத் திருவாங்கூர்ப் பகுதியில் உள்ள கல்வெட்டு வழக்கிலிருந்து அறிகிறோம். தந்திரி என்பதற்குக் கல்வெட்டு அகராதி, சேர நாட்டுக் கோயில் பூசாரி என்று குறிப்பிடுவதும் மேற்படி தந்திரம்=அருச்சனை (பூசை) என்பதைத் தெளிவாக்குகிறது. அகராதி, தந்திரம் என்பதற்கு 'வீரர் தொகுதி; படை' என்றும், தந்திரிமார் என்பதற்கு 'படை வீரர் கொண்ட சாதி' என்றும் பொருள் தருவதால், கொடிவேரிக் கல்வெட்டில் வருகின்ற தந்திரத்தார் என்பது 'படை வீரர் கொண்ட சாதி' என்பதையே குறிக்கும் எனலாம்.*

*மேலும், கைக்கோளர் என்பவர் கைக்கோளப்படைப் பிரிவினரைச் சார்ந்தவர் ஆவர். எனவே, தந்திரத்தார் என்னும் குழுவினர், கொடுவேலி ஊரில் இருக்கும் கைக்கோளர்க்குச் சில உரிமைகள் அல்லது சலுகைகளைத் தந்துள்ளனர் எனக்கொள்வதே பொருத்தமுடையது. அவ்வாறு தந்ததைக் கல்வெட்டு "உபைய ப்ரமாணம்" என்னும் சொல்லால் குறிக்கிறது. இந்தக் கொடையில் (உபையத்தில்) ஊரும் ஊராளிகளும் பங்கு பெறுகின்றனர் எனலாம்.*

*கொடிவேரியின் பழம்பெயர் கல்வெட்டில் கொடுவேலி எனக் கூறப்படுகிறது. பழங்கொங்கு நாட்டின் இருபத்து நான்கு நாட்டுப்பிரிவுகளுள் ஒன்றான ஒடுவங்க நாட்டில் கொடுவேலி இருந்ததாகக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. ஒடுவங்க நாடு, தற்போதுள்ள சத்தியமங்கலம் பகுதியாகும்.*

***முடிவுரை:***

*கொங்குநாட்டின் உட்பிரிவான ஒடுவங்கநாட்டின் சில பகுதிகளில் உள்ள தொல்லெச்சங்களைக் காணும் வாய்ப்பாக இப்பயணம் முடிந்தது.*

***பின் குறிப்பு:***

*இக்கட்டுரை பதிவிடப்பெறும் இன்று காலை, கட்டுரை ஆசிரியருக்கு வந்த ஒரு செய்தி - சத்திய மங்கலத்துப் பகுதியின் மூத்த வரலாற்று ஆய்வாளர் நண்பர் 'உழவர் ஐயா' தூ.நா. இராமசாமி அவர்கள் இயற்கை எய்தினார் என்பது. அன்னாரது மறைவு பேரிழப்பு. அகவை எண்பத்தைந்திருக்கலாம். என்னிலும் பல ஆண்டுகள் மூத்தவர். இருப்பினும் அன்பான அணுக்க நண்பர். கட்டுரை ஆசிரியரின் நீண்ட நாள் கனவு, நீரில் மூழ்கிய டணாயக்கன் கோட்டைக் கோயிலைக் காணவேண்டும் என்பது. அதை "உழவர் ஐயா" இரு முறை நனவாக்கினார். அப்பயணங்கள் தந்த இன்பம் மறக்கவொண்ணாதது. கடம்பூர் பயணத்தின் போதே அவர் உடல் நலம் குன்றியிருந்தார். நலக்குறைவு காரணமாக அவர் மகிழுந்தை விடுத்து மிகுதியும் வெளிவரவில்லை. கடம்பூர்ப் பயணத்தின்போது அவருடன் ஒளிப்படம் எடுத்துக்கொள்ளாதது மனதை வருத்துகிறது. டணாயக்கன் கோட்டைப் பயணத்தின்போது அவருடன் எடுத்துக்கொண்ட ஒளிப்படம் அவர் நினைவை நிலை நிறுத்திக்கொண்டே இருக்கும்.*

உழவர் ஐயாவுடன் கட்டுரை ஆசிரியர் - டணாயக்கன் கோட்டையில்



பின்னணியில் (ப)வாநி ஆறு

*அவர் நினைவைப் போற்றும் முகமாக இக்கட்டுரைப் படையல்.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 6. திருப்புடைமருதூர் ஸ்ரீநாறும்பூநாதர் சித்திரக்கூடம்

***— முனைவர் க. சுபாஷிணி***

*தமிழர் வரலாற்றை அறிந்து கொள்ள உதவும் புராதனச் சின்னங்களில் ஆலயங்களில் காணப்படும் சுவர்ச்சித்திரங்களும் அடங்கும். இன்று நமக்குக் கிடைக்கின்ற தொழில்நுட்ப கருவிகள் இல்லாத கடந்த நூற்றாண்டுகளில் நடந்த செய்திகளையும் நிகழ்வுகளையும், புராணக் கற்பனைக் கதாப்பாத்திரங்களையும் ஆவணப்படுத்தும் முயற்சியாக ஓவியக்கலைகள் அமைந்தன. தமிழகத்தின் பல்வேறு கோயில்களிலும், மண்டபங்களிலும், பாறைகளிலும் சித்திரங்கள் இன்று கண்டுபிடிக்கப்படுகின்றன. இப்படி நாம் கண்டறியும் சித்திரங்கள், இன்று நம் மக்களாலேயே சிதைக்கப்படும் அவலம் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கின்றது. இவ்வகைச் சித்திரங்கள் சிதைக்கப்படும் போது தமிழர் தம் வரலாற்றின் சில முக்கியப் பகுதிகளை நாம் அழிக்கின்றோம் என்ற புரிதல் சிறிதும் இல்லாமலேயே நாம் தொடர்ந்து புராதனச் சின்னங்களைச் சிதைத்துக் கொண்டிருக்கின்றோம்.*




*திருநெல்வேலியிலிருந்து அம்பாசமுத்திரம் செல்லும் வழியில் ஏறக்குறை 26கி.மீ தூரத்தில் வீரவநல்லூர் என்ற ஊர் வருகின்றது. அவ்வூருக்கருகில் தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்திருக்கும் ஒரு ஊர் திருப்புடைமருதூர். கடனா நதி என்ற ஆறு தாமிரபரணியில் சேரும் இடத்தில் இந்த திருப்புடைமருதூர் என்ற சிற்றூர் உள்ளது.*

இங்குள்ள நாறும்பூசுவாமி கோயில் கோபுரத்தின் உள்ளே அமைந்துள்ள சித்திரக்கூடம் தமிழக ஓவியக் கலைக்கும் மரச்சிற்பக் கலைக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது.

இன்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு மேல் பழமை கொண்டதாக அறியப்படும் இக்கோயிலில் 14 கல்வெட்டுக்கள் உள்ளன.

ஏறக்குறைய கி.பி.10ம் நூற்றாண்டு தொடங்கி 19ம் நூற்றாண்டு வரையிலான கல்வெட்டுக்கள் இவை. கோயிலுக்கு வழங்கப்பட்ட கொடைகளை விவரிக்கும் கல்வெட்டுக்களாகவே பெரும்பாலும் இவை அமைகின்றன. அவற்றுள் முதலாம் ராஜராஜனின் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றும் அடங்கும்.

கி.பி.9ம் நூற்றாண்டு தொடங்கி அறியப்படும் இக்கோயில் சோழ மன்னர்கள், பாண்டிய மன்னர்கள், நாயக்க மன்னர்கள் எனப் பல மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் புனரமைப்பு செய்யப்பட்டு விரிவாக்கம் செய்யப்பட்ட கோயிலாக விளங்குகிறது. தாமிரபரணி ஆற்று வெள்ளத்தால் பாதிக்கப்பட்டாலும் மீண்டும் புனரமைப்பு செய்யப்பட்டுத் தொடர்ந்து இக்கோயில் சிறப்புடன் திகழ்கின்றது.

இக்கோயிலின் வாயிற்புரத்தில் 5 நிலைகளைக் கொண்ட கோபுரம் உள்ளது. இந்த ஐந்து நிலைகளிலும் ஏறிச்செல்லப் படிகள் உள்ளன. ஒவ்வொரு தளங்களின் சுவர்களிலும் சுவர் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவை விஜயநகரப் பேரரசின் ஆட்சிக் காலத்தில் உருவாக்கப்பட்ட சித்திரவேலைப்பாடுகளாகும்.

இச்சித்திரக் கூடத்தில் இடம்பெறும் சித்திரங்களுள் ராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களின் கதைச் சிற்பங்கள் ஓவியங்களாக உள்ளன; தென் தமிழக வரலாற்றில் இடம்பெறும் தாமிரபரணி போர் பற்றிய விரிவான காட்சிகள் ஒரு தளத்தில் நிறைந்து காணப்படுகின்றன.

இவை மட்டுமன்றி சிவபுராண கதைகள், விஷ்ணு புராணத்தில் வரும் சில கதைகள், திருவிளையாடற்புராணத்தில் வருகின்ற கதைகள், கந்த புராணம், பெரிய புராணம் ஆகியவற்றோடு தலபுராணக் கதைகளும் ஓவியங்களாகத் தீட்டப்பட்டு காட்சியளிக்கின்றன.

இக்கோயில் கோபுரத்தின் இரண்டாவது தளம் தாமிரபரணிப்போரை காட்சிப் படுத்துவதாக அமைந்துள்ளது. நுட்பமான போர்க்காட்சிகள், ஈட்டி, வாள், வேல்கம்பு போன்ற போர் கருவிகளுடன் வீரர்கள் போரிடும் காட்சி சித்திரங்களாக அமைந்திருக்கின்றன. தென் தமிழகத்தின் துறைமுகப் பகுதிகளில் வந்திறங்கிய போர்த்துக்கீசிய வணிகர்கள் பற்றியும், அரேபிய வணிகர்கள் பற்றியும் சில காட்சிகள் அமைந்திருக்கின்றன. சில போர்க்காட்சிகளில் தமிழர்கள் மட்டுமன்றி போர்த்துக்கீசியர்களும் ஓவியத்தில் காட்டப்படுவது வியப்பளிக்கின்றது.

*கி.மு 14ம், 15ம் நூற்றாண்டுகளில் தென் தமிழகத்தின் கடற்கரை பகுதிகளின் வணிக ஆளுமையை அரேபிய வணிகர்கள் தம் வசம் வைத்திருந்தனர். அரேபிய வணிகர்கள் கப்பலில் பயணித்து குதிரைகளைக் கொண்டு வந்து விற்பனை செய்யும் குதிரை வணிகத்தைக் காட்டும் காட்சி ஒன்றும் இதில் இடம்பெறுகின்றது. கப்பலில் குதிரைகள் அரேபியாவிலிருந்து கொண்டுவரப்பட்டு புன்னைக்காயல் துறைமுகத்தில் இறக்கப்படுவதையும் தமிழ் வணிகர்கள் துறைமுகத்தில் கடல் வணிகத்திற்காகக் கப்பலில் பயணம் செல்வதையும் ஒரு ஓவியம் மிக அழகாகக் காட்சிப்படுத்துகிறது.*

*இக்கோபுரத்தின் ஐந்தாவது தளம் முழுமைக்கும் கடவுள் உருவங்கள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. மூன்றாம் நான்காம் தளங்களில் புராணக் காட்சிகள் கண்களைக் கவரும் வண்ணம் சுவர்களை முழுமையாக அலங்கரிக்கின்றன. அவற்றுள் கருவூர் தேவர் இக்கோயிலுக்கு வந்து வழிபட வரும் ஒரு காட்சி, சைவர்கள் சமணர்களை வாதில் வெல்லும் காட்சி, சமணர் கழுவேற்றம் பற்றிய காட்சி , சமய வாதங்களை வெளிப்படுத்தும் அனல்வாதம் -புனல் வாதக் காட்சி போன்றவற்றைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்.*

*இவ்வோவியங்கள் தாவரங்களிலிருந்தும் மூலிகைச் செடிகளிலிருந்தும் எடுக்கப்பட்ட வண்ணங்களைக் கொண்டு உருவாக்கப்பட்டவை என்பது இவற்றின் தனிச் சிறப்பு.*

*ஒவ்வொரு தளங்களிலும் வெளிச்சம் புக வாய்ப்பில்லாத நிலையிலும் மிகத் துல்லியமாக நுணுக்கமாக ஓவியங்களையும் சிற்பங்களையும் உருவாக்கிய இக்கலைஞர்களின் திறனை என்னவென்று புகழ்வது?*

*உலகின் பண்டைய நாகரிகங்களில், குகைச்சித்திரங்கள் தொடங்கி, கோயில் சித்திரங்கள் வரை தமது பண்பாட்டைப் பதிந்து வைக்கக் கருவியாக இக்கலையைப் பயன்படுத்தினர் பண்டைய மக்கள். கிரேக்கர்கள், எகிப்தியர்கள், அரேபியர்கள், ரோமானியர்களை இவ்வகையில் சிறப்பித்துச் சொல்லலாம். அந்த வரிசையில் தமிழர் பண்பாட்டின் ஆவணப்பதிப்பாக நமக்கு இவ்வகைச் சித்திரங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன.*

*ஒரு சமூகத்தின் சமகால நிலையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக மக்களின் தோற்றமும் அவர்கள் அணிந்திருக்கும் ஆடை அணிகலன்களும் அமைகின்றன, இதனால் ஓவியங்களில் இடம்பெறும் மனிதர்களின் தோற்றம், அரசு அதிகாரிகள், படை அதிகாரிகள், வணிகர்கள், குடிமக்கள், சமயவாதிகள் ஆகியோரின் ஆடைகள் கவனிப்பிற்கு உரியனவாக அமைகின்றன.*

*இக்கோயிலின் சுவர்ச்சித்திரங்களை மிக ஆழமாக ஆராய்ந்து புகைப்படங்களுடன் ஒரு நூலாக வெளியிட்டவர் பேராசிரியர் சா.பாலுசாமி. இக்கோயிலின் 2ம் தளத்தில் அமைந்திருக்கும் தாமிரபரணிப் போரைப் பற்றி குறிப்பிடுகையில் "இந்தத் தாமிரபரணி போர், 1532-ம் ஆண்டு ஆரல்வாய்மொழிக் கணவாய்க்கு அருகே திருவிதாங்கூர் அரசர் பூதல வீர உதய மார்த்தாண்ட*

*வர்மாவுக்கும், விஜயநகர அரசர் அச்சுத தேவராயருக்கும் இடையே நடைபெற்ற போர் என்றும், அந்தக் கால அரசாங்க நடவடிக்கைகளை இந்தச் சுவரோவியங்கள் நுட்பமாக வெளிப்படுத்துகின்றன என்பதோடு கி.பி 16-ம் நூற்றாண்டின் சமய, சமூக, அரசியல் வரலாற்றுக்குத் திருப்புடைமருதூர் ஓவியங்கள் இன்றளவும் முக்கியமான சாட்சிகளாக விளங்குகின்றன'' என்றும் குறிப்பிடுகின்றார். இக்கோயிலின் ஓவியங்கள் அனைத்தும் விஜயநகர ஓவிய பாணியையும், நாயக்கர்களின் ஓவிய பாணியையும் இணைத்து 'வேணாட்டுப் பாணி' என்று அழைக்கப்படும் புதிய பாணியில் அமைக்கப்பட்டுள்ளன.*

*தமிழக கோயில்களில் உள்ள சுவர்ச்சித்திரங்கள் பெருமளவில் கோயிலுக்கு வந்து செல்லும் பக்தர்கள் சிலரால் சிதைக்கப்படுவது தொடர்கதையாகவே உள்ளது.*

*இத்தனைச் சிறப்பு வாய்ந்த இச்சுவர் சித்திரங்களின் மீது தங்கள் பெயரையும் தொலைபேசி எண்களையும் எழுதி வைத்து இவற்றைச் சிதைப்பவர்கள் அயல்நாட்டுக்காரர்கள் அல்ல, மாறாக நமது தமிழகத்திலேயே வாழும் மக்கள் தான். எதற்காக இவர்கள் இப்படிச் செய்கின்றனர்?*

*நம் சூழலில் இன்று வரை புராதனச் சின்னங்களையும் கோயில் கலைகளையும் மதித்துப் போற்றி பாதுகாக்கும் சிந்தனை பொது மக்களிடம் மிகக் குறைவாகவே உள்ளது என்பது தான் உண்மை. புராதனச் சின்னங்களைப் பாதுகாக்கும் கடமை அரசுக்கும் அரசு அதிகாரிகளுக்கும் மட்டும் உள்ள கடமை அல்ல. மாறாக நம் அனைவருக்குமே இருக்கும் கடமை என்பதை ஒவ்வொரு தனி மனிதரும் உணர வேண்டும்.*

*ஒரு கலைச்சிற்பத்தைக் கீறி வைக்கும் போதும், ஒரு ஓவியத்தின் மீது எழுதி அதனைச் சிதைக்கும் போதும், நமது மூதாதையர் விட்டுச் சென்ற புராதன கலை படைப்புக்களை அழிக்கின்றோம் என்ற சிந்தனை எழ வேண்டும். ஒரு சிற்பத்தின் மீது எழுதும் போது நமது தமிழினத்தின் வரலாற்றைச் சிதைக்கின்றோம் என்ற எண்ணம் தோன்ற வேண்டும். இப்படி சிந்தனை மாற்றம் நிகழும் போது நமது கவின் கலைகளும் கோயிற்கலைகளும் நிச்சயம் பாதுகாக்கப்படும்.*

*கோயில் என்பது பக்தர்கள் வந்து வரம் கேட்டு வேண்டிக் கொண்டு, வந்து வழிபட்டு விட்டு குப்பைகளைப் போட்டு விட்டுச் செல்லும் இடமல்ல. கோயில் என்பது கலைகளின் இருப்பிடம். கோயில்கள் பண்பாட்டுத் தளத்தின் மிக முக்கிய சான்றுகள். கோயிலையும் அவை கொண்டிருக்கும் பண்பாட்டுக் கூறுகளையும் சேதப்படுத்தாமல் அவற்றைப் பாதுகாப்பதும் நமது அடுத்த தலைமுறைக்கு அதன் சிறப்பு குறையாமல் விட்டுச் செல்வதும் தமிழர் நம் ஒவ்வொருவரது கடமையுமாகும்!*

*தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)*

# 7. தொண்டாமுத்தூரை நோக்கி ஒரு சிறு பயணம்

*— துரை. சுந்தரம்*

***முன்னுரை:***

கோவையைச் சேர்ந்த தொல்லியல் ஆர்வலர் குமரவேல் என்னும் இளைஞர். அவருக்கு அவர் நண்பர் ஒருவர் கொடுத்த தகவல், கோவை-தொண்டாமுத்தூர் அருகில் தென்னமநல்லூரில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது என்பது. அக்கல்வெட்டைச் சென்று பார்த்துப் படிக்கவேண்டும் என்று குமரவேல் கேட்டிருந்தார். எனவே, ஒரு நாள் இருவரும் புறப்பட்டோம்...

***தொண்டாமுத்தூர் நடுகல் சிற்பம்:***



தொண்டாமுத்தூர் மாரியம்மன் கோயில்

தொண்டாமுத்தூரை அடைந்ததும், அங்குள்ள மாரியம்மன் கோயில் வளாகத்தில் ஒரு நடுகல் சிற்பம் இருப்பதாக நண்பர் கூறவே, மாரியம்மன் கோயிலுக்குச் சென்றோம். நுழைவாயில் தூணுக்கு அருகிலேயே நடுகல் சிற்பம் நிறுவப்பட்டுள்ளது. சிற்பத்தில், வீரன் ஒருவனின் உருவமும், காளை ஒன்றின் உருவமும் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. வீரன் நின்று கொண்டிருக்கிறான். அவனுடைய இடது கை காளையின் கொம்பைப் பிடித்தவாறுள்ளது. வழக்கமாக இதுபோன்ற நடுகற் சிற்பத்தில் வீரனின் கால்கள், நடந்துகொண்டிருக்கும் ஒரு தோற்ற நிலையில் பக்கவாட்டில் அமைக்கப்பெற்றிருக்கும். முகம் மட்டும் நேராகக் காண்பிக்கப்பட்டிருக்கும். இத்தகைய கால் அமைப்பை ”ஆலிடா” என்னும் கலைச்சொல்லால் குறிப்பர். ஆனால், இச்சிற்பத்தில், கால்கள், முகம் இரண்டுமே நேராகக் காட்டப்பட்டுள்ளது. வீரனின் இடது கை வாள் ஒன்றினை உயர்த்திப் பிடித்துள்ளதாகத் தோன்றுகிறது. ஆனால், வாளினின்றும் சாட்டை போன்ற ஒன்று கிளைத்ததுபோல் கீறப்பட்டுள்ளது.

சிற்பம் முழுவதுமே, அதன் மூலக் கற்சிற்பத்தினின்றும் முற்றிலும் மாறுபட்டுள்ளது. சிற்பம் செதுக்கப்பட்ட கற்பரப்பு முற்றாகச் ‘சிமெண்டு’ கொண்டு பூச்சுப்பணி செய்யப்பட்டு வழவழப்பாக்கப்பட்டதோடு அல்லாமல் சிற்ப உருவங்கள் இரண்டிலுமே ‘சிமெண்டு’ கொண்டு ஒட்டுப் பூச்சு செய்யப்பட்டுள்ளது. எனவே, சிற்பத்தின் மெய்யான வடிவம் மாறியுள்ளது. கல்லில் பொறிக்கப்பட்ட எழுத்துகளும் பூச்சு வேலையால் அழிந்துபோயின. இச்சிற்பமும், இதில் உள்ள கல்வெட்டும் ஆவணப்படுத்தப் பெற்றுள்ளனவா எனத் தெரியவில்லை. ‘சிமெண்டு’ப் பூச்சினை முழுவதுமாக நீக்கிய பின்னரே எழுத்துகளைப் படிக்க இயலும்.



நடுகல் சிற்பம்

இச்சிற்பம், ஏறு தழுவலுக்கு எடுத்துக்காட்டாக அமைந்த நடுகல் சிற்பம் என்று கருதத் தோன்றினாலும் நுண்மையான ஆய்வுக்குப் பின்னரே முடிவை எட்ட இயலும். ஏறு தழுவுகின்ற காட்சியில் சிற்பம் இல்லை.

**தென்னமநல்லூர்க் கல்வெட்டு:**

தொண்டாமுத்தூர் நடுகல் சிற்பத்தைக் கண்டுவிட்டு அடுத்து நாங்கள் சென்ற இடம் தென்னமநல்லூர். தென்னமநல்லூரில் கரிய காளியம்மன் கோயிலுக்கருகில், சாலையோரம் அமைக்கப்பெற்ற குடி நீர்க் குழாய்க்கு அடியில், மக்கள் நீர் பிடிக்கத் தோதாகக் குடங்களை வைப்பதற்கென்றே செய்யப்பட்ட கல் போல இந்தத் துண்டுக்கல் பயன்பட்டு வந்துள்ளது. குடங்கள் வைக்கப்பட்டதாலும், மக்கள் கால் பதிப்பதாலும் எழுத்துப் பொறிப்பு தேய்ந்து போனது. தொடர்ந்த நீர் ஒழுக்கினால், கல்வெட்டுப் பரப்பில் பாசி படர்ந்திருந்தது. நண்பர், கல்லின் மீது மண்ணைக்கொட்டி, அருகில் கிடைத்த தென்னை நார் கொண்டு தேய்த்துத் தேய்த்து நீரில் கழுவி ஒருவாறு தூய்மைப்படுத்திய பின்னர் அந்த இடத்திலிருந்து பெயர்த்து வெயிலில் வைத்துக் காய வைத்து மாவு பூசிய பிறகு, எழுத்துகளை அங்கேயே படித்தோம். கல்வெட்டு பிற்காலக் கல்வெட்டு.


தென்னமநல்லூர்க் கல்வெட்டு

**கல்வெட்டின் பாடம்:**

1 (வி)க்கிர(ம வரு.) தை மீ உயந (23) தேதி
2 தென்னம நல்லூரிலிருக்கு
3 ம் (சின்)னக்கவுண்டன் பெ
4 ண்சாதி (கன்னி)யம்மா(ள்)
5 . . . . . . . . . . ன் கோ[யில்]
6 . . . . . . . . . . ர் க்கிற......

***விளக்கம்:***

*கல்வெட்டின் முதல் வரியில் விக்கிரம வருடம் என்னும் குறிப்பு காணப்படுகிறது. விக்கிரம வருடம் தமிழ் ஆண்டு வட்டத்தில் 1880-ஆம் ஆண்டு அல்லது 1940—ஆம் ஆண்டைக்குறிக்கும். இக்குறிப்பின் அடிப்படையிலும், எழுத்தமைதியின் – குறிப்பாக ஆறாம் வரியில் "க்கி" என்னும் எழுத்துகள் ஒரே எழுத்தாகச் சுருக்கிக் கூட்டெழுத்து முறையில் எழுதியுள்ளதின் - அடிப்படையிலும் கல்வெட்டின் காலம் கி.பி. 1880 ஆகலாம் என்று கருதலாம். அங்குள்ள மக்களின் கூற்றுப்படி, அந்தத் துண்டுக்கல் அருகிலிருக்கும் சக்தி விநாயகர் கோயில் என்னும் பழங்கோயில் புதுப்பிக்கப்பட்டபோது புறக்கணித்து எறிந்த கற்களில் ஒன்றாகும். எனவே, கல்வெட்டில் வருகின்ற கோ[யில்] மேற்படி விநாயகர் கோயில் ஆகலாம். இக்கோயிலுக்கு எதோ ஒரு தன்மம் அளிக்கப்பட்டதைக் கல்வெட்டு கூறுகிறது எனலாம். தன்மத்தைப் பற்றிய குறிப்புள்ள இடத்தில் எழுத்துகள் மறைந்துவிட்டன. தன்மத்தை அளித்தவர், தென்னமநல்லூரிலிருக்கும் சின்னக்கவுண்டர் என்பாரின் பெண்சாதி (மனைவியார்) கன்னியம்மாள் என்பவர் ஆவார். பெண்கள் சொத்துரிமை உடையராய் விளங்கியுள்ளமையும், அவர்கள் தம் சொத்தைக் கொண்டு தன்மங்கள் செய்தமையும் கோவைப் பகுதியில் கட்டுரை ஆசிரியர் கண்டறிந்த பல பிற்காலக் கல்வெட்டுகளில் காணப்படுகின்ற செய்திகளே.*

***தாளியூர்:***

*தென்னமநல்லூர்க் கல்வெட்டைப் பார்த்துப் படித்த பின்னர் மீண்டும் தொண்டமுத்தூர் வழியே சென்றோம். ஒரு பிரிவுச் சாலையைக் குறிக்கும் கைகாட்டி, தாளியூர்- 1 கி.மீ. என்று காட்டியதைப் பார்க்கையில், தொல்லியல் தேடலில் தாளியூரில் (தாழியூர் என்பதே சரியாக இருக்குமோ என்னும் ஐயம் ஏற்பட்டது) ஏதாகிலும் தடயங்கள் கிடைக்கலாம் என்ற எண்ணத்தில் தாளியூர் சென்றோம். அங்கு பழங்கோயில்கள் எவையுமில்லை. ஓரிரு வயது மூத்தோரிடம் பேசியதில், தொண்டாமுத்தூர் வஞ்சியம்மன் கோயிலிலும், நரசிபுரம்- வெள்ளிமலைப் பட்டணத்துக் கோயிலிலும் கல்வெட்டுகள் உள்ளன என்பதாகச் செய்தி கிடைத்தது. மீண்டும், தொண்டாமுத்தூர் திரும்பி வஞ்சியம்மன் கோயிலை அடைந்தோம்.*

***வஞ்சியம்மன் கோயில்:***

*ஒற்றைக் கருவறையும் அதன்மீது எழுப்பப்பட்ட விமானமும் கொண்ட கல் கட்டுமானத்தால் அமைந்த ஒரு கோயிலே வஞ்சியம்மன் கோயில். கோயிற் சுவர்களில் சில கற்களில் எழுத்துப் பொறிப்புகள் காணப்பட்டன. ஆனால், கற்சுவர்களின் மீது தொடர்ந்து பூசப்பட்ட சுண்ணாம்புப் பூச்சின் காரணமாக எழுத்துகளைப் படிக்க இயலவில்லை. சுண்ணாம்புப் பூச்சு முழுவதையும் அகற்றிவிட்டே கல்வெட்டுகளைப் படிக்க இயலும். பிறிதொரு முறை இங்கு வந்து அம்முயற்சியை மேற்கொள்ளலாம் என அங்கிருந்து அகன்றோம். பயணம், வெள்ளிமலைப் பட்டணத்தை நோக்கித் தொடர்ந்தது.*



வஞ்சியம்மன் கோயில்

*வீடு வந்து சேர்ந்து, கோவை மாவட்டக் கல்வெட்டுகள் நூலைப் பார்க்கையில், வஞ்சியம்மன் கோயில் துண்டுக் கல்வெட்டுகள் 2003-ஆம் ஆண்டில் படிக்கப்பட்டுப் பதிவாகியுள்ளது தெரிந்தது. அத் துண்டுக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்ற செய்தி கீழே ...*

***வஞ்சியம்மன் கோயில் கல்வெட்டுச் செய்திகள்:***

*இக்கோயிலின் துண்டுக்கல்வெட்டுகள் பலவற்றில் சித்தார்த்தி வருடம் குறிப்பிடப்படுவதால், அந்த ஆண்டில் கோயில் செங்கல் கட்டுமானத்திலிருந்து கற்றளியாக மாற்றப்பட்டமை உணரப்படுகிறது. இதற்குச் சான்றாக, கல்வெட்டுகள் யாவும், சுவர்க் கட்டுமானத்துக்காகவும், நிலைக்கால் கட்டுமானத்துக்காகவும் கற்கள் கொடுக்கப்பட்டதைக் கூறுகின்றன. கொடை கொடுத்தோர் பட்டியலில் மத்திப் பெருமாள், தாண்டவ(ன்), சுவாமி ஆகிய பெயர்கள் உள்ளன. மேலும், வேட்டுவர் ஒருவரும், மங்கலவன் (நாவிதன்) ஒருவரும் கொடையாளிகளாகச் சுட்டப்பெறுகின்றனர். கொடையாளிகள் யாவரும் தொண்டாமுத்தூரைச் சேர்ந்தவர் என்று தெரிகிறது. கற்கள் கொடை அளிக்கப்பட்டமையைக் குறிக்கையில், கல்வெட்டுகளில் ''ஒடுக்கின கல்லு'' என்னும் தொடர் கையாளப்படுவதைக் காண்கிறோம். இதில் உள்ள ''ஒடுக்கின'' என்னும் சொல் பயின்று வருதல்*

*இடைக்காலச் சோழர் கல்வெட்டுகளிலிருந்து தொடரும் மரபு. இதையும், சித்தார்த்தி வருடக் குறிப்பையும் அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, கல்வெட்டின் காலத்தைக் கி.பி. 1859 எனக் கணிக்கலாம். எனவே, வஞ்சியம்மன் கோயில் 1859-க்கு முன்னரே இருந்துள்ளது என்பதும், 1859-ஆண்டு கற்றளியாகக் கட்டப்பட்டது என்பதும் பெறப்படும்.*



வஞ்சியம்மன் கோயில் கல்வெட்டு-எடுத்துக்காட்டுக்கு ஒன்று

***கல்வெட்டுகளின் பாடங்கள்:***

*(அ)*

*1 ஸ்வஸ்திஸ்ரீ சித்தார்த்தி வருஷம் ஆவணி மீ ய (10) தொ*

*2 ண்டாமுத்தூரிலிருக்கும் செல்லய்யன்*

*3 மகன் மத்திப்பெருமாள் உபயம்*

*(ஆ)*

*1 க்கு*

*2 குள்ளவின ....*

*3 திருநிலை க[ல்]லு*

*4 உபயம்*

*(இ)*

*1 சித்தார்த்தி வரு. சித்திரை மீ*
*2 தொண்டாமுத்தூரிலிருக்கும்*
*3 …………… ஒடுக்கின*
*4 கல்லு ………*

*(ஈ)*

*1 சித்தார்த்தி வருஷம் வையாசி மீ ..*
*2 ….தொண்டாமுத்தூரிலிருக்கும்*
*3 தாண்டவ …[மசு]வியார்…ஒ*
*4 டுக்கின கல்லு*

*(உ)*

*1 ………….வரு. ஆடி*
*2 ….னா .. தொண்டா*
*3 முத்தூரிலிரு[க்கும்] சுவாமி*
*4 உபயம் கெச….*

*(ஊ)*

*1 சித்தார்தி வரு. ஆவணி மீ…… [வேட்டுவ] ….*

*(எ)*

*1 பில[வங்க] வருஷம் …..*
*2 …… குடுத்து விட்டோம் …..*
*3 ம[ட]ம் தொண்ட ….*
*4 முத்தூரு நவிதன் …..*

**தேவராயபுரம் தொட்டிக் கல்வெட்டு**:


தேவராயபுரம் தொட்டிக்கல்வெட்டு

வெள்ளிமலைப்பட்டணத்தை நோக்கிய பயணவழியில், தேவராயபுரத்தில் நண்பர், கால்நடைகளுக்கான நீர்த்தொட்டியொன்றில் கல்வெட்டு இருப்பதைக் காட்டினார். ஒளிப்படம் மட்டும் எடுத்துக்கொண்டேன். நின்று, மாவு பூசிப் படிக்க நேரமின்றிப் பயணத்தைத் தொடரவேண்டியதாயிற்று. ஒளிப்படத்தைக் கணினியில் பார்க்கையில், செய வரு., தேவராயபுர(ம்), கவுண்டன் மகன், உபையம் ஆகிய சொற்கள் புலப்பட்டன. செய வரு. என்பது ஜெய வருடத்தைக் குறிக்கும். அறுபது ஆண்டுகள் கொண்ட தமிழ் ஆண்டு வட்டத்தில் ஜெய வருடம் 1894-ஆண்டில் அமைகிறது.

**செலம்பனூர் நடுகல் கோயிலும், கல்வெட்டுகளும்:**

தேவராயபுரத்தை அடுத்துச் செலம்பனூர் என்னும் ஊர் வந்தது. அங்கு வெள்ளிமலைப்பட்டணத்துக்கு வழி கேட்கையில் தொல்லியல் பற்றிய உரையாடல் ஏற்பட்டது. அங்கிருந்த ஒருவர் செலம்பாத்தா கோயிலில் உள்ள கல்வெட்டைப் பற்றிச் சொன்னதும், செலம்பனூர் செலம்பாத்தா கோயிலுக்குச் சென்றோம். அங்கு சென்று கோயில் சிற்பத்தைப் பார்த்ததும், 2013-ஆம் ஆண்டு, நான் இங்கு வந்ததும் இங்குள்ள நடுகல் சிற்பம் மற்றும் கல்வெட்டுகளைப் பார்த்ததும் நினைவுக்கு வந்தன.

**செலம்பனூர் நடுகல்லும் கல்வெட்டும் - 2013-ஆண்டில் தோற்றம்:**



செலம்பனூர் நடுகல்-1



செலம்பனூர் நடுகல்-2

தேவராயபுரத்தைச் சேர்ந்த தொல்லியல் கழக நண்பர் மேகலா அவர்கள் தம் ஊருக்கருகில் இருக்கும் நடுகல் சிற்பங்கள் மற்றும் கல்வெட்டுகளை 2013-ஆண்டில் மே மாதத்தில் ஒரு நாள் காண்பித்தார். அப்போது கோயில் இல்லை. திறந்த வெளியில் சுற்றிலும் செடி கொடிகள் சூழ்ந்த நிலையில் அவற்றைப் பார்த்தேன். கல்வெட்டுகளின் மீது சுண்ணம் பூசிப்பார்த்தும் படிக்க இயலவில்லை. எழுத்துகள் சரியான நேர்கோட்டில் அமைந்திராமையும், பிறகால எழுத்து வடிவம் சரியாகப்

பொறிக்கப்படாமையும் காரணம். பின்னர், அவர் எடுத்த முயற்சியால் ஊரார் கோயில் எழுப்பி நடுகல் சிற்பங்களையும், கல்வெட்டுக் கற்பலகைகளையும் கோயிலில் நிறுவி வழிபாட்டுக்குரியதாக மாற்றியுள்ளனர். தொல்லியல் எச்சங்களுக்கு வழிபாடே பாதுகாப்பான வழி என்றாகிறது.



செலம்பனூர் கல்வெட்டு-1



செலம்பனூர் கல்வெட்டு-2

**செலம்பனூர் நடுகல்லும் கல்வெட்டும் – இன்றைய தோற்றம்:**

சுவர்களோடும் கூரையோடும் கூடிய நீண்டதொரு முற்றம் அமைத்துக் கட்டிடம் எழுப்பியிருக்கிறார்கள். முற்றத்தின் இறுதியில் மேடை ஒன்றை அமைத்து மேடையில் நடுகல் சிற்பத்தை நிறுத்தியிருக்கிறார்கள். முற்றத்தின் பக்கப்பகுதியில், கல்வெட்டு பொறிக்கப்பட்டிருக்கும் பலகைக் கற்களை நிலத்தில் பதித்திருக்கிறார்கள். கல்வெட்டுகளை ஒட்டி இன்னொரு நடுகல்லைப் பதித்திருக்கிறார்கள். முதன்மை நடுகல் வழிபாட்டில் உள்ளது.

நடுகல்லில் காணப்படும் பெண்ணுருவம் செலம்பாத்தா என்னும் பெயரிலும், ஆண் உருவம் ஈசுவரன் என்னும் பெயரிலும் மக்களால் வணங்கப்படுகின்றன. நடுகல்

சிற்பங்கள் நாயக்கர் காலப் பாணியில் அமைந்துள்ளன. ஆண், பெண் இருவருமே தம் தலை முடியைக் கொண்டையாக முடிந்துள்ளனர். ஆணின் கொண்டை இடப்புறம் சாய்ந்தும், பெண்ணின் கொண்டை வலப்புறம் சாய்ந்தும் காணப்படுகின்றன. பெண்ணின் கொண்டை சற்றுத்தூக்கலாக உள்ளது. இருவருக்குமே அணிகலனோடு கூடிய நீள் செவிகள். கழுத்து, கைகளில் அணிகலன்கள் உள்ளன. பெண்ணின் ஆடைக்கட்டு நன்கு அமைந்துள்ளது. பெண்ணின் ஆடைக்கட்டு கணுக்கால் வரையிலும், ஆணின் ஆடைக்கட்டு முழங்கால் வரையிலும் உள்ளன. ஆண், தன் இடது கையைத் தொடையில் ஊன்றியும், வலது கையில் கட்டாரி ஒன்றினைத் தரை நோக்கிக் கீழ்ப்புறமாக அழுத்திப் பிடித்தவாறும் தோற்றமளிக்கிறான். பெண், தன் இரு கைகளையும் கூப்பிய நிலையில் தோற்றமளிக்கிறாள். இருவரது உருவங்களுக்கு இடையில் தலைப்பகுதிக்கருகில் பூ வேலைப்பாடு செதுக்கப்பட்டுள்ளது. கல்வெட்டுகளோடு இணைத்து நிறுத்தப்பட்டிருக்கும் இன்னொரு நடுகல் சிற்பம், இரண்டு அடுக்குகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு அடுக்கிலும் இரண்டு உருவங்கள்.



செலம்பனூர் நடுகல்-கோயிலில் வழிபாடு

கல்வெட்டுகளின் ஒளிப்படங்களைத் தற்போது ஊன்றிப்படிக்கையில் ஒரு கல்வெட்டுப் படத்தின் சில வரிகளை இனம் காண இயன்றது. அவ்வரிகளின் பாடம் கீழ் வருமாறு :

***கல்வெட்டுகளின் பாடம்:***

*1 துன்துமி வரு. வய்யாசி*
*2 மீ 3 தேதியில் . . . . .*
*3 . . . . . யன் யூருலே யிருக்கும்*
*4 செலம்பன கவுண்டன்*
*5 கோயல் மேல்படி புதூருலே*
*6 யிருக்கும் (வாலி) செட்டி*
*7 மகன் குப்பி செட்டி*

*விளக்கம்:*

*கல்வெட்டுப்படி, செலம்பன கவுண்டன் கோயில் என்ற பெயரில் முன்னரே கோயில் இருந்துள்ளமை தெரியவருகிறது. அதாவது, முன்னரே நடுகல் கோயில் வழிபாடு இருந்துள்ளது என்பதாக அறிகிறோம்.*

***முடிவுரை:***

*பயணத்தின் இறுதியில், நாங்கள் வெள்ளிமலைப்பட்டணம் சென்றபோது, அங்கு எங்களுக்கு எந்தத் தொல்லியல் தடயமும் கிட்டவில்லை. தொண்டாமுத்தூரைச் சுற்றியுள்ள பகுதியின் தொல்லியல் தடயங்களைக் காணும் வாய்ப்பும் அவற்றை இங்குப் பதிவு செய்யும் நிகழ்வும் மகிழ்ச்சி கொள்ள வைக்கின்றன.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 8. திருசூலம் ஓர் தேவாரவைப்புத்தலம்

**— நூ.த. லோகசுந்தரம்**

*"நாடும் நகரமும் நற்திருக்கோயிலும்*
*தேடித் திரிந்து சிவபெரு மானென்று*
*பாடுமின் பாடிப்பணிமின் பணிந்தபின்*
*கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வானே"*
*— திருமூலர்*

*சென்னையில் வானூர்தி போக்குவரத்து மிக்க உள்ள மீனம்பாக்கத் தளத்தின் மிக அருகில் பல்லவ மன்னன் குடைவறைக்கோயிலுள்ள பல்லவபுர மலையின் வடகிழக்குமுக அடிவாரத்தில் குறுகுன்றுகள் சூழ அமைந்துள்ளது திருசூலம். 'திருசுரம்' எனவே அத்திருக்கோயில் 1000 ஆண்டு தொன்மை கொண்ட கல்வெட்டுகளில் பொளிக்கப்பட்டிருந்தாலும் மக்கள் வாய்வழக்கில் திருசூலம் என்றே பல நூற்றாண்டுகளாக வழங்கிவருகின்றது. புதிதாக எழுந்த மின்இரயிலடியும் அவ்வழியே வழங்கப் பட்டுள்ளது. கோயில் இறைவனும் இன்றும் திருசூலநாதர் எனவே உள்ளார் இறைவியும் இணையாக திருப்புரசுந்தரி தான்.*

*சென்னை கடற்கரை தாம்பரம் மின்மய திருசூலம் இரயிலடியிலிருந்து கிழக்காக வெளிவந்து தெற்காக சென்று இரு குன்றுகளுக்கு இடையே உள்ள சாலையில் கிழக்காகத் திரும்பி ஏறக்குறைய மொத்தம் 2 கிமீ சென்றால், நடுத்தர மற்றும் கூலித்தொழிலாளிகள் மட்டும் அங்கும் இங்கும் மலைகளின் பாறை களை ஒட்டியும் வாழும் சிற்றூர் உள்ளது. பேருந்து தொடர்பு ஏனோ இன்னும் வரவில்லை. சிதிலமான பழம் வரவேற்பு வளைவும் உள்ளது. பழங்கால சன்னதிதெரு இடது மூலைமுனையில் பாழான கல்மண்டப சத்திரமும் காணலாம். பலர் காரில் வருகின்றனர் கோயில் வாயிலில் பூக்கடை உள்ளது.*

*பல ஆண்டுகளுக்கு முன்பே சென்னை பெருநகரத்துக் கட்டிடம் சாலைகள் மற்றும் இருப்புப்பாதை தேவைகளுக்கான கருங்கல் அருகிலுள்ளதால் இம்மலைகளில் இருந்து பெறப்பட்டிருந்தது. இப்போது நிறுத்தப்பட்டிருந்தாலும் முன்பு பயனில் இருந்த 300 ஆண்டுக் காலத்தில், அப்போது சிதிலமாய் இருந்த திருச்சூல கோயிலின் பகுதிகள் மண்டபம் முதலியனவற்றின் பாகங்களே கருங்கல் தேவைகளுடன் கலந்து சென்றுள்ளமை உறுதியாகத் தெரிகின்றது. ஏனெனில், இப்போது சென்னைமாநகரத்து பெருங்கோயில்களாக விளங்கும் மயிலைக் கபாலீசுவரர் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி பெருமாள் கோயில்களில் இந்த திருசூலத்துக் கல்வட்டுத்துண்டுகள் குறைந்தது 7 அங்கு பயன்பட்டுள்ளதாக கல்வெட்டுகள் படி எடுத்தமை 'சென்னை மாநகர கல்வெட்டுகள்' - தமிழ்நாடு*

தொல்லியல்துறை வெளியீட்டு நூல்காட்டுகின்றது. அதனிலிருந்து மேலும் திருவான்மியூர் கோயில் கல்வெட்டுகளுடன் கூடிய துண்டுகள் மயிலையில் வேறு சில சிறு கோயில்களில் பயன்பட்டுள்ளதாகவும் பதிவாகி உள்ளமை து தெரிகின்றது.






திருசூலத்தில் இப்போதுள்ளது மிகப்பழமையான கருங்கல் பணியிலான தூங்கானைமாடக்கோயில் அதிட்டானப் பட்டைகளில் கல்வெட்டுகள் உள்ளன இரு வேறு குறுநில மன்னர்களின் உருவங்கள் உபயதாரர் எனும் நிலையில் சுற்று மண்டபத்தூண்களில் காணப்படு கின்றன இணைப்புப் படங்களைக்காண்க.

***திரிசூலம் குறிக்கும் தேவாரம்:***

> ***"கோலக்காவில் குருமணியைக், குடமூக்(கு) உறையும் விடமுனியை,***
> ***ஆலங்காட்டில் அலம்தேனை, அமரர் சென்னி ஆய்மலரைப்,***
> ***பாலில் திகழும் பைங்கனியைப், பராய்த் துறைஎம் பசும்பொன்னைச்,***
> ***சூலத்தானைத்து இணையிலியைத், தோளைக் குளிரத் தொழுதேனே"*** *4.15.5*

*இப்பாடல் திருநாவுக்கரசர் தேவாரம் நாலாம் திருமுறை பாவநாசதிருப்பதிகம் ஐந்தாம் பாடல் இதனில் 'சூலத்தானம்' என ஓர் தலம் குறிக்கப்படுகின்றது. நெய்த்தானம் உசாத்தானம் மூலத்தானம் போன்றும் 'மாதானம்' எனும் மற்றொரு வைப்புத்தலம் போன்றும் தானம் எனும் பெயர் ஈறு பெற்றுள்ள ஓர் தலம்.*

*மேற்படி பாடலில் கோலக்கா, குடமூக்கு, ஆலங்காடு, சென்னி, பாலில், பராய்த்துறை எனும் ஆறிலும் உறையும் இறைவன் சிறப்புப் பெயர்கள் முறையே குருமணி, விடமுணி அலந்தேன் ஆய்மலர் பைங்கனி பசும்பொன் எனக்காட்டப்படுதல்போல், சூலத்தானத்து உள்ள இறைவனையும் இணையிலி எனக்காட்டுதலால் சூலத்தானம் ஓர் தலமே யாகும் என்பது ஐயமற விளங்குகின்றது. அறுபது ஆண்டுகளுக்கு , முன்பே சென்னை நகரம் இந்நாள் போல் பெரிதாக வளராது போல் திருசூலமும் ஒரு மிகச் சிறு கிராமமாக இருந்த போது தந்தையாருடன் கறவைப்பசு வாங்க கால்நடைசந்தைக்கு உடன் அழைத்துச் சென்ற நினைவு. அதனால் அப்பக்கம் செல்ல வாய்ப்பு கிட்டிய போது வழிபட மனம் கொண்டிருந்தேன். மூன்று வாரம் முன்பு தான் வழிபட முடிந்தது (இப்போது வயது 79 செல்கின்றது) படங்கள் வைத்துள்ளேன்.*

*தனக்கென குறைந்தது ஓர் முழுப்பதிகம் பெறாமல் மற்ற பதிகப்பாடல் அல்லது பொது பதிகப்பாடல்களில் சிவனுறையும் கோயிலாகக் காட்டப் பெறுபவனதான் தேவார வைப்புத்தலம் என்பது பலரும் அறிவர். தேவார பாடல்பெற்றவை 276 ல் இந்தியாவில் இல்லாதது 3 தவிர எல்லாவற்றையும் வழிபட்டுள்ள என்னுடைய இக்கால முதிர்ந்த நிலையில் பன்முறை தலைமுறைத் தவிர தேவாரத் தல ஆய்வினில் சில வைப்புத்தலங்களுக்கும் பிற மாநில சிவத்தலங்கள் 12 சோதிலிங்கம் எனவும் வழிபட்டுள்ளேன்.*

*பெயர்முறை திருமுறை எனும் மற்றும் ஓர் வகையைத் தொகுத்தும் வருகின்றேன். திருமுறைகளின் ஊடே ஓர் பெயரால் சிவபெருமான் போற்றப்படுதல் கொண்டு தொகுக்கப்படுவது எடுத்துக்காட்டாக மயிலைக் கபாலி எனும் பெயர் போற்றப்படும் (108+) பாடல்கள் மற்றும் கற்பகம் என விளிவருவனவும் பசுபதி கயிலாயன் போன்ற தொகுப்புகளும் உள்ளன. இதன் பயன்: தேவாரம் பாடல் பெறாதவையும் இப்பாடல்களில் அத்தல இறைவன் பெயர் பொருத்தமே காரணம் என தேவாரத்தின் தொடர்பு காட்டி பயன்கொள்ளலாம் என்பதுவே.*

*இவ்வழிதான் இங்குக்காணும் சூலத்தான் திருமுறை 26 பாடல்கள் காண்க சூலத்தான் சூலத்தார் எனும் சொற்களில் சூலம் என்னும் இடத்தில் அமர்ந்தவன் என பொருள் கொள்ள முடியும் என்பதால் அவ்வண்ணம் தொகுக்கப்பட்டுள்ளன.*

*இதனுக்கு இணையாக உடன் காட்டிய மற்றொரு தலம் சென்னி = சென்னிமலை பதியினயதாக கொள்ளவும். சென்னித் திருமுறை என தொகுத்துள்ளேன். இதனில் சென்னி எனும் சொல் 12 திருமுறைகளில் 314 பாடல்களில் காணப்பட்டாலும் அவைபெருமானின் உருவ உறுப்பினைக் (சென்னி=தலை) காட்டுவன நீக்கி பெருமான் உறையும் ஓர் தலம் எனக் கொள்ளத் தக்கன மட்டும் உள்ளன.*

**பெயர்முறைத் திருமுறை**
**சூலத்தான் திருமுறை**

*01*
*கல்நவிலும் மால்வரையான் கார்திகழும் மாமிடற்றான்*
*சொல்நவிலும் மாமறையான் தோத்திரம் செய் வாயினுளான்*
*மின்னவிலும் செஞ்சடையான் வெண்பொடியான் அங்கையினில்*
*கொல்நவிலும் சூலத்தான் கோளிலியெம் பெருமானே 1.62.7*

*02*
*மாவின் உரிவை மங்கை வெருவ மூடிமுடிதன் மேல்*
*மேவு மதியும் நதியும் வைத்த விளைவர் கழல் உன்னும்*
*தேவதேவர் திரிசூலத்தர் திரங்கல் முகவன் சேர்*
*காவும்பொழிலுங் கடுங்கற்சுனைசூழ் கயிலைமலையாரே 1.68.3*

*03*
*கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோல் ஆடையான்*
*நீலத்தார் கண்டத்தான் நெற்றி ஓர் கண்ணினான்*
*ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்தில்*
*சூலத்தான் என்பார்பால் சூழாவாம் தொல்வினையே 2.46.4*

*04*
*எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு*
*பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு*
*துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு*
*அயிலைப் பொலிதரு சூலத்து ஆலவாயான் திருநீறே 2.66.7*

*05*
*நீலத்தார் கரிய மிடற்றார் நல்ல நெற்றி மேலுற்ற கண்ணினார் பற்று*
*சூலத்தார் சுடலைப்பொடி நீறணி வார்சடையார்*
*சீலத்தார் தொழுதேத்தும் சிற்றம்பலம் சேர்தலால் கழல்சேவடி கைதொழக்*
*கோலத்தாய் அருளாய் உன காரணம் கூறுதுமே* *3.1.3*

*06*
*நஞ்சினை உண்டிருள் கண்டர் பண்டு அந்தகனைச் செற்ற*
*வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழிமிழலையார்*
*அஞ்சனக் கண் உமை பங்கினர் கங்கைஅங்கு ஆடிய*
*மஞ்சனச் செஞ்சடை யார் என வல்வினை மாயுமே* *3.9.3*

*07*
*பாடு இளம் பூதத்தி னானும் பவளச்செவ்வாய் வண்ணத்தானும்*
*கூடு இளமென் முலையாளைக் கூடிய கோலத்தினானும்*
*ஓடு இள வெண்பிறையானும் ஒளிதிகழ் சூலத்தினானும்*
*ஆடு இளம் பாம்புஅசைத் தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே 4.4.1*

*08*
*தரியா வெகுளியனாய்த் தக்கன் வேள்வி தகர்த்துகந்த*
*எரியார் இலங்கிய சூலத்தினான் இமையாத முக்கட்*
*பெரியான் பெரியார் பிறப்பறுப்பான் என்றும் தன்பிறப்பை*
*அரியான் அடிநிழல் கீழதன்றோ என்றன் ஆருயிரே* *4.8.3*

*09*
*மை உலாவிய கண்டத்தன் அண்டத்தன்*
*கை உலாவிய சூலத்தன் கண்ணுதல்*
*ஐயன் ஆரூர் அடிதொழு வார்க்கெலாம்*
*உய்ய லாம் அல்லல் ஒன்றிலை காண்மினே* *5.7.12*

*10*
*புனைபொன் சூலத்தான் போர்விடை ஊர்தியான்*
*வினைவெல் நாகத்தன் வெண்மழு வாளினான்*
*நினைய நின்றவன் ஈசனையே எனா*
*வினை இலார் தொழும் வீழிமிழலையே* *5.12.3*

*11*
கைகொள் சூலத்தர் கட்டுவாங்கத்தினர்
மைகொள் கண்டத்தர் ஆகி இருசுடர்
செய்ய மேனி வெண்ணீற்றர் செம்பொன்பள்ளி
ஐயர் கையது ஓர் ஐந்தலை நாகமே *5.36.7*

*12*
விழுது சூலத்தான் வெண்மழு வாட்படைக்
கழுது துஞ்சு இருள் காட்டகத்து ஆடலான்
பழுது ஒன்று இன்றிப் பைஞ்ஞீலிப் பரமனைத்
தொழுது செல்பவர் தம்வினை தூளியே *5.41.3*

*13*
மூன்று மூர்த்தியுள் நின்று இயலும் தொழில்
மூன்றும் ஆயின மூவிலைச் சூலத்தன்
மூன்று கண்ணினன் தீத்தொழில் மூன்றினன்
மூன்று போதும் என் சிந்தையுள் மூழ்குமே *5.89.3*

*14*
ஞாலத்தானை நல்லானை வல்லார் தொழும்
கோலத்தானைக் குணப்பெருங் குன்றினை
மூலத்தானை முதல்வனை மூவிலைச்
சூலத்தானை கண்டீர் தொழற்பாலதே *5.94.7*

*15*
பிணம் புல்கு பீறல் குரம்பை மெய்யாப் பேதப்படுகின்ற பேதைமீர்காள்
இணம் புல்கு சூலத்தர் நீலகண்டர் எண்தோளர் எண்நிறைந்த குணத்தி னாலே
கணம் புல்லன் கருத்துகந்தார் கச்சி உள்ளார் கழிப்பாலை மேய கபாலப்பனார்
மணம் புல்கு மாயக்குரம்பை நீங்க வழி வைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே
*6.12.7*

*16*
இயல்பாய ஈசனை எந்தை தந்தை என்சிந்தை மேவி உறைகின்றானை
முயல்வானை மூர்த்தியைத் தீர்த்தமான தியம்பகன் திரிசூலத்தன் நகையன்
கயல் பாயும் கண்டல் சூழ்வுண்ட வேலிக் கழிப்பாலை மேய கபாலப் பனார்
மயலாய மாயக் குரம்பை நீங்க வழிவைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே *6.12.8*

*17*
*பொன்மணிய பூங்கொன்றை மாலையானைப் புண்ணியனை வெண்ணீறு பூசினானைச்*
*சின்மணிய மூவிலைய சூலத்தானைத் தென்சிராப்பள்ளிச் சிவலோகனை*
*மன்மணியை வான்சுடலை ஊராய்ப் பேணி வல்எருதொன்று ஏறும் மறை வல்லானைக்*
*கல் மணிகள் வெண்டிரை சூழ் அந்தண் நாகைக் காரோணத்து எஞ்ஞான்றும் காண லாமே 6.22.7*

*18*
*கைம்மான மதகளிற்றின் உரிவையான் காண் கறைக்கண்டன் காண் கண்ணார் நெற்றியான் காண்*
*அம்மான் காண் ஆடரவு ஒன்று ஆட்டினான் காண் அனலாடி காண் அயில்வாய்ச் சூலத்தான் காண்*
*எம்மான் காண் ஏழுலகும் ஆயினான் காண் எரிசுடரோன் காண் இலங்கு மழுவாளன் காண்*
*செம்மானத்து ஒளியன்ன மேனியான் காண் திருவாரூரான் காண்என் சிந்தையானே 6.24.1*

*19*
*மலைவளர்த்த மடமங்கை பாகத்தான் காண் மயானத்தான் காண் மதியம் சூடினான் காண்*
*இலை வளர்த்த மலர்க் கொன்றை மாலையான் காண் இறையவன் காண் எறிதிரைநீர் நஞ்சு உண்டான் காண்*
*கொலை வளர்த்த மூவிலைய சூலத்தான் காண் கொடுங்குன்றன் காண் கொல்லை ஏற்றினான் காண்*
*சிலை வளர்த்து சரம் துரந்த திறத்தினான் காண் திருவாரூரான் காண் என் சிந்தையானே 6.24.9*

*20*
*தொட்டிலங்கு சூலத்தர் மழுவா ளேந்திச் சுடர்க்கொன்றைத் தாரணிந்து சுவைகள் பேசிப்*
*பட்டி வெள்ளேறேறிப் பலியும் கொள்ளார் பார்ப்பாரைப் பரிசழிப்பார் ஒக்கின்றாரால்*
*கட்டிலங்கு வெண்ணீற்றர் கனலப் பேசிக் கருத்தழித்து வளை கவர்ந்தார் காலை மாலை*
*விட்டிலங்கு சடைமுடியர் வேதநாவர் வெண்காடு மேவிய விகிர்தனாரே 6.35.6*

*21*
*மின் அளந்த மேல்முகட்டின் மேலுற்றான் காண் விண்ணவர்தம் பெருமான் காண் மேவில் எங்கும்*
*முன் அளந்த மூவர்க்கும் முதலானான் காண் மூவிலைவேல் சூலத்து என் கோலத்தான்  காண்*
*எண்அளந்து என் சிந்தையே மேவினான் காண் ஏவலன் காண் இமையோர்கள் ஏத்த நின்று*
*மண் அளந்த மால் அறியா மாயத்தான் காண் மாகடல்சூழ் கோகரணம் மன்னினானே 6.49.7*

*22*
இலையாரும்  சூலத்தான்   எண்தோளானே எவ்விடத்தும் நீயலாது இல்லை என்று
தலையாரக் கும்பிடுவார் தன்மையானே தழல் மடுத்த மாமேரு கையில் வைத்த
சிலையானே திருவானைக்காவுள் மேய தீயாடீ சிறுநோயால் நலிவுண்டுள்ளம்
அலையாதே நின்னடியே அடையப் பெற்றால் அல்லகண்டம் கொண்டடியேன் என் செய்கேனே    *6.62.8*

*23*
இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தினானை இறையவனை மறையவனை எண்குணத்தினானைச்
*சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடும் சடையானை விடையானைச் சோதி எனும் சுடரை*
*அரும்புயர்ந்த அரவிந்த அணிமலர்கள் ஏறி அன்னங்கள் விளையாடும் அகல் துறையின் அருகே*
கரும்புயர்ந்து பெருஞ் செந்நெல் நெருங்கி விளைகழனிக் கானாட்டு முள்ளூரில் கண்டு தொழுதேனே.   *7.40.3*

*24*
நெருப்புறு வெண்ணெயும் நீருறும் உப்பும் என இங்ஙனே
பொருப்புறு தோகை புலம்புறல் பொய் அன்பர் போக்குமிக்க
விருப்புறு வோரை விண்ணோரின் மிகுத்து நண்ணார் கழியத்
திருப்புறு சூலத்தினோன் தில்லை போலும் திருநுதலே               *8.2.315*

*25*
இருந்தனம் எய்தியும் நின்றும் திரிந்தும் கிடந்து அலைந்தும்
வருந்திய வாழ்க்கை தவிர்த்திடு போக நெஞ்சே மடவாள்
பொருந்திய பாகத்துப் புண்ணியன் புண்இயல் சூலத்து எம்மான்
திருந்திய போது அவன் தானே களையும் நம் தீவினையே              *11.185*

*26*
கணக்கிட்டுக் கொண்டிருந்து காலனார் நம்மை
வணக்கி வலைப்படா முன்னம்-பிணக்கின்றிக்
காலத்தால் நெஞ்சே கயிலாயம் மேவியநல்
சூலத்தான் பாதம் தொழு *11.358*

சென்னி, பாலில் இவை இரண்டும் கூட தேவார வைப்புத்தல வரிசையில் வரவேண்டியவை. சென்னி என்பது சென்னிமலை திருச்செங்கோடு ஈரோடு திருப்பூர் முதலியவற்றின் அருகு குன்றில் மேல் உள்ள முருகன் கோயில் அதனுள் பழநியில் உள்ளது போல் சிவன் கோயிலும் உள்ளது திருப்புகழ் பெற்றது தொடரும் தனி கருத்துரை காண்க.

பாலில் என்பது செந்தில் அன்பில் இடைமருதில் மயிலரப்பில் போல் இல் ஈற்று இடப்பெயராகும் பாலி என்பது ஓர்ஆறு அல்லது இன்றுள்ள பாலாறே ஆகலாம் திருமாற்பேறு எனும் பாடல்பெற்றத் தலம் பாலியின் தென்கரையில் உள்ளதாகவும் வடமுல்லைவாயில் திருவேற்காடு பாலியின் வடகரையில் உள்ளதாகவும் சேக்கிழார் குறித்துள்ளார். சங்கநூல் புறநானூறு 387 சேரமான் செல்வக்கடுங்கோ என்னும் மன்னனை குண்டுக்கண் பாலி ஆதனார் எனும் புலவர் பாடியுள்ளார். இங்கு பாலி என்பது ஓர் இடப்பெயரே. திரு நள்ளாற்றுப்புராணம் பாடிய புலவர் நாரதர் நளனிடம், "தென்னாடு சென்று தீர்த்தமாட வினைதீரும் எனக்காட்டும் பகுதியில் காளிந்தி சோணை ஆறுகள் காசி காளஞ்சனம் கலிங்கேச்சரம் அநந்தீசரம் துருசுஅறு பாலிவாய் சுரக்கண்டீசரம் கழுக்குன்றம் அண்ணமலை சிறீசயிலம் கவுதமீச்சரம் விருத்தாசலம் தீர்த்தகிரி முக்கூடல் சிதம்பரம் சீர்காழி புள்ளிருக்குவேளூர் திருவேண்காடு திருப்பனந்தாள் கடையூர் கோகர்ணம்" எனும் தலங்களைக் குறிக்கின்ற இடத்து பாலிவாய் சுரக்கண்டீசரம் என ஓர் தலத்தினைக் குறித்துள்ளதில் பாலிவாய் (=பாலிவாயில்/பாலிவாசல்) கண்டீச்சரம் எனும் ஈசன் கோயில் உள்ள ஓர் தலம் எனத்தெரிகின்றது.

தொடர்பு: மயிலை நூ த லோ சு / நூ.த.லோக சுந்தரம் (selvindls61@gmail.com)

# 9. சீர்காழி - புதுத்துறை - சிவன் கோயில்

***— துரை. சுந்தரம்***

***முன்னுரை:***

*இணையத்தில் அவ்வப்பொழுது வரலாறு, தொல்லியல், கல்வெட்டுகள் தொடர்பான செய்திகளைப் பார்க்கையில் சிலவற்றை என் கணினிப் பண்டாரத்தில் சேர்த்து வைப்பதுண்டு. அது போன்ற ஒரு பதிவை இன்று காண நேர்ந்தது. சிதைவுகளில் சிக்குண்டு கிடக்கும் சீர்காழிக் கோயில் ஒன்றைப் பற்றிக் கடம்பூர் விஜய் என்பவர் பதிவிட்டிருந்தார். கோயிலின் சிதைந்த பகுதிகள், கருவறையில் இருக்கை (பீடம்) ஏதுமின்றி எழுந்தருளியிருக்கும் இலிங்கத்திருமேனி, சில கல்வெட்டுகள் என நலிந்துவிட்டிருக்கும் சிவன் கோயிலின் தோற்றங்கள். மனம் வருந்தியது.*

கோயிலின் அழிவு நிலைத் தோற்றங்கள்



சீர்காழி - புதுத்துறை - சிவன் கோயில்
படங்கள் - கடம்பூர் விஜய்

*கோயில், நாகை மாவட்டத்தில் சீர்காழி வட்டத்தைச் சேர்ந்த புதுத்துறை என்னும் ஊரில் அமைந்துள்ளது.*

***கல்வெட்டுகளின் படங்கள் ஓரளவு தெளிவாக இருந்தன; அவற்றின் பாடங்கள் கீழுள்ளவாறு:***

படம்-1



1 . . . . (மன்)ற பாழ் . . . மாவும் விக்கிரம சோழ நல்லூற் கட்டளையில்
2 வெள்ளான்பற்று முன்பு ஒட்டுக்கொள்(ளா) . . . . ற் பாழிலுமுவற்பாழிலு மன்ற பாழிலு[ம்]
3 வாய்க்காலுக்கு வடக்கு . . . . . . சிவபாதசேகரநல்லூர்.... [நீ]க்கி

படம்-2



1 . . . . . வதிக்குக் கிழக்கு மதுராந்தக (வா)ய்க்காலுக்கு வடக்கு
2 . . . ழிலும் ஆறிடு படுகையிலும் பயிற்(கொ). . . வருகிற நிலத்திலே (புன்செய்)
3 [நீ]க்கி இதன் கிழக்கு (காட்சி) பங்கு இறையிலி . . . நிலம் . . விக்கிரம சோழ .

படம்-3



1 லூற் கட்டளையில் நாங்கூர் வதிக்கு கிழக்கும் மதுராந்தக வாய்க்காலுக்கு
2 வெள்ளான் பற்றில் புன்செய் . . . . . க்கு ஒட்டுப்படி காசு நா(லே)
3 லுக்குத் தெற்கு . . . . . . சதிரத்து தன்(மி) . . . . திப்புற இறை[யிலி]

படம்-4



1 கிழக்கு மதுராந்தக வாய்க்காலுக்கு வடக்கு (ந்)
2 க்கு ஒட்டுப்படி காசு நாலேகாலுங்
3 . . . திப்புற இறையிலி . . . . இதில் வடக்கடை[ய]

படம்-5



1 லூற் கட்டளையில் நாங்கூர் வதிக்(கு) கிழக்....
2 வெள்ளான் பற்றில் புன்செய் . . . க்கு
3 லுக்குத் தெற்கு . . . . சதிரத்து . . . . .

படம்-6



1 [வ]டக்கு நாலாங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து மேற்க[டை]
2 . . . . ங் கீழைப் பற்றத்திலுஞ் சாத்தன் குடி(யி) . . . . (தி)ருக்குருகா(வூ)
3 (வ)டக்கடைய . . . . றின கா . . . மறு. . . . . . குந்தவை

***கல்வெட்டுச் செய்திகள் - விளக்கம்:***

*துண்டு துண்டாகக் கிடைத்த கல்வெட்டு வரிகளிலிருந்து பெறப்படும் செய்திகளாவன: கல்வெட்டுகள் அமைந்துள்ள புதுத்துறைச் சிவன் கோயிலுக்கு நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. கோயிலின் பெயரோ, இறைவனின் பெயரோ இந்தத் துண்டுக்கல்வெட்டுகளில் காணப்படவில்லை. கொடையாக அளிக்கப்பட்ட நிலங்கள் யாவும் விளைவுக்கேற்ற நல்ல நீர் நிலங்களாக இருக்கவேண்டும் என்று கருதலாம். காரணம், கொடை நிலங்கள் ஆற்றுப்படுகையில் அமைந்திருந்தன என்று "ஆறிடு படுகை" என்னும் சொல் குறிக்கிறது. புன்செய் நிலம், பாழ் நிலம் (தரிசு நிலம்) ஆகியனவற்றை நீக்கியமை பற்றிய குறிப்பு கல்வெட்டில் வருகிறது. மேலும், மதுராந்தக வாய்க்கால், நாங்கூர் வதி (வதி=வாய்க்கால்) ஆகிய நீர்க்கால்களை ஒட்டிய நிலங்கள் என்னும் குறிப்பும் கல்வெட்டில் உள்ளது.*

*கொடை நிலம், விக்கிரமசோழ நல்லூர் கட்டளையில் இருந்து தெரிவு செய்யப்பட்டமை தெரிகிறது. கட்டளை என்பது, (விளைச்சல் வருவாய் அடிப்படையில்) தரம் பிரித்த நிலங்களைக் குறிக்கும். சிவபாத சேகர நல்லூர் பற்றிய குறிப்பும் உள்ளது. "நல்லூர்" என்னும் பெயருள்ள ஊர்கள் அனைத்தும், அரசன், தன்னுடைய சிறப்பு நிதியை ஒதுக்கி, வேளாண்மையில் பின் தங்கிய ஊர்ப்பகுதிகளை வளப்படுத்தி, அரசனின் பெயரையோ, அரசியர் பெயரையோ இட்டு உருவாக்கிய ஊர்களே. அவ்வகையில் இங்குள்ள கல்வெட்டில், விக்கிரமசோழநல்லூர், சிவபாதசேகரநல்லூர் ஆகிய ஊர்கள் குறிப்பிடப்பெறுகின்றன. இவற்றில், விக்கிரம சோழ நல்லூர், மேற்படி புதுத்துறையின் பழம்பெயராகவே இருக்கக்கூடும்.*

*அடுத்து, ஊர்களில் ஓடுகின்ற வாய்க்கால்களுக்கு அரச குடும்பத்தினர் பெயர் இடுவது வழக்கம். அவ்வகையில், மதுராந்தக வாய்க்கால் என்னும் பெயர் இங்குள்ள கல்வெட்டில் வருகின்றது. மதுராந்தகன், இராசராசனுக்கு முன் ஆட்சி செய்த உத்தம சோழனைக் குறிக்கும் பெயராகலாம். கல்வெட்டில் வருகின்ற குந்தவை பெயரும் இவ்வூர்ப் பகுதியிலிருந்த ஒரு வாய்க்காலைக் குறிப்பதாகலாம்.*

*கொடை நிலத்துக்கு வரி நீக்கம் அளிக்கப்பட்டதை "இறையிலி" என்னும் தொடர் சுட்டுகிறது. அரசுக்குச் செலுத்த வேண்டிய ஒப்பந்த வரிகள் சில "ஒட்டு" என வழங்கப்பட்டன. அவ்வகை "ஒட்டுப்படி" செலுத்தவேண்டிய நாலே கால் காசு வரி நீக்கப்பட்டதையும் கல்வெட்டு குறிப்பிடுகிறது.*

*வேளாண் நிலம், நீர்ப்பாசனத்துக்கு ஏதுவாகச் சிறு சிறு சதுரப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவற்றை இனம் காண எண்களும் கொடுக்கப்பட்டிருந்தன. இதனை, "நாலாஞ்சதிரம்" என்ற தொடரால் அறியலாம். வதி, வாய்க்கால் என்னும் பெயரில் அமைந்த பெரு வாய்க்கால்களை அடுத்துப் பயிர் வளர்க்கும் சதிரம் என்னும் வயல் கூற்றை ஒட்டி அமைக்கப்பட்ட சிறிய கிளை நீர்க் கால்கள் "கண்ணாறு" என*

*அழைக்கப்பட்டன. இவையும் எண்ணிக்கை கொண்டு அடையாளப்படுத்தப்பட்டன. கல்வெட்டில், ''நாலாங்கண்ணாறு'' என வருவதைக் காண்க.*

*கல்வெட்டில், திருக்குருகாவூர் குறிப்பிடப்படுகிறது. கொடை நிலம் அமைந்த பகுதி அல்லது வாய்க்கால்கள் அமைந்த பகுதி என்னும் வகையில் இவ்வூர் குறிப்பிடப்படுகிறது. திருக்குருகாவூர், திருவாலி நாடு என்னும் நாட்டுப்பிரிவில் அமைந்திருந்தது. விக்கிரம சோழ நல்லூரும் இதே திருவாலி நாட்டில் அமைந்திருந்தது. திருவாலி நாட்டை ஒட்டித் திருக்கழுமல நாடு அமைந்திருந்தது. திருக்கழுமலம் என்பது சீர்காழியின் பழம்பெயர். திருக்கழுமல நாடு, திருவாலி நாடு ஆகியன சோழர் கால நாட்டுப்பிரிவுகள் ஆகும். (பார்வை நூல் : இடைக்காலத் தமிழ்நாட்டில் நாடுகளும் ஊர்களும்-கி.பி.800-1300 - தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர்.)*

***கல்வெட்டின் காலம்:***

*உத்தம சோழன் (கல்வெட்டில் மதுராந்தகன்), இராசராசசோழன் (கல்வெட்டில் சிவபாதசேகரன்), விக்கிரம சோழன் ஆகியோர் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. இவர்களில் விக்கிரமசோழனே பின்னவன். இவன் முதலாம் குலோத்துங்க சோழனின் மகன் ஆவான். இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1118-1135. விக்கிரமசோழனின் பெயரால் அமைந்த விக்கிரம சோழ நல்லூர் கல்வெட்டில் குறிக்கப்படுவதால், கல்வெட்டு அமைந்த ஊரும் கோயிலும் அவன் காலத்திலிருந்தே இருந்துள்ளமை புலப்படும். அரசன் பெயரும் அரசனின் ஆட்சியாண்டும் குறிக்கப்பெறும் வேறு கல்வெட்டுகள் கிடைக்கும் வரை கல்வெட்டின் காலம் விக்கிரம சோழனின் ஆட்சிக்காலத்துக்குப் பிந்தையதாகக் கணக்கிட இயலாது. எனவே, கல்வெட்டின் காலம் விக்கிரம சோழனின் ஆட்சிக்காலம் என்றே கொள்ளலாம். அதாவது, கல்வெட்டு, கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்னும் முடிவுக்கு வரலாம். கல்வெட்டின் எழுத்தமைதியும், இந்தக் காலகட்டத்தை ஒட்டியதாக அமைந்துள்ளது.*

***முடிவுரை:***

*புதுத்துறை ஊரின் நாட்டார் பெருமக்களும், அறநிலையத்துறையினரும், தொல்லியல் துறையினரும் இணைந்து இக்கோயில் புத்தாக்கம் பெற்றிட வழிவகை செய்யவேண்டும் என விழைவோம். கடம்பூர் விஜய் குறிப்பிடுவதுபோல், சிவனின் இடுக்கண் களைய நிதியுடையோர் களம் இறங்குவார்களாக.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 10. மூன்று பள்ளிப்படை கோவில்கள்

***— மா. மாரிராஜன்***

*மூன்று பள்ளிப்படை கோவில்களையும் ஒரே நாளில் சென்று பார்க்க வேண்டும், வந்து வழிகாட்டுங்கள் என்ற நண்பர்களின் அன்புக் கட்டளையை ஏற்றாயிற்று.*

***1. பஞ்சவன்மாதேவி பள்ளிப்படை***
***2. இராஜராஜன் பள்ளிப்படை கைலாசநாதர் கோவில்***
***3. திருப்புறம்பியம்***
*இம்மூன்றும் எங்கள் இலக்கு..*

*ஒரு நெருடல், இக்கோவில்களில் இரண்டு எப்போதும் பூட்டியே இருக்குமே, புகைப்படம் எடுக்க விடமாட்டார்களே. பழைய நினைவுகள், கசப்பான பல பழைய அனுபவங்கள் நினைவுக்கு வந்தாலும் திட்டமிட்டபடி பயணத்தைத் துவங்கினோம்.*

*.. இம்முறை எங்களுக்குக் கிடைத்தது பல இனிய அனுபவங்கள்..*

***1. பஞ்சவன்மாதேவி பள்ளிப்படை:***

*தாராசுரத்திலிருந்து பட்டீஸ்வரம் வழியாகப் பஞ்சவன் மாதேவி பள்ளிப்படையை முதலில் அடைந்தோம். வழக்கம்போல் கோவில் பூட்டியிருந்தது. வாசலில் அர்ச்சகரின் தொலைபேசி எண் எழுதப்பட்டிருந்தது. தொலைபேசியில் அழைத்தோம், 10 நிமிடத்தில் வருகிறேன் என்ற அர்ச்சகர் சரியாக 5 நிமிடத்தில் வந்தார். முதல் வியப்பு !!*

*அமைதியான சூழல். பொறுமையாகக் கோவிலை வலம் வந்து, கட்டுமானம், சிற்பங்கள், கல்வெட்டு என பார்த்துப் பார்த்து படம் எடுத்தோம். எந்தத் தடையும் இல்லை. அர்ச்சகரும் எங்களுடன் வலம் வந்து அவருக்குத் தெரிந்த சில விடயங்களை எங்களுக்குக் கூறினார். எங்களிடம் சில ஐயங்களை எழுப்பி விடைகாண முயன்றார்.*

*பள்ளிப்படை கோவிலில் அம்மனுக்கு தனிச் சன்னிதி இருப்பது சாத்தியமா என்னும் அவரது கேள்விக்கு எங்களிடம் பதில் இல்லை.*

*கோவிலினுள் உள் நுழைகிறோம். அற்புதமான பழுவூர் நந்தியையும், வியப்பான துவார பாலகர்களையும் பார்த்து, படம் எடுத்தோம். எந்தத் தடையும் இல்லை. கருவறை வாயிலில் அமர்ந்து இறைவனைப் பிரார்த்திக்கும் பொழுது*

*அர்ச்சகரின் அதி அற்புதமான குரலில் சுத்தத் தமிழில் பதிகங்கள் கேட்டது அடுத்த வியப்பு !!*



*தீபாதரணையை கண்களில் ஒற்றி தட்சணையாக தட்டில் பணம் போடமுயன்றோம். பணத்தைப் போட அவர் அனுமதிக்கவில்லை. அடுத்த .. அடுத்த.. வியப்பு !!!!*

*எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவர் தட்சணையாக  பணம் வாங்க மறுத்தார். பிறகு, கோவிலுக்கு எண்ணை வாங்கப் பயன்படுத்துங்கள் என்று கூறி பணத்தைக் கொடுத்தோம். அவருடன் சேர்ந்து புகைப்படம் எடுத்தோம். விடைபெற்றுப் புறப்படும்போது, மருத்துவர் கலைக்கோவன் ஐயா எழுதிய மலைக்க வைக்கும் மாடக்கோவில்கள் என்னும் புத்தகத்தை பரிசாகக் கொடுத்தார்.  அடுத்த வியப்பு  !!!!*

*இப்படியும் ஒருவர், போற்றுதலுக்குரியவர்.*

***2. இராஜராஜன் பள்ளிப்படை கைலாசநாதர் கோவில்:***

*உடையாளூர் சென்று இராஜராஜனின் பள்ளிப்படை என்று சொல்லப்படும் ஒட்டத்தோப்பு லிங்கத்தைப் பார்த்து விட்டு, பால்குளத்தம்மன் கோவில் சென்று பிரபலமான அந்தக் கல்வெட்டை படம்பிடித்தோம். அந்த அற்புதமான கல்வெட்டுத்தூணை இரும்பு பட்டையால் நெறித்து ஆணி அடித்து, வெள்ளை வர்ணம் பூசி பாதுகாப்பு செய்துள்ளார்கள்.*

*குளத்தின் அருகே உள்ள கைலாசநாதர் ஆலயத்திற்கு விரைந்தோம். வழக்கத்திற்கு மாறாகக் கோவில் திறந்து இருந்தது. முதல் வியப்பு !! வாங்கோ.. வாங்கோ.. என்ற அர்ச்சகரின் அன்பான வரவேற்பு, அடுத்த வியப்பு !!*

*இதற்கு முன் மூன்று தடவை இக்கோவிலுக்கு வந்தும், கருவறையில் உள்ள அந்த அற்புதமான சோழ அரசன் அரசியின் சிற்பம், மற்றும் காலடியில் அடியார்களைக் கொண்ட பிரத்யோகமான துவாரபாலகர் சிற்பம்*
*இவற்றைப் புகைப்படம் எடுக்க அனுமதி கிடைத்ததே இல்லை. ஆனால், இம்முறை தாராளமாக படம் எடுக்கலாம் என்று அனுமதி கிடைத்தது. மிதமிஞ்சிய உற்சாகத்துடன் படம் பிடித்தோம்.*







*அருமொழிதேவ வளநாட்டு, திருநரையூரு நாட்டு, சிவபாதசேகரமங்களத்து, உடையார் சிவபாதசேகர ஈஸ்வரமுடையார்..*

என்னும் கல்வெட்டு வாசகத்தைத் தேடி படித்து படம் பிடித்து பரவசமானோம். கல்வெட்டு வாசகங்கள் அடங்கிய தொகுப்பு கையில் இருந்ததால் சாத்தியமாயிற்று. ஏதோ ஒன்றைச் சாதித்த நிறைவுடன் திருப்புறம்பியம் நோக்கி விரைந்தோம்.

***3. திருப்புறம்பியம்:***

பிற்காலச் சோழவரலாற்றில் தவிர்க்கவே இயலாத ஒரு பெயர் திருப்புறம்பியம். இங்கு நடந்த பெரும் போரும், போரின் விளைவால் அமைந்த சோழர்களின் ஏற்றமும், போரில் இறந்த கங்கமன்னன் பிரித்வீயின் பள்ளிப்படையும், வரலாற்று ஆர்வலர்கள் அனைவரும் அறிந்த ஒன்றுதான். பொன்னியின் செல்வன் வாசித்தவர்களுக்கு, திருப்புறம்பியம் வெகு பரிட்சயமாக இருக்கும். திருப்புறம்பியர் போர், விஜயாலரின் வீரம், பள்ளிப்படை காட்டில் நடக்கும் நிகழ்வுகள் என்று பல சம்பவங்கள்.

இவ்விடத்தை இரவில் பார்க்கவேண்டும் என்ற ஆவலில், சரியாக இருட்டிய பிறகு திருப்புறம்பியத்தை அடைந்தோம். குறிப்பிட்டத் தூரத்திற்கு மேல் வாகனம் செல்லாது. நடைப்பயணம்தான்.அவ்வூரைச்சேர்ந்த நண்பர் திரு. செந்தில் வழிகாட்ட அடர்ந்த காட்டிற்குள், கும்மிருட்டில் நடந்தோம்.. நிஜமாலுமே ஒரு திகிலான அனுபவம்.

தற்போது ஐயனார் கோவில் என அழைக்கப்படும் பள்ளிப்படைக் கோவிலை இருட்டில், செல்போன் வெளிச்சத்தில் பார்த்தது பரவசமான ஒன்று. நம்முடைய பல கேள்விகளுக்கு தக்கச் சான்றுகளுடன் திரு.செந்தில் விளக்கம் அளித்தார்.



பொன்னியின் செல்வன் புதினத்தில் வரும் பள்ளிப்படை காட்சிகளை இவ்வூரைச் சேர்ந்தவர்களைக் கொண்டு ஒரு நாடகமாக நடத்துகிறார். இப்பள்ளிப்படையிலேயே எதார்த்தமாக உயிரோட்டமாக அக்காட்சிகள் நாடகமாகின்றன. எங்கள் குழுவிற்கும் ஒரு காட்சி நடத்துங்கள் என்று அவரிடம் வேண்டுகோள் வைத்தோம்..

ஒரேநாளில் மூன்று பள்ளிப்படை கோவில்கள்.. மறக்க இயாலா அனுபவம்.

தொடர்பு: மா. மாரிராஜன் (marirajan016@gmail.com)

# 11. இராஜசிம்மேசுவரம் - காஞ்சி கைலாசநாதர் கோயில்

***— துரை.சுந்தரம்***

***முன்னுரை:***

*நண்பர்கள் திரு. வீரராகவன், திரு. சுகவன முருகன் ஆகிய இருவரின் தொல்லியல் சார்ந்த பணிகளில், கல்லூரி மாணவர்களுக்குக் கல்வெட்டு எழுத்துகள் பயில்விக்கும் பணியும் ஒன்று. அண்மையில், அவர்கள் காஞ்சியில் சங்கரா கலை அறிவியல் கல்லூரியில் நடத்திய கல்வெட்டுப் பயிற்சி வகுப்புகளில் கட்டுரை ஆசிரியரையும் ஈடுபடுத்தினர். கிரந்த எழுத்துகளை மாணவர்க்கு அறிமுகம் செய்துவைக்கும் பணி. அது போழ்து, காஞ்சியில் உள்ள கைலாச நாதர் கோயிலின் வரலாற்றுச் சிறப்பை எடுத்துக் கூறும் நோக்கில் மாணவர்களை அழைத்துச் சென்ற நிகழ்வில், கட்டுரை ஆசிரியருக்கும் காஞ்சிக்கோயிலையும் அங்கிருக்கும் கிரந்தக் கல்வெட்டுகளையும் கண்டு மகிழும் வாய்ப்பு கிட்டியது. அது பற்றிய ஓர் பகிர்வு இங்கே.*



உதவி : இணையம்

***கல்வெட்டியல் அறிஞர் ஹுல்ட்ஸ் (E.HULTZSCH):***

*1886-ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், 21-ஆம் நாள்; முன்னாள் மதராஸ் அரசின் கல்வெட்டு ஆய்வாளராக (EPIGRAPHIST TO THE GOVERNMENT OF MADRAS) ஹுல்ட்ஸ் (E.HULTZSCH) அவர்கள் பணியேற்றதும், அடுத்த ஆண்டே 27-09-1887 முதல் 19-10-1887 வரை காஞ்சியில் தங்கியிருந்து கைலாசநாதர் கோயில் கல்வெட்டுகளைத் தாமே*

*படியெடுத்ததாகக் குறிப்பிடுகிறார். 1883-ஆம் ஆண்டு டாக்டர் பர்கஸ் (Dr. BURGESS) அவர்கள் இக்கோயிலைக் கண்டு சில கருத்துகளை முன்வைத்துள்ளார். அதுவரை, மற்ற கோயில்களோடு ஒப்பிடுகையில் அவ்வளவு முதன்மை பெறாத நிலையில் கருதப்பட்ட கைலாசநாதர் கோயில் பல்லவர் கலைப்பாணியில் கட்டப்பெற்றது என்பதோடு, பெரும் எண்ணிக்கையில் பல்லவர் எழுத்தில் (கிரந்தம்) சமற்கிருத மொழியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளைப் பெற்றிருக்கிறது எனக்கூறியுள்ளார். 1884-85 –ஆம் ஆண்டில் எஸ்.எம். நடேச சாஸ்திரி அவர்கள் இக்கோயிலின் பல்லவர் கல்வெட்டுகளைப் படியெடுத்துள்ளார். ஹுல்ட்ஸ் (E.HULTZSCH) அவர்கள், நடேச சாஸ்திரியார் எடுத்த படிகளை 1887-ஆம் ஆண்டில் படித்து எழுத்துப்பெயர்ப்பு (TRANSLITERATION), மொழிபெயர்ப்பு (TRANSLATION) ஆகிய பணிகளைச் செய்துள்ளார். அவர் இங்குள்ள கல்வெட்டுகளைப் பற்றிக் கூறும் பல்வேறு செய்திகளைக் கீழே ‘கோயிலின் கல்வெட்டுகள்’ தலைப்பில் காண்க.*

**பல்லவ மன்னன் இராஜசிம்மனும் கைலாசநாதர் கோயிலும்:**

*காஞ்சி கைலாசநாதர் கோயில் பல்லவ மன்னன் இராஜசிம்மன் கட்டுவித்தது. மகேந்திரவர்மன் முதன்முதலில் செங்கல், சுண்ணம், மரம், உலோகம் ஆகியவை இன்றிக் கோயில் கட்டுவித்த பெருமையைக் குடைவரைக் கோயில் எழுப்பிப் பெற்றான் எனில், முதல் கட்டுமானக் கற்கோயிலைக் கட்டிய பெருமையை இராஜசிம்மன் கைலாசநாதர் கோயிலைக் கட்டுவித்துப் பெறுகிறான். இக்கட்டுமானக் கோயிலின் காலம் கி.பி. 685-705. கோயிலின் அடித்தளம் (அதிட்டானப்பகுதி) கருங்கல்லால் அமைக்கப்பெற்றது. அதன்மேல் எழுப்பப்பட்ட கட்டுமானமும், பிற சிற்பங்களும் மணற்கல்லால் அமைக்கப்பட்டவை. சுற்றாலை முழுதுமாக ஐம்பத்தெட்டு திருமுன்களை (சன்னதி) உடைய தனிக்கோயில்களைக்கொண்டு தனித்த அழகு பெற்ற கோயிலாக இக்கோயில் திகழ்கிறது. கட்டுமான அழகும், சிற்பக் கலை அழகும் பெற்ற இக்கோயிலின் தோற்றத்தில் மகிழ்ந்துபோன சோழப்பேரரசன் முதலாம் இராசராசன் இக்கோயிலுக்குப் பலமுறை வருகை தந்ததாகவும், தஞ்சைப் பெருங்கோயிலை எழுப்ப இக்கோயிலே ஓர் உந்துதலை அவனுக்கு அளித்ததாகவும் கூறுவர். கோயிலில் உள்ள கோட்ட அமைப்பும், கோட்டங்களில் காணப்பெறும் சிற்பங்களும் இக்கூற்று மெய் என்பதாக நம்மை உணரவைக்கின்றன. தஞ்சைக் கோயில் சிற்பங்களைக் காண்பதுபோல உணர்கிறோம். பல்லவ அடிச்சுவட்டைச் சோழன் தொடர்ந்தமை கண்கூடாகத் தெரிகிறது. இங்குள்ள கல்வெட்டுகளில், இக்கோயிலின் பெயர் “இராஜசிம்ம பல்லவேசுவரம்” என்றும், “இராஜசிம்மேசுவரம்” என்றும் குறிப்பிடப்படுகிறது.*

*ஐம்பத்தெட்டு தனிக்கோயில்களையும் சுற்றிவருகையில் ஒரு வெள்ளோட்டப் பார்வையாகவே சிற்பக் கலை அழகினைக் கண்டு மகிழ முடிந்தது. முழுதும் கண்டு மகிழப் பல நாள்கள் வந்து போகவேண்டும். ஒரு கலைக்கருவூலமாகத் திகழும் இக்கோயிலில் பல்லவப்பாணியை நிலை நிறுத்தும் சிம்மச் சிற்பங்களும், இரு சிம்மங்களுக்கிடையில் உள்ள சிறு இடைவெளியில் அமைக்கப்பட்ட சிற்பங்களும், கோட்டச் சிற்பங்களும் – கோட்டச் சிற்பங்களில் சிவனின் பல்வேறு தோற்றங்களும்,*

*தொல்கதைகளில் வரும் நிகழ்ச்சிகளை விளக்கும் வேறு பல சிற்பங்களும் - நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. சிற்பங்கள் அனைத்தையும் ஆய்வு நோக்கில் பார்வையிட்டுப் பலர் நூல்கள் எழுதியிருப்பர். அவற்றைப் பெற்று அவற்றின் துணையுடன் கோயிலின் முழு அழகையும் சிறப்பையும் கண்டுணரக் காலம் வேண்டும்.*

***கோயிலின் கல்வெட்டுகள்:***

*கோயிலின் அதிட்டானப்பகுதி முழுதும் கருங்கல்லால் அமைக்கப்பட்டது முன்னரே சுட்டப்பட்டது. இக்கருங்கல் பகுதி முழுதும் பெரும்பாலும் கல்லெழுத்துகள் காணப்படுகின்றன. இக்கருங்கல் பகுதி ஜகதி என்னும் உறுப்பாகவும், இதன் மேல் பகுதி – மணற்கல்லால் அமைக்கப்பட்டது - குமுதப்பகுதியாகவும் தோன்றுகிறது. (இந்தக் குறிப்புகள் உறுதி செய்யப்படவேண்டியவை. பார்வையிடும் நேரத்தில் விரைவாகக் கல்வெட்டுப் பகுதிகளையும், ஆங்காங்கே சில பல சிற்பங்களையும் ஒளிப்படம் எடுக்கும் ஓர் ஓட்டத்தில், கட்டிடக் கலை நுணுக்கங்களில் எல்லாம் உள்ளம் ஊன்றவில்லை.) கல்லெழுத்துகள் அனைத்தும் கிரந்த எழுத்துகள் என்பதே இங்கு குறிக்கப்படவேண்டுவது. பல்லவ கிரந்த எழுத்துகள் தனித்தன்மையைப் பெற்றவை. தொடக்கத்தில் காணப்படும் சில கல்வெட்டு எழுத்துகள், எழுத்துகளாகத் தோற்றம் காட்டா. ஓவிய வடிவில் அவை உள்ளன. மற்ற கல்வெட்டுப்பகுதிகள், படிக்கும் வண்ணம் எழுத்துகளைப் பெற்றிருந்தாலும், அவையும் ஓர் ஓவிய வடிவைக்கொண்டுள்ளன எனலாம்.*

*கோயிலின் ஒரு கல்வெட்டு பல்லவர் குடிவழியைக் குறிப்பிடுகிறது...*

***[பிரம்மன்]***
***ஆங்கீரஸ***
***பி3ருஹஸ்பதி***
***ச0ம்யு***
***ப4ரத்3வாஜ***
***துரோண***
***அச்0வத்தாமன்***
***பல்லவ (பல்லவர் குடிமரபின் முதல் தோன்றல்)***

*இதே கல்வெட்டு, இரணரஸிக(ன்) என்னும் அரசனை அழித்தவன் உக்3ரத3ண்டன் எனவும், உக்3ரத3ண்டனின் மகன் இராஜசிம்மன் எனவும் குறிக்கிறது. இன்னொரு கல்வெட்டு, முதல் துணைக்கோயிலின் பெயர் ''நித்ய விநீதேச்0வர(ம்)'' என்று குறிக்கிறது. மற்றொரு கல்வெட்டு, சிவனுக்கான சிறு கோயிலைக் (மூன்றாம் துணைக்கோயில்) கட்டுவித்தவர் ''ரங்கபதாகை'' என்பதாகவும், இவர் ''காலகாலா'' என்னும் விருதுப்பெயரையுடைய பல்லவ அரசன் ''நரசிம்மவிஷ்ணு''வின் அரசியார் என்பதாகவும் குறிக்கிறது. மீதமுள்ள கல்வெட்டுகள், இராஜசிம்மனின் நூற்றுக்கணக்கான விருதுப்பெயர்களைத் தாங்கியுள்ளன. இவ் விருதுப்பெயர்கள்*

*நான்கு அடுக்குகளில் பொறிக்கப்பட்டுள்ளன. கருங்கல் பகுதியில் ஓர் அடுக்கும், மணற்கல் பகுதியில் மூன்று அடுக்குகளும் இப்பெயர்களைக் கொண்டுள்ளன. கருங்கல் அடுக்கிலும், மணற்கல் அடுக்குகளில் ஒன்றிலும் மட்டும் எழுத்துகள் படிக்கும் வண்ணம் உள்ளன. மற்றவை அழிந்துவிட்டன.*

***இராஜசிம்மனின் விருதுப்பெயர் தாங்கிய கல்வெட்டுகள்:***

*அதிட்டானப்பகுதியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் இராஜசிம்மனின் விருதுப்பெயர்களைத் தாங்கியுள்ளன. மொத்தம் இருநூறு விருதுப்பெயர்களுக்கு மேல் உள்ளன. அனைத்தும் சமற்கிருதப் பெயர்கள்; பல்லவ கிரந்தத்தில் எழுதப்பட்டவை. எடுத்துக்காட்டுக்காகக் கீழே சில பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.*

| <u>விருதுப்பெயர்</u> | <u>பெயரின் விளக்கம்</u> |
|---|---|
| அத்யந்தகாம | எல்லையற்ற விருப்பு |
| ரணஜய | போரில் வெற்றி |
| அபி4ராம | அன்பு |
| அபராஜித | வெல்லற்கரிய |
| அமித்ரமல்ல | பகைவருக்கு மல்லன் |
| அதிரணசண்ட | போரில் கடும் வலிமை |
| ஆஹவ கேசரி | போரில் சிங்கம் |
| காஞ்சி மகாமணி | காஞ்சியின் அணிகலன் |
| நித்யவர்ஷ | (என்றும்) மழை போல் கொடை |
| ஸங்க்ராம ராம | போரில் இராமன் |
| கலாசமுத்3ர | கலைகளில் கடல் |
| பார்த்த விக்ரம | வலிமையில் பார்த்தன் (அர்ஜுனன்) |
| பு4வநி பா4ஜந | உலகுடைய |
| அச்0வப்ரிய | புரவிப் பிரியன் |
| இதிஹாசப்ரிய | புராண, இதிகாசங்களில் விருப்பு |
| ஆதோத்3ய தும்பு3ரு | இசைக்கருவிகளில் தும்புருவை ஒத்த |
| நாக3ப்ரிய | யானைப் பிரியன் |
| காவ்யப்ரபோ3த4 | காவியங்களுக்கு உயிரூட்டும் |
| வீணா நாரத3 | வீணையில் நாரத3ர் |
| ச0ங்கர ப4க்த | சிவனடியான் |
| ஈச்0வர ப4க்த | சிவனடியான் |
| இப4வத்ஸராஜே | யானையைப்பற்றிய அறிவில் வத்சராசனை ஒத்த |
| இப4வித்4யாத4ர | யானையைப்பற்றிய அறிவில் வல்ல |

***பார்வையிட்ட சில கல்வெட்டுகள்:***

*கோயிலில் நேரடியாகப் பல கல்வெட்டுகளை ஒளிப்படம் எடுத்தவற்றுள் சில கல்வெட்டுப் பொறிப்புகளை ஹுல்ட்ஸ் அவர்களின் மொழிபெயர்ப்புச்சொற்களில் இனம் காண இயன்றது. அவை இங்கு சிறியதோர் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன.*

### 1. ஸ்ரீ அத்யதா3ர

ஸ்ரீ அத்யதார






*"அத்யதா3ர"* என்னும் விருதுப்பெயரை *"The extremely Noble"* என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார். *"அத்ய"* என்பது நாம் பெரும்பாலும் பயன்படுத்தும் *"அதிகம்"* என்னும் சொல்லின் வடிவம் என்று புலனாகிறது.

பல்லவ கிரந்தம் தனித்தன்மை பெற்றது என முன்னரே பார்த்தோம். ஒன்றுக்கு மேற்பட்ட வடிவங்களும் அவ்வெழுத்துகளில் உண்டு. *"அ"* எழுத்தும் இரு வகையாக எழுதப்படுகின்றது. கீழே காண்க.



இவை எளிய, இயல்பான வடிவங்கள்; கைலாசநாதர் கோயில் கல்வெட்டு எழுத்துகள் மிகவும் அழகுணர்வோடு ஓவியத்தின் வடிவ அழகினைச் சேர்த்து எழுதப்பட்டவை.

பல்லவர் வடபுலத்துச் சாதவாகனருடன் தொடர்பு கொண்டவர்கள். சாதவாகனரின் மேலாண்மையை ஏற்று அவரின் கீழ் ஆட்சி செய்த குறு மன்னர்கள். சாதவாகனரின் எல்லைப் புறக் காவலர்களாகவும் பதவியில் இருந்தவர்கள். காஞ்சியைக் கைப்பற்றிய பின்னரும் பல்லவ அரசர்கள் வடபுலத்துத் தலைநகர்களில் இருந்தவாறே பல செப்பேடுகளை வெளியிட்டுள்ளனர். இச்செப்பேடுகள் பெரும்பாலும் சமற்கிருத மொழியில், வடபுலத்தில் வழக்கிலிருந்த எழுத்துகளில் எழுதப்பட்டவை. இவ்வெழுத்துகள் கி.பி. நான்காம் நூற்றாண்டு அளவில் வழக்கில் இருந்தவை. அசோகர் பிராமி எழுத்துகள் வளர்ச்சியுற்று வடிவ மாற்றம் பெற்ற எழுத்துகள். கி.பி. நான்காம் நூற்றாண்டில் குப்தர்கால எழுத்துப் பட்டியல் பல்லவர் பயன்படுத்திய எழுத்துகளோடு ஒத்துப்போகின்றன. மகேந்திர பல்லவனுக்கு முன்பு இந்நிலைமை. அவ்வகையில், கி.பி. நான்காம் நூற்றாண்டில், தமிழ் பிராமியின் வளர்ச்சி நிலையைக் கட்டிலும் வடபுலத்துப் பிராமியின் வளர்ச்சி மிகுதி என்பது புலனாகிறது. இந்த வடபுலத்து எழுத்துகளின் தாக்கத்தாலேயே கிரந்த எழுத்துகளைப் பல்லவர் உருவாக்கியுள்ளனர் எனலாம். இந்த ஒற்றுமையைக் கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகள் ஒருவாறு உணர்த்தும்.

## *2. ஸ்ரீ உக்3ரப்ரதாப*

உக்ரப்ரதாப






ஸ்ரீ உக்3ரப்ரதாப என்னும் விருதுப்பெயரை *"He who is endowed with terrible bravery"* என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார். உக்கிரம், பிரதாபம் ஆகியவை நம் இயல்பு வாழ்க்கையில் நமக்கு அறிமுகமாயுள்ள சொற்களே.

## *3. ஸ்ரீ உந்நதராம*

ஸ்ரீ உந்நதராம





ஸ்ரீ உந்நதராம என்னும் விருதுப்பெயரை *"The exalted and lovely"* என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார். இங்கு, "ராம" என்னும் சொல், இராமனைக் குறிக்கவில்லை என்றாகிறது.

### *4. ஸ்ரீ உக்3ரவீர்ய்ய*

ஸ்ரீ உக்ரவீர்ய்ய



ஸ்ரீ உக்ர வீர்ய்ய என்னும் விருதுப்பெயரை *"He who possesses terrible prowess."* என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார். வீரியம் என்னும் சொல்லும் நமக்கு அறிமுகமாயுள்ள சொல்லே.

### *5. ஸ்ரீ உதி3தோதி3த*

ஸ்ரீ உதிதோதித



*ஸ்ரீ உதிதோதித என்னும் விருதுப்பெயரை " He who is rising ever and ever" என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார். உதித் என்பது உதயம் என்னும் எழுச்சியைக் குறிக்கும் வட சொல். இரண்டு முறை "உதித்" என்பதால் மீண்டும் மீண்டும் எழுச்சியுறுகின்ற என்னும் பொருள் அமைந்துள்ளது எனலாம்.*

### *6. ஸ்ரீ அநுநய ஸாத்4ய*

ஸ்ரீ அநுநயஸாத்ய






*ஸ்ரீ அநுநயஸாத்4ய என்னும் விருதுப்பெயரை "He who is to be conquered (only) by submissiveness" என ஹுல்ட்ஸ் மொழியாக்கம் செய்துள்ளார்.*

### *7. ஸ்ரீ ராஜஸிம்ஹ - ஸ்ரீ அத்யந்த காம*

ஸ்ரீ ராஜசிம்ஹ - ஸ்ரீ அத்யந்தகாம



இக்கல்வெட்டுப்படத்தில், மணற்கல்லின் தேய்மானம் காரணமாக முழுச் சொற்களும் புலப்படவில்லை.

### *8. ஸ்ரீ ராஜஸிம்ஹ*

ஸ்ரீ ராஜசிம்ஹ



இக்கல்வெட்டை அடையாளம் காட்டியவர் கோயிலில் காவல் பணியில் இருந்த தனியார் காவலர் ஆவார். கட்டுரை ஆசிரியர் சுற்றாலையில் கல்வெட்டுகளை ஒளிப்படம் எடுத்துக்கொண்டிருந்ததைப் பார்த்து, 'ராஜஸிம்ஹன்' பெயர் காணப்படுகின்ற கல்வெட்டைக் காண்பிப்பதாக அழைத்துச் சென்று காட்டினார். இது

*எப்படி அவரால் முடிந்தது என்னும் கேள்விக்கு அவர் தந்த விடை வியப்பை அளித்தது. தொல்லியல் அறிஞர்*

*திரு. நாகசாமி அவர்கள் இக்கல்வெட்டைச் சுட்டிக்காட்டி விளக்கியதை நேரில் கண்டு உள்ளத்தில் பதிவு செய்துவிட்டார் அக்காவலர் !!!*

### *9. ஸ்ரீ உந்நதராம*

ஸ்ரீ உந்நதராம
பூவேலைப்பாடுகளுக்கிடையே எழுத்துகள் (ஒளிப்படம் உதவி : swamisblog)



மாணவர்களுடன்



***துணை நின்ற நூல்கள்:***


1 தென்னிந்தியக் கல்வெட்டுகள் - தொகுதி-*1*

*2 INDIAN EPIGRAPHY AND SOUTH INDIAN SCRIPTS - By C. SIVARAMAMURTI*

*3 HISTORY OF THE PALLAVAS OF KANCHI - By R.GOPALAN*



தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.

*doraisundaram18@gmail.com,* அலைபேசி *: 9444939156.*

## 12. பெண்ணையாற்றுத் திருவிழா

***— சிங்கநெஞ்சம் சம்பந்தம்***

*“எத்தனைக் கோடி இன்பம் வைத்தாய் இறைவா” என்று பாரதி பாடியது, பெண்ணையாற்றுத் திருவிழாவில்தான் இருக்கும் என்று பள்ளி நாட்களிலும் கல்லூரி நாட்களிலும் நான் நினைத்ததுண்டு. அவ்வளவு குதுகலமாக இருக்கும் அந்தத் திருவிழா. தென்பெண்ணையாற்றின் கரையில் அமைந்துள்ள கிராமங்களிலும், நகரங்களிலும் தை மாதம் 5 ஆம் தேதி நடைபெறுகிறது இந்த விழா. அந்த நாளன்று, கங்கையாறு பெண்ணையாற்றில் வந்து குளிப்பதாக ஒரு புராணக் கதை.*

*கர்நாடக மாநிலத்தில் உருவாகும் தென்பெண்ணையாறு, கிருஷ்ணகிரி ,அனுமன் தீர்த்தம், சாத்தனூர், ஆதித் திருவரங்கம், திருக்கோவிலூர், கண்ட்ரக்கோட்டை வழியே பாய்ந்து, கடலூருக்குச் சற்று வடக்கே கடலில் கலக்கிறது. கடலூர் மாவட்டத்தில் கண்ட்ரக்கோட்டையிலும், கடலூரிலும் இந்த விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.*

*கங்கையின் புனிதம் பெண்ணையில் கலப்பதால் அந்தப் புனிதத்தை, புண்ணியத்தைத் தமதாக்கிக் கொள்ளச் சுற்று வட்டாரங்களிலிருந்து பக்தர்கள் திரளாக வந்து ஆற்றில் நீராடி மகிழ்வர். மக்கள் மட்டுமல்ல அந்தப் பகுதிகளில் உள்ள திருக் கோவில்களிலிருந்து உற்சவ மூர்த்திகளும் வந்து நீராடும் காட்சியை பக்தர்கள் பரவசத்துடன் கண்டு களிப்பர்.. கடலூரைப் பொறுத்தவரை,. போகி, பொங்கல், மாட்டுப் பொங்கல், கரிநாள் (காணும் பொங்கல்) வெறும் நாள், திருநாள் எனப் பொங்கல் பண்டிகை ஆறு நாட்கள் நடைபெறும்.*

*பெண்ணையாற்றுத் திருநாளன்று, வெள்ளை வெளேரென்று விரிந்திருக்கும் ஆற்றுப் படுகையில் காற்றாடி (பட்டம்) போட்டி மிகச் சிறப்பாக நடைபெறும். அந்தப் போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெறுவதற்காக, மாஞ்சா போடும் வேலை வெறு நாளில் நடைபெறும். பொங்கலுக்கு முன்பிருந்தே கண்ணாடி பல்புகளை உடைத்து அரைக்கத் துவங்கிவிடுவோம். முரட்டுத்துணியில் அதை சளிப்போம். கண்ணாடித்தூள் மைதாமாவு போல் வரும்வரை அரைத்துச் சளிப்போம். மாஞ்சா காய்ச்சும்போது அதில் வெவ்வேறு பொருட்கள் அரைத்துக் கலக்கப்படும். அந்த ஃபார்முலா கோகோகோலா ஃபார்முலாவை விட டாப் சீக்ரட். புதுச்சேரி, கடலூர், ஓ.டி. நெய்வேலி எனப் பல பகுதிகளிலிருந்து பத்து, பதினைந்து காற்றாடி டீம்கள் வரும். ஒருவர் ஃபார்முலா அடுத்தவருக்குத் தெரியாது.*

*சின்னஞ்சிறுவர்கள் விடும் வால்கட்டி காற்றாடிகளை யாரும் அறுக்க மாட்டார்கள். மூங்கில் குச்சிகளை சீவி செய்யப்பட்ட கொக்கடி ( வால் கட்டாதவை)*

காற்றாடிகளுக்கு இடையே மட்டுமே டீல் நடக்கும். டீலின் போது பட்டம் விடுபவர் விரலில் மாஞ்சா நூல் அறுத்து ரத்தம் சொட்டும். எதைப் பற்றியும் கவலைப் படாமல், அடுத்தவன் பட்டத்தை அறுத்து அதைக் காற்றில் மிதக்கச் செய்யும்போது நாங்கள் அடையும் சுகத்தை வார்த்தைகளில் விவரிக்க முடியாது.



source: https://www.tamilmalarnews.com/



source: https://www.thehindu.com/news/national/tamil-nadu/high-on-fun-with-kites/article7624233.ece

விழாவில் கூடும் ஆயிரக்கணக்கான மக்கள், கடலூரின் எல்லையில் உள்ள பாலத்தின் கீழ் நிழலில், குடும்பம் குடும்பமாக அமர்ந்து, இட்லி- பொடி ஆயில்,வெங்காய சட்னி, பூண்டு மிளகாய் சட்னி, சாம்பார், மசால் வடை ,புளிச் சோறு, எலுமிச்சை சோறு, சாம்பார் சோறு, தேங்காய் சோறு, தயிர்ச் சோறு எனத் தாங்கள் கொண்டு வந்த அன்னங்களை மற்ற குடும்பங்களோடு பகிர்ந்துண்டு மகிழ்வர். பல வண்ண பலூன்கள், பனங்கிழங்கு, பஞ்சு மிட்டாய், ரப்பர் மிட்டாய் , குச்சி ஐஸ், பால்

*ஐஸ், சேமியா ஐஸ், கப் ஐஸ் என வித விதமான ஐஸ்கள், ஒரு பக்கம் குடை ராட்டினம், மறுபக்கம் தொட்டி ராட்டினம்... ...எங்களின் பாடு படு கொண்டாட்டமாக இருக்கும்.*

*வடக்குப் பகுதியில் ஒரு 50மீ. அகலத்திற்கு நீர் ஓடிக் கொண்டிருக்கும். அதை ஒட்டிய பகுதியில், கைகளால் மணலைத் தோண்டினால் ஊற்று சுரக்கும், அதைக் கூஜாவில் முகந்து வந்து குடித்து மகிழ்வோம். இன்றைய பாட்டில் தண்ணீரை விடக் குளிர்ச்சியாய், சுவையாய் இருக்கும்.*

*இப்போதும் பெண்ணையாற்றுத் திருவிழா நடைபெறுகிறது. ஆற்றில் மணலும் இல்லை. இளைஞர்கள் இடையே மகிழ்ச்சியும் இல்லை*

*அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே......பெண்ணையே, பெண்ணையே, பெண்ணையே !!!*

*தொடர்பு: திரு. சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)*

## 13. கோவை மாநகர்... அன்றும் இன்றும் ...

***— துரை.சுந்தரம்***

***முன்னுரை:***

*கவிஞர் புவியரசு. கோவை வானம்பாடி இயக்கத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவர். பேரூர் சாந்தலிங்கர் தமிழ்க்கல்லூரியில் வித்துவான் பட்டம் பெற்ற தமிழாசிரியர். கவிதை, மொழிபெயர்ப்பு, கட்டுரை, நாடகங்கள் என இதுவரை 106 நூல்களை எழுதியுள்ளவர். சாகித்திய அகாதமி விருதுகளைப் பெற்றவர். தேசியத் திரைப்பட வளர்ச்சித்துறையில் பணியாற்றியவர். இவ்வாறு, இயற்றமிழ், நாடகத்தமிழ் ஆகிய இரண்டிலும் வல்ல இத்தமிழறிஞர், கோவை விழா நிகழ்ச்சிகளின் தொடராக, 11-01-2019 அன்று கோவை வாணவராயர் அறக்கட்டளைச் சிறப்புச் சொற்பொழிவொன்றை ஆற்றினார். கோவையைப் பற்றித் தம் வாழ்க்கையோடு இயைந்த அனுபவங்களையும், கோவையைப் பற்றிய பல்வேறு செய்திகளையும் சுவையோடு பகிர்ந்துகொண்டார். கோவையின் பழமை எவ்வாறிருந்தது என்பதை இன்றைய தலைமுறை அறிந்து மகிழும் வண்ணமும், பழங்கோவையின் சாயலை, ஓரளவு தம் சொந்த வாழ்வில் கண்ட சில மூத்த குடிமகன்களின் நினைவைக் கிளறி மகிழவைக்கும் வண்ணமும் அமைந்த அவரது சொற்பொழிவிலிருந்து சில துளிகள் இங்கே.*

***சொற்பொழிவாளரின் இளமைப்பருவம்-கல்விச் சூழல்:***

*கவிஞர் புவியரசு தம் இளமைப்பருவத்தை நினைவு கூர்ந்தமை, நாம் அன்றைய கோவை நகரின் சூழலையும், அன்றைய கல்விச் சூழலையும் அறிந்துகொள்ளப் பெரிதும் துணை செய்தது. அவரே கூறியது போல அவரது உரை வெறும் புள்ளி விவரம் அல்ல; அது ஓர் அனுபவம். உடுமலைக்கருகில் ஒரு சிறிய கிராமத்தில் பிறப்பு. முதல் வகுப்பு படிக்கும் காலத்தில், கோவை நகரில் இருப்பு. கோவையில் இன்றும் ”மாட்டாசுபத்திரி” என்ற பெயரில் வழங்கும் கால்நடை மருத்துவமனையின் அருகில் பள்ளியில் சேர்க்கப்பட்டார். ஆசிரியர் அடித்த நிகழ்வை நினைவு கூர்ந்தார். ஓராண்டுகூட நிறைவுறவில்லை. ஏதோ காரணம்பற்றி, இரண்டாம் வகுப்பிலிருந்து ஐந்தாம் வகுப்பு வரையிலான காலகட்டத்தில் பள்ளி செல்லவில்லை. பின்னர், இடையர் வீதியில் இருந்த எஸ்.ஆர். சந்திரன் பள்ளியில் (S. R. CHANDRAN PREPARATORY SCHOOL) ஆறாம் வகுப்பில் சேர்ந்தார். ஐந்து வகுப்புகள் படிக்காத நிலையில் பாடங்கள் எவையும் படியவில்லை. இந்நிலையில், கோவையில் “பிளேக்” (PLAGUE) என்னும் கொள்ளை நோய் பரவியது. படிப்பு நின்றது. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், நகராட்சிப் பள்ளியில் (CITY MUNICIPAL HIGH SCHOOL) நேரடியாக எட்டாம் வகுப்பில் சேர்க்கை. இப்பள்ளி, பெரும் விளையாட்டு வீரர்களைத் தந்திருக்கிறது. இவருக்குக் கணக்குப்பாடம் தெரியாது. ஆனால், கணக்கு ஆசிரியர் ஒவ்வொரு கணக்கையும் தாமே போட்டுக் காண்பித்துக் காண்பித்து மாணவர்களுக்குக் கணக்குப்*

*புகட்டினார். கணக்கு ஆசிரியரை மறக்கவியலாது. காரணம் செந்தமிழில் பேசுவார். கோவையின் கல்விச் சூழல் பற்றி ஒரு குறிப்பு. கோவையில், 1860-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இந்தியக் கிறித்தவச் சபையாரின் செயிண்ட் மைக்கேல் பள்ளியில் (ST.MICHAEL'S) இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், கிறித்தவரல்லாதார் அப்பள்ளியில் சேர இடம் கிடைக்காத சூழலில், கோவையின் நாயுடு வகுப்புச் செல்வர் ஒருவர் கோவை பீளமேட்டில், 1924-ஆம் ஆண்டு, அனைத்துச் சமயத்தாரும் கல்வி பயிலப் பள்ளி ஒன்றை அமைத்தார். சர்வ ஜன உயர்நிலைப்பள்ளி என அதற்குப் பொருத்தமானதொரு பெயரையும் இட்டார்.*

*கவிஞர் புவியரசு அவர்கள் பின்னர் அரசு கலைக் கல்லூரியில் இடைநிலைப் பட்டம் (Intermediate) பெற்றார். இராமச்சந்திர ஐயர் என்னும் ஆசிரியர் கல்லூரியின் ஆய்வுக்கூடப் பொறுப்பாளராக இருந்தார்; ஆய்வுக்கூடப் பொருள்களில் கண்ணாடிப்பெட்டி ஒன்றில் வைக்கப்பட்டிருந்த, பதப்படுத்தப்பட்ட மனிதத்தலையும் ஒன்று. சக மாணவர்களின் மிரட்சிக்கிடையில், அதை அச்சமின்றிக் கையில் எடுத்துக் காண்பித்த அனுபவம் கவிஞருக்குண்டு. ஆய்வுக்கூடத்தில் இருந்த இன்னொரு பொருள் மனித எலும்புக்கூடு. கைகளும், கால்களும் சிறு சிறு பகுதிகளாகத் திருகு ஆணிகளால் மூட்டப்பெற்றவையாக இருந்ததால், கவிஞர், நாள்தோறும் கைகளை வெவ்வேறு நிலைகளில் பொருத்தி வைத்து மகிழ்வாராம். ஒரு நாள் கை குவித்து வணங்கும் மனித எலும்புக்கூடு மறுநாள் வேறொரு தோற்றத்தில். இன்னொரு ஆசிரியர் சுப்புரத்தின ஐயர்; தலை முழுக்க முடியற்ற தோற்றம். உச்சியில் ஒரு சிறு குடுமி. புவியியல் (GEOGRAPHY) கல்விக்கான ஆசிரியரான அவர் தன் தலையையே பாடத்துக்கான கோளமாக வடிவமைத்துக்கொண்டு உலக நாடுகளைக் காட்டிக் கல்வி பயிற்றுவார் எனக் கவிஞர் கூறுகையில் அவையில் சிரிப்பலைகள்.*


RAJAH'S STREET, COIMBATORE 1914

source: https://www.quora.com/What-are-some-rare-pictures-of-Coimbatore

அக்காலக் கோவையில் கல்வி, தரம் வாய்ந்ததாக அமைந்திருந்தது. எல்லாரும் படித்தனர். மணி மணியான ஆசிரியர்கள். கல்விக்குப் பெரிய மரியாதை இருந்த காலம் அது. இன்று அந்த மரியாதை காணாமல் போயிற்று. அக்காலக் கோவையில், பிச்சைக்காரர்கள் கூடப் படித்தவராயிருந்தனர். பக்திப் பாடல்களைப் பாடிப் பிச்சை எடுத்தனர்.

கவிஞரின் சிரு பிள்ளைப் பருவத்தில் கோவை நகரம் மிக அமைதியான இடமாக இருந்தது. வெறிச்சோடிய சாலைகள். எங்கோ ஒலிக்கும் மிதிவண்டியின் மணிச் சத்தம். அல்லது குதிரை வண்டிகளின் சத்தம்.

**கோவையின் மையப்பொருள்-பருத்தி:**

கோவையின் இயக்கம் பருத்தியை மையமாகக்கொண்டே சுழன்றது. ஒரு பக்கம் பஞ்சாலைகள்; ஒரு பக்கம் நெசவாளர்கள். கருங்கண்ணி, கம்போடியா என இருவகைப் பருத்தி. பருத்திச் செடிகள் அழகான மலர்களைக் கொண்டிருந்தன. பருத்தியிலிருந்து, விதை தனியாகவும் பஞ்சு தனியாகவும் பிரிக்கும் பணிக்கு ஜின்னிங் ஆலைகள் (GINNING MILL). அதை அடுத்து, நூல் நூற்கும் பணிக்கு நூற்பாலைகள் (SPINNING MILL). பின்னர் நெசவாலைகள். கோவை எங்கும் கைத்தறி நெசவு. நெசவுத் தொழில் நடக்கும் இடங்கள், பேட்டைகள் எனப் பெயர் கொண்டன. கோவையின் மையப்பகுதியில் தெப்பக்குளம் மைதானம் அமைந்திருந்தது. மைதானத்திலும், தெப்பக்குளத்தைச் சுற்றியுள்ள தெருக்களிலும் பாம்பு போல் நீண்டு கிடக்கும் சேலை வடிவில் விரித்து வைத்த நூல் பாய்கள்.

**முதல் பஞ்சாலையும் பஞ்சாலைப் போராட்டமும்:**



Stanes Mill

source: https://www.quora.com/What-are-some-rare-pictures-of-Coimbatore

நூலிழை அறுந்து போகாமல் இருக்கும்படி சரியான அளவில் ஈரப்பசை இருக்கும் பகுதி கோவைப்பகுதி. எனவே, பஞ்சாலை அமையத் தகுதியான இடமாகக் கோவை இருந்தது. கோவையின் முதல் ஆலை ஸ்டேன்ஸ் பஞ்சாலை. உரிமையாளர் ஸ்டேன்ஸ் துரை. அவருக்குப் பஞ்சாலைக்கான நிலம் கொடுத்தவர் சேலம் நரசிம்மலு நாயுடு என்பவர். “விக்டோரியா அச்சகம்” என்னும் பெயரில் முதல் அச்சகத்தை நிறுவியவர். தொண்ணூற்றாறு நூல்களை எழுதியவர். ஸ்டேன்ஸ் பஞ்சாலை இயங்கியபோது, சொற்பொழிவாளர் கவிஞர் புவியரசு அவர்கள், ‘சிட்டி யூனியன்’ பள்ளியில் ஒன்பதாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தார். ஸ்டேன்ஸ் பஞ்சாலையைத் தொடர்ந்து கோவையில் மொத்தம் நூற்றுப்பத்து ஆலைகள் தொடங்கப்பட்டு இயங்கின. நூறாம் எண் பருத்தி இழை கோவையில்தான் முதன்முதலில் நெய்யப்பட்டது.

பஞ்சாலைத் தொழிலாளர்களின் போராட்டம் ஒரு முறை நடந்தது. போராட்டம் வலுத்தபோது துப்பாக்கிச் சூடு நிகழ்ச்சியும் இங்கு நடந்தது. போராட்டத்துக்கு ஆதரவாக இரயில் வண்டி ஓட்டுநர் ஒருவர் இரயிலை நிறுத்திவிட்டுப் போராட்டத்தில் கலந்து கொண்ட நிகழ்ச்சியும் நடந்துள்ளது.

**திரைப்படக் கலையும் கோவையும்:**

திரைப்படக் கலைக்கு முன்னோடி கோவையே. பிரஞ்சுக்காரன் ஒருவன் திரையில் படம் காட்டும் ஒரு கருவியோடு திருச்சி-பொன்மலையில் சலனப் படக்காட்சிகளைத் திரையில் ஓடவிட்டதைப் பார்த்து அதில் மனதை ஈடுபடுத்திய வின்சென்ட் அவர்களை இங்கு நினைவு கூரவேண்டும். அந்தக் காலத்தில் ஆறாயிரம் ரூபாய்ப் பணம் கொடுத்து அந்தப் பிரஞ்சுக்காரனிடம் திரைப்படக் கருவியை (PROJECTOR) விலைக்கு வாங்கித் தம் தோள்களில் சுமந்தவாறு ஊர் ஊராய் அலைந்து சலனப்படத்தை மக்களிடம் காட்டியவர் அவர். ஆப்கானிஸ்தான் வரை அவர் சென்றதாகக் கேள்விப்படுகிறோம்.



**Variety Hall Theater**
source: https://www.quora.com/What-are-some-rare-pictures-of-Coimbatore

பிரிட்டிஷ் மகாராணியாரின் அரண்மனையின் தோற்றத்தை ஒத்த வடிவத்தில், ‘‘வெரைட்டி ஹால்’’ *(VARIETY HALL)* என்னும் பெயரில் திரைப்பட அரங்கு ஒன்றை அவர் கட்டுவித்தார். அதில் சலனப்படங்களை ஓடவிட்டார். பேச்சொலி இல்லாத ஊமைப்படங்கள். 'கார்ட்டூன்' படங்கள் வெளியிடப்பட்டன. *MEGAPHONE* என்னும் ஒலிபெருக்கி மூலம் படங்களின் கதையை, உரையாடல்களைக் கலைஞர் ஒருவர் திரைக்கு முன் உள்ள மேடைப்பகுதியில் நின்றுகொண்டு பேசிக் காட்சிகளை விளக்குவார். ‘‘வெரைட்டி ஹால்’’ *(VARIETY HALL)* என்னும் பெயருக்கேற்ப அந்த அரங்கில் சலனப்படத்தைத் தவிர்த்து, ஆங்கிலோ-இந்திய மக்களின் ‘‘*BALL*’’ என்னும் உள் அரங்க நடன நிகழ்ச்சிகளும் நடைபெறும். இந்தத் திரையரங்கு இருக்கும் அதே வீதியில் பின்னர் ‘‘எடிசன்’’ என்னும் பெயரிலும் ஒரு திரையரங்கு கட்டப்பெற்றது. சலனப்படத்தின் அடிப்படையைக் கண்டுபிடித்த தாமஸ் ஆல்வா எடிசனை நினைவூட்டும் வண்ணம் இப்பெயர் இடப்பெற்றது எனலாம். பின்னாளில், இந்த அரங்கு ‘‘சாமி தியேட்டர்’’ என்னும் பெயரில் இயங்கி இன்று மறைந்து போனது. மலையாளப் படங்களுக்கென்றே ‘‘சீனிவாஸ்’’ திரையரங்கும், ஆங்கிலப்படங்களுக்கென்றே ‘‘ரெயின்போ’’ திரையரங்கும் இயங்கின. (கட்டுரை ஆசிரியர் குறிப்பு : கட்டுரை ஆசிரியர் கோவையில் 1964-ஆம் ஆண்டு, கல்லூரிப்படிப்புக்காகக் கோவை வந்தபோது, இந்த ‘‘சீனிவாஸ்’’ திரையரங்கு முற்றிலும் ஆங்கிலப்படங்களைத் திரையிடும் அரங்காக மாறிவிட்டிருந்தது. அத் திரையரங்கு, திரையரங்குக்கான பெரிய வடிவமைப்பைக் கொண்டிருக்கவில்லை ஒரு சிறிய மாளிகை *(BUNGALOW)* போன்றிருக்கும். ஒரு வீட்டுக்குள் அமர்ந்து படம் பார்க்கும் உணர்வே ஏற்படும். 1964-ஆம் ஆண்டில் அத்திரையரங்கில், ஆங்கிலப்பட இயக்குநர் *ALFRED HITCHHOCK-* இன் ‘‘*THE BIRDS*’’ என்னும் திரைப்படத்தைப் பார்த்து மகிழ்ந்ததை மறக்க இயலாது.)

வின்சென்ட் அவர்கள், பின்னர் ’’லைட் ஹவுஸ்’’ *(LIGHT HOUSE)* என்னும் பெயரில் ஒரு திரையரங்கத்தைக் கட்டுவித்தார். கலங்கரை விளக்கத்தைக் குறிக்கும் இப்பெயருக்கும் கலங்கரை விளக்கத்துக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. திரை அரங்கின் உட்புறக்கூரை முழுதும் வானத்தைப்போலக் காட்சிதரும் வண்ணம் நிலா, விண்மீன்கள் ஆகியன விளக்கொளிகளின் மூலம் காணுமாறு அழகூட்டப்பெற்றிருந்தது. அரங்கின் பக்கவாட்டுப் பகுதிகளில் அமைக்கப்பட்ட சிலைகளின் மீதும் விளக்கொளி பட்டு மிளிர்ந்தது. எனவே, ‘விளக்குகளின் மாளிகை’ என்னும் பொருளில் திரையரங்குக்கு இப்பெயரிடப்பட்டது இன்று பலருக்கும் தெரியாது. அந்தத் திரையரங்கு பின்னாளில் ‘‘கென்னடி தியேட்டர்’’ என்று இயங்கித் தற்போது இல்லாமலே மறைந்த பின்னும், திரையரங்கு இருந்த வீதி இன்றளவிலும் ‘லைட் ஹவுஸ்’’ வீதி என்றே வழங்கி வருகிறது.

கோவை, திரைப்படக்கலையில் முன்னோடியாகத் திகழ்ந்தது பற்றி முன்னரே குறிப்பிட்டோம். கோவையில், ’’பட்சிராஜா’’, ’’சென்ட்ரல்’’ ஆகிய படப்பிடிப்பு நிலையங்கள் பெரிய வளாகங்களுடன் இருந்தன. பி.யு.சின்னப்பா, தியாகராஜ பாகவதர், எம்.ஜி.ஆர். போன்ற பல நடிகர்கள் நடமாடிய நகரம் கோவை. கோவையைச்

சேர்ந்த வேல்சாமிக் கவிராயர் என்பார், அக்காலத்தே சேலம் ''மாடர்ன் தியேட்டர்ஸ்'' படப்பிடிப்பு நிலையத்தில் இயக்குநராய் இருந்தார். சிறப்பானதொரு நிலைக்கு உயர்ந்த அவர், பின்னாளில், அன்னார் ஒருவர் இருந்தார் என்ற தடயமே இல்லாமல் வீழ்ச்சியுற்றார்.

**நாடகக் கலையும் கோவையும்:**

நாடகக் கலை என்பது அற்புதமான ஒரு கலை. அது, கோவையில் சிறப்புற்றிருந்தது. எம்.ஆர்.இராதாவின் நாடகங்கள் அரசியல் பரப்புரைக்காகப் பெயர்பெற்றவை. நாளும் நாடகத்தில், அரசியல் தொடர்பான சாடல்களுடன் உரையாடல்கள் அமைந்திருக்கும். முதல் நாள், குறிப்பிட்ட சாடலுக்காகக் காவல்துறையினர் நெருக்கடி அளித்தால், அடுத்த நாள் வேறொரு உரையாடல் மூலம் சாடல் தொடரும். நாடகம் ஒன்றே. கதை 'தூக்குத் தூக்கி' யாக இருக்கும். ஆனால் அரசியல் உரையாடல்கள் இடை புகும். மக்களின் பேச்சு இலக்கியப்பேச்சல்ல. நாடகப்பேச்சாகவே இருக்கும். டி.கே.எஸ். சகோதரர்களின் நாடகக் குழுவின் பணி குறிப்பிடத்தக்கது. டி.கே. சண்முகம் அவர்கள் கோவையில் ''சண்முகா'' நாடக அரங்குக் கட்டிடத்தைக் கட்டுவித்தார். அரங்கின் மேடை பெரியதொரு மேடை. நாடகக் காட்சிகளில் மெய்யாகவே வண்டிகள் மேடையில் வரும். இரவோடிரவாக நாடகக் கதையை உருவாக்கிய நாடகக் கலைஞர்கள் இருந்தார்கள். அறிஞர் அண்ணாவும் அவ்வாறு எழுதிய ''ஓர் இரவு'' நாடகம் இங்கு அரங்கேறியுள்ளது. சொற்பொழிவாளர் கவிஞர் புவியரசு அண்ணாவுடனான சந்திப்பை நினைவு கூர்ந்தார்.

முன்னர்க் குறிப்பிட்டவாறு, கவிஞர் புவியரசு அவர்களும் ஒரு நாடக ஆசிரியரே. ஆண்டு முழுதும் இருபத்தைந்து நாடகங்களுக்குக் குறையாமல் நாடகங்கள் அரங்கேறும். நாடகங்களின் போட்டியும் பரிசுகளும் உண்டு. புவியரசு அவர்களின் ஒரு நாடகம் பதினாறு முதற்பரிசுகளைப் பெற்றிருக்கிறது. ''சலங்கை'' என்னும் பெயரில் புவியரசு அவர்கள் எழுதிய நாடகம் (தேவதாசிகள் பற்றியது) வாதங்களுக்கு இடமளித்ததும், பெரும் கண்டனங்களுக்கு உள்ளானதும் நிகழ்ந்தன. புவியரசு அவர்கள், பின்னர் நாடகப்போட்டியின் நடுவராக இயங்கியதும் உண்டு. ''செம்மீன்'' திரைப்படப் புகழ் நடிகை ஷீலா, கோவையில் போத்தனூரில் வாழ்ந்தது, அவரைப் புவியரசு அவர்கள் நாடகத்துக்கு அழைத்தது ஆகியவற்றை நினைவு கூர்ந்தார். நாடகச் சம்பளமாக எழுபது ரூபாய்ப் பணமும், போக்குவரத்துக்கான குதிரைவண்டிக் கூலியாகப் பணம் ரூபாய் பதினைந்தும், முன்பணமாக முப்பது ரூபாய்ப் பணமும் ஷீலாவுக்குக் கொடுக்கப்பட்டது.

(கட்டுரை ஆசிரியர் குறிப்பு : நடிகை ஷீலா, கோவையில் தங்கி நாடகங்களில் நடித்து வந்தார் என்று புவியரசு அவர்கள் தம் உரையில் குறிப்பிட்டபோது, கட்டுரை ஆசிரியரும் தம் பள்ளி நாள்களில் நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்கிறார். இருபதாம் நூற்றாண்டின் ஐம்பதுகளின் காலம். கட்டுரை ஆசிரியரின் சொந்த ஊரான அவிநாசியில் அவரது சிற்றப்பாவான ''அன்புவாணன்'' என்பவர் - இடைநிலை ஆசிரியர் (SECONDARY GRADE TEACHER) பயிற்சிப்பணி - அவிநாசியில் இருந்த நாடக

ஆர்வலர்களைக் கொண்டு “பொன்விலங்கு” என்னும் புதுமைத் தலைப்பில் நாடகம் ஒன்றை ஆக்கி, அதில் நடிகை ஷீலாவைக் கோவையிலிருந்து வரவழைத்து நாடகம் நிகழ்த்தினார். அந் நாடகத்தை நேரில் பார்த்த நினைவும், நாடகத்தின் இடை நேரத்தில், நடிகர் திலகம் சிவாஜி கணேசனும், டி.ஆர். இராமச்சந்திரனும் நாடகத்தைச் சிறிது நேரம் பார்த்துப் பாராட்டிவிட்டுக் கோவை நோக்கிப் பயணப்பட்டதைக் கண்ட நினைவும் கட்டுரை ஆசிரியருக்குப் பசுமைப் பதிவு. பொன்விலங்கு என்னும் புதுமைத் தலைப்பை முதலில் அறிமுகப்படுத்தியவர் அன்புவாணன் அவர்களே. பின்னாளில், இந்தத் தலைப்பில் நா.பார்த்தசாரதி அவர்கள் நாவல் ஒன்றை எழுதினார் என்பது நாம் அறிந்ததே.)




கோவை அவினாசி சாலை அன்றும் இன்றும் source: https://www.quora.com/What-are-some-rare-pictures-of-Coimbatore

**கோவை இன்று எவ்வாறு இருக்கிறது?**

படைப்பிலும் கலையிலும் எழுச்சிபெற்ற அந்தக் கோவை இன்று எங்கே? நூற்றுப்பத்து ஆலைகள் இருந்தனவே; அவை என்னவாயின? எப்படி மறைந்தன? நெசவால் செழித்த, நெசவாளர்களால் உருவாக்கப்பெற்ற நகரம் இன்றைக்கு என்னவாயிற்று? பெரியதொரு கேள்வி. விடை காண இயலவில்லை. இன்று, இரண்டும் கெட்டானாய் போய்க்கொண்டிருக்கிறது. நாசத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது. அன்றிலிருந்து இன்று வரை வேறு புலத்திலிருந்து மக்கள் பெயர்ந்து கோவைக்கு வருதல் நிகழ்ந்துகொண்டு வருகின்றது. கோவைக்கென்று ஒட்டுமொத்தமான கருத்து, தெளிவு என்பது காணப்படவில்லை. சொற்பொழிவாளர் நகைச் சுவையாகச் சொன்ன ஒரு கருத்து நம்மைச் சிந்திக்க வைக்கிறது. இன்றையத் திரைப்படத்துறையினர் கூறுவதுபோலத் திரைப்படங்கள் பற்றிய கோவை மக்களின் கணிப்பைப் புரிந்து கொள்ள இயலவில்லை. கோவை இன்று பெரியதொரு மருத்துவ நகரமாகத் திகழ்கிறது. உண்மை. ஆனால் மருத்துவச் செலவு? எந்த ஒரு நாடு மருத்துவத்தையும், கல்வியையும் இலவசமாக வழங்குகிறதோ அந்த நாடுதான் மெய்யான “ஜனநாயக” நாடு. பிரிட்டனும், ஜெர்மனியும் அத்தகைய நாடுகள்தாமே.

**கோவை நாளை எவ்வாறிருக்கும்?**

*நாளை என்பது எவ்வாறிருக்கும்? நம் வீட்டில் செவிட்டுப் பிள்ளைகள் பிறப்பார்கள். நாம் உண்மையில் கால்களைக்கொண்டு நடக்கிறோமா? நம் கால்களின் விரல்கள் மண்ணில் பதிகின்றனவா? இல்லை. நாளை, கால் விரல்கள் இல்லாப் பிள்ளைகள் பிறப்பார்கள். பயன்படுத்தாத விரல்களுக்குப் படைப்பு இருக்காதல்லவா? மக்கள், தனித்தனியே பறப்பார்கள்.*

*அறம் இருக்காது. ஒழுக்கம் இருக்காது. அநியாயத்தை நியாயப்படுத்துவோம். கைப்பேசிகள் என்னும் செல்பேசிகள் நமது சாத்தான்களாய் மாறிவிட்டிருக்கும் காலம் இது. இவற்றால் நிச்சயம் நமக்கு நன்மை நிகழாது.*

*முப்பது ஆண்டுகளுக்கு மேல் உலகம் இருக்காது; அழிந்து போகும். இதைக் கவிஞர் சொல்லவில்லை. மூளைப்பகுதியைத் தவிர உடம்பின் அத்தனை வெளி உறுப்புகளும் வளைந்து மடிந்து முடங்கிப்போன நிலையில், சிந்தனை மட்டுமே உயிரோட்டமாய், ஒரு நாற்காலியில் சுருண்டு கிடந்த ஒரு சிறந்த அறிவியல் மேதை - அண்மையில் மறைந்து போனாரே - ஸ்டீபன் ஹாக்கின்ஸ் (STEPHEN HAWKINS) அவர் சொன்னது. உலகம் அழியும்; ஆனால் நாய்கள் சாகா.*

**முடிவுரை :**

*மனிதனுக்கு மரணம் அருகில் இருக்கும்போது மனிதம் இருக்கும்.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 14. திருவண்ணாமலை அண்ணாமலையார் கோவில் - திருஅமுது படையல்

*— மா. மாரிராஜன்*

*கோவிலுள்ள இறைவனுக்கும், கோஷ்டத்தில் உள்ள இறைவடிவங்களுக்கும், எடுப்பித்த செப்புத் திருமேனிகளுக்கும், தினசரி நெய்வேத்தியம், பூஜை, திருஅமுது படையல், தினசரி நடக்கும் ஒரு அன்றாட நிகழ்வாகும்.*

*அமுது படையலுக்குப் பயன்படுத்தப்பட்ட உணவு வகைகளை, பக்தர்களுக்கும், அடியார்களுக்கும் தானமாக வழங்குவார்கள். அடியார்களுக்கு வழங்கப்படும் உணவை ஒரு சட்டியில் இட்டுத் தருவார்கள்..இதில் என்ன சிறப்பு? உணவு இடப்பட்டுள்ளச் சட்டியை ஒரு வாழை இலையால் மூடி தந்துள்ளார்கள். அந்த வாலை இலை வாங்குவதற்குக் கூட நிவந்தம் அளிக்கப்பட்டுள்ளது. ஆகா.. என்னவொரு உயர்ந்த நாகரீகம்.*

*இராஜேந்திரரின் 19 ம் ஆட்சியாண்டு.*

*திருவண்ணாமலை அண்ணாமலையார் கோவில். அரசனின் வேலையாள் உதயதிவாகரன் என்பவர் கார்த்திகை திருநாள்போது இறைவனுக்கு அமுது படைக்க, பொன்நிவந்தம் வழங்குகிறார்.*

*இதைக்கொண்டு அமுது படையலுக்குத் தேவையான உணவு வகைகள், அதற்குத் தேவையான பொருட்கள் ஏற்பாடு செய்யப்படுகிறது. தயாரிக்கும் உணவை இருபது அடியார்களுக்கு வழங்க முடிவு எடுக்கப்பட்டது.*

*உணவு தருவதற்குச் சட்டியும், அதைமூடித்தருவதற்கு வாழை இலைகளும் வழங்கப்பட்டன.*

*இனி கல்வெட்டுச்செய்தி. முதல் பகுதி இராஜேந்திரரின் மெய்க்கீர்த்தி. தொடரும் பகுதியில் மேற்கண்ட திருஅமுது படையல் செய்தி.*

*தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி 8 - எண் 66.*
*S.I.I vol. 8. No 66.*

## No. 66.

(*A.R. No.* 477 *of* 1902).

ON THE SOUTH WALL OF THE FIRST PRAKARA OF THE SAME TEMPLE.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ [||*] திருமன்னி வளர இருநில மடந்தையும் போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் Tiruvannamalai.
செல்வியுந் தன் பெருந்தேவியராகி இன்புற நெடிதிய(ல்) ஊழியில் இடைதுறைநாடுந்
துட[ர்*]வனவேலிப் படர் வனவாசியுஞ் சுள்ளிச் சூழ் மதிள் கொள்ளிப்பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக்கடக்கமும் பொருகடல் ஈழத்[த]ரைச[ர்*]த[ம்*]
முடியு மாங்கவர் தேவிய ரோங்கெழில் முடியும் முன்னவர்பக்கல் தென்னவர் வைத்த
சுந்தரமுடியு மிந்திரனாரமும் தெண்டிரை ஈழமண்டல முழுவதும் எறிபடைக் கேரளர்
முறைமையிற் சூடுங் குலதனமாகிய பலர் புகழ் முடியுஞ் செங்கதிர்மாலையுஞ் ச[ங்*]-
கதிர்வேலைத் தொல்பெருங்காவல் பல்பழந்தீவுஞ் செருவிற் சினவி இ[ருப]த்தொ-
ரு[கா] லரைசுகளை கட்ட பரசுராமன் மேவருஞ் சா[ந்தி]மத்தீவரண் கருதி இருத்திய
செம்பொற் றிருத்[த]குமுடியும் ப[ய*]ங்கொடு பழிமிக முயங்கியில் முது[கி]ட்-
டொ[ளி]த்த சயசி[ங்]கன் [அ]ளப்பெ[ரு]ம் புகழொடும் பீடி[யல்*] இரட்டபாடி ஏழ-
ரை[யி]லக்கமும் [ந*]வநிதிக் குலப்பெரு[மலை](ய)களும் விக்கிரமவீரர் சக்கரகோட்-
டமும் [முதி]ர்படவல்லை மதுரமண்டலமும் காமிடை வளை[ந்*] நாமணை[க்கோணை]-
யும் வெஞ்சினவீரர் பஞ்சப்பள்[ளி][1] . . . . . . . . . . . .

2 ணிதேசமும் அயர்வில் வண்கீர்த்தி யாதிநகரவையிற் சந்திரன் தொல்குலத் திந்திரரதனை
விளையமர்க்களத்துக் கிளையொடும் பிடித்துப் பலதனத்தொடு நிறைகுலதனக் குவையுங்
கிட்டருஞ் செறிமிளை யொட்டவிஷயமும் பூசுரர்சேர் நற்கோசலைநாடு தன்மபா-
லனை வெம்முனை யழித்து வண்டுறைசோலைத் தண்ட(ப்)புத்தியும் இரணசூரனை முர-
ணுகத் தாக்கித் திக்கணை கீர்த்தித் தக்கணலாடமுங் கோவிந்தசந்தன் மாவிழிந்தோடத் தங்-
காதசாரல் வங்காளதேசமும் தொடுகடற் ச[ங்]குவொட்டல் மஹிபாலனை வெஞ்ச-
ம[ர்*]விளாகத் தஞ்சு[வி]த்தருளி ஒண்டிற லியானையும் பெண்டிர் பண்டாரமும் நித்-
தில நெடுங்கட லுத்திரலாடமும் வெறிமலர் தீ[ர்]த்தத் தெரிபுனற் கங்கையும் அலை-
கடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச் சங்கிராமவிசையோ . . . . . . . . . . .

3 தனை யகனை வாகையம் பொருகடற் கும்பக்கரியொடு மகப்படுத் துரிமையிற் பிறக்கிய பெரு-
நெதிப் பிறக்கமும் ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில் விச்சாதிரதோரணமும்
மொய்த்தொளிர் புனை[ம][ணி*]ப் புதவமுங் கனமணிக் கதவமும் நிறைசீர்விசயமுந்
துறைநீர்ப் பண்ணை[யு]ம் வன்மலை யூரெயிற் றொன்மலையூரும் ஆழ்கட லக[ழ்]சூழ் மாயி-
ருடிங்கமுங் கலங்க[ா] வல்வினை இலங்காசோகமுங் காப்புறு நிறைபுனல் மாப்பப்-
பாளமுங் காவலம்புரிசை மேவிலிம்பங்கமும் விளைப்பந்தூறுடை வளைப்பந்தூறுங்
கலைத்தக்கோர் புகழ் தலைத்தக்கோலமு[ம்*] தீதமர் வல்வினை மாதமாலிங்கமுங் கலா-
முதிர் கடுந்திற லிலாமுரிதேசமும் தேனக்க[வா]ர்பொழில் மானக்கவாரமுந் தொடு-
கடற் காவற் கடுமுரட் . . . . . . . . . . .

4 டாரத் கொண்ட கோப்பரகேசரிவந்மரான உடையார் ஸ்ரீராஜேந்த்ரசோழதேவற்கு யாண்டு
௰௯-ஆவது உடையார் ராஜேந்த்ரசோழதேவர் பணிமகன் ஸ்ரீசோழமண்டலத்து அரு-
மொழிதேவவளநாட்டு ஆர்வலக்கூற்றத்து ராஜராஜநல்லூர் ராஜராஜநல்லூர் உடை-
யான் பாண்டி உதையதிவாகரன் திருவண்ணாமலையில் எழுந்தருளுவித்த பிச்சதே-
வர்க்கு திரவதி முக்காலு திருவமுதுசெய்தருள[ச்] சிறுகாலைக்கு திருவமுதரிசி இரு-
நாழியும் உச்சியம்போதைக்குத் திருவமுதரிசி நாநாழியும் இரவைக்கு திருவமுதரிசி
இருநாழியும் ஆக நாள் ஒன்றினுக்கு திருவமுதரிசி குறுணியிநால் அறுகிசாண்டு வாண்-
ணத்தால் நெல்லு பதக்கு நாநாழியும் வந்தி ஒன்றினுக்கு கறியமுது பருப்பு உழக்கும்
பொரிக்கறி ஒன்றும் புழுக்கு[க்*]கறி ஒன்றும் ஆக்கக்கறி . . . . . . . . .

5 ஐ நாழி பு[ரி]யாக நாள் ஒன்றினுக்கு நெல்லு நாநாழி புரியும் நாள் ஒன்றினுக்கு மிளகு
இரு(ச்)செவிடரையும் உப்பு ஆழாக்கும் நெல்லு நாழி உழக்கும் வந்தி ஒன்றுக்கு நெய்-
யமுது இருசெவிடரையாக நாள் ஒன்றினுக்கு நெய்யமுது ஆழாக்கு இருசெவி டரைக்கு
நெல்லு இருநாழியும் வந்தி ஒன்றுக்கு தயிரமுர்து உரியாக நாள் ஒன்றினுக்கு தயிரமுது
நாழி உரிக்கு நெல்லு நாழி புரியும் வந்தி ஒன்றுக்கு அடைக்காயமுது வெற்றிலைப்பாக்கு
காயும் வெற்றிலை [எ]ட்டும் ஆக நாள் ஒன்றினு[க்கு] வெற்றிலைப்பாக்கு பன்னிரண்டுக்-
கும் வெற்றிலை இருபத்துநாலுக்கு நெல்லு நாழி புரியும் வந்தி விளக்கு சிறுகாட்டிக்கு[2]
இரண்டும் உச்சியம்போதைக்கு இரண்டும் இரவைக்கு நாலும் ஆக நாள் ஒன்றினுக்கு
வந்திவிளக்கு எட்டினுக்கு எண்ணை புரிக்கு நெல்லு நாநாழியும் திருவாராதனை செய்-
வான் . . . . . . . .

[1] A portion is built in at the right end.

[2] Read சிறுகாலைக்கு.

## 15. சங்கமித்தை - மாதகல் சம்பில்துறை பௌத்த அடையாளங்கள்

*— முனைவர் க. சுபாஷிணி*

*சாம்ராட் அசோகர் கலிங்கப் போர் அளித்த மன உளைச்சலினால் வன்முறையிலிருந்து மீண்டு அகிம்சைக்குத் திரும்பினார். புத்தரின் போதனைகள் அவருக்கு வழிகாட்டியதாக அவர் கருதினார். எனவே மக்களையும் அமைதி வழிக்குக் கொண்டு வரும் நோக்கில் தனது பிள்ளைகளையும் பௌத்தம் ஏற்கச் செய்து, அவர்களின் மூலமாகப் பௌத்த நெறியைப் பல நாடுகளுக்குக் கொண்டு போய் சேர்க்க முனைந்தார். அதன் காரணமாக தென்னிந்தியா முழுமையும் அவரது ஆட்சி ஆளுமையினால் பௌத்தம் பரவியது. அது மட்டுமன்றி தமிழகம் மற்றும் இலங்கைக்குப் பௌத்தத்தைக் கொண்டு சேர்க்க தமது பிள்ளைகளான மகன் மகேந்திரன், மகள் சங்கமித்தை ஆகியோரை அனுப்பி வைத்தார். அவர்கள் போகின்ற போது புத்த கயாவிலிருந்து அரச மரத்தின் கன்று ஒன்றைக் கொண்டு போய் இலங்கையில் பதியனிடக் கொண்டு சென்றார்கள். தமிழகம் வழியாகக் கடல் மார்க்கமாக அவர்கள் வந்தடைந்தார்கள். அவர்கள் கி.மு. 3ம் நூற்றாண்டில் இலங்கைத் தீவில் வந்திறங்கிய பகுதியாக யாழ் குடா நாட்டின் மாதகல் சம்பில்துறை பகுதி குறிப்பிடப்படுகிறது.*

*புத்த கயாவிலிருந்து புறப்பட்டு விசாகப்பட்டினம் துறைமுகம் வந்து அங்கிருந்து கப்பலில் இலங்கைக்கு சங்கமித்தையின் குழுவினர் வந்தனர் என செய்திகள் கூறுகின்றன. ஆனால் இச்செய்தி சொல்லும் வகையில் இவ்வழிப்பாதை சரியானதுதானா என்பதும் கேள்வியாகின்றது.*

*அசோகர் இந்திரப்பிரஸ்தம் என அன்று அழைக்கப்பட்ட தற்போதைய டெல்லியிலிருந்து தமிழகத்தின் வேலூர் வரை ராஜபாட்டை என அழைக்கப்படும் ஒரு அரச நெடுஞ்சாலையை அமைத்தார். இச்சாலையின் இருபுறமும் மரங்களை நட்டார். பயணிகள் ஓய்வெடுக்கும் சத்திரங்களைக் கட்டினார். இறுதியாக தமிழகத்தின் வேலூரில் வினையலங்கார விகார் என்ற பெயரில் ஒரு மடாலயத்தையும் அமைத்தார் என அறிகின்றோம். அனேகமாக இந்த ராஜபாட்டை வழியாக மகேந்திரனும் சங்கமித்தையும் தமிழகம் வந்து பின்னர் கடற்கரையோரப் பகுதிகளை வந்தடைந்து இலங்கைக்குப் பயணம் மேற்கொண்டிருக்கலாம். இதற்கும் வாய்ப்புக்கள் உள்ளன.*

*சங்கமித்தை பெண்களுக்கான பிக்குணிகள் சங்கத்தை இலங்கையில் தோற்றுவித்தார். சங்கமித்திரையின் பயணப் பாதை தொடர்பான ஆய்வுகள் முறையாக ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டும் .அதே போல மணிமேகலை காப்பிய நாயகியான மணிமேகலையின் இலங்கை வருகையும், பின் ஏனைய பல தீவுகளுக்கும் கிழக்காசிய*

நாடுகளுக்கும் அவர் அட்சயபாத்திரத்தினைக் கையிலேந்தி பௌத்த நெறியைப் பரப்ப மேற்கொண்ட பயணங்கள் பற்றியும் முறையான ஆய்வுகள் செய்யப்பட வேண்டும். இவ்வகையான ஆய்வுகள் தமிழகத்திலிருந்து பௌத்த நெறி ஏனைய கிழக்காசிய நாடுகளுக்கும் தூரக்கிழக்காசிய நாடுகளுக்கும் பரவியமைக்கான ஆதாரங்களை வழங்கும்.

இன்றைய இலங்கை அரசியல் சூழலில் சங்கமித்தை வந்திறங்கிய பகுதி என அடையாளம் காட்டப்படும் மாதகல் சம்பில்துறை சிங்களவர்கள் பகுதியாக அடையாளம் காட்டப்படுவதற்கான முயற்சிகள் தெரிகின்றன. இந்தச் சம்பில் துறை பகுதியில் ஐயனார் கோயில், கிருத்துவ தேவாலயம் மற்றும் வரைவர் கோயில்கள், சிவன் கோயில், முருகன் கோயில், பிள்ளையார் கோயில் ஆகிய வழிபாட்டுத் தலங்கள் சிலவும் உள்ளன.

பௌத்த மதம் சிங்களவருக்கும், ஏனைய சைவ கிருத்துவ மத வழிபாடுகள் தமிழருக்கும் என இருக்கும் இன்றைய சமூக சிந்தனை நிலைப் போக்கு இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலகட்ட சூழலுக்குப் புறம்பானதே. பண்டைய இலங்கையில் பௌத்தம் தமிழ் மக்களின் வாழ்க்கை நெறியாக நீண்ட காலம் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்த ஒரு சூழல் இருந்ததைப் புறந்தள்ளி விட முடியாது. ஆக, யாழ்ப்பாணத்தின் மாதகல் சம்பில்துறை பகுதி தமிழ்மக்கள் வாழ்விடப் பகுதி என்பதில் ஐயத்திற்கு இடமில்லை.

இன்று இப்பகுதி, பௌத்தமதம் சிங்களவருக்கான மதம் என்ற தட்டையான புரிதல், சிங்களவர், தமிழர் இருசாராருக்கும் உள்ளமையால், இரு சாராரும் குழப்பம் நீங்கி இப்பகுதியின் வரலாற்றில் தமிழ் மக்களுக்கு உள்ள முக்கியத்தையும் காண வேண்டியது வரலாற்றுத் தேவையாகின்றது. மதத்தை மையப்படுத்திய தவறான புரிதல் இருப்பதால் இப்பகுதி சிங்களவர் பகுதி என அடையாளப்படுத்தப்படும் முயற்சி இன்று தீவிரப்படுத்தப்பட்டு வருகின்றது. இதற்குச் சாட்சியாக இப்பகுதியில் இராணுவத்தினர் அதிகமாக நடமாடுவதையும் இப்பதிவுக்காகச் சென்றிருந்தபோது (அக்டோபர் 2018 இறுதி) நேரில் காண நேர்ந்தது.

வரலாற்றுப் பார்வையில் யாழ்ப்பாணத்தின் மாதகல்-சம்பில்துறை பகுதி தமிழர் வரலாற்றுச் சுவடுகளில் இடம்பெற வேண்டிய ஒரு பகுதியே!

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 16. இலங்கைக் கோட்டை

— *முனைவர் க. சுபாஷிணி*

*இலங்கைத் தீவில் ஐரோப்பியரது மேலாதிக்கம் இருந்தமைக்கு அடையாளமாக இன்றும் காட்சி அளிக்கும் நினைவுச்சின்னங்களுள் யாழ்ப்பாணக் கோட்டையும் ஒன்று. கிபி 1619 அளவில் போர்த்துக்கீசியரால் முதலில் இக்கோட்டைக் கட்டப்பட்டதாக அறியப்பட்டாலும், இதற்கு முன்னரே இப்பகுதி வணிகத்திற்காகப் பயன்பட்டது என்பதும் கட்டுமானங்கள் இருந்தன என்பதும் தொல்லியல் ஆய்வாளர்கள் முடிவு. யாழ்ப்பாண தீபகற்பத்திற்குத் தெற்கே, இலங்கையில் உள்ள இரண்டாவது மிகப்பெரிய கோட்டையாக கருதப்படுகிறது இக்கோட்டை. கிபி 1619 அளவில் போர்த்துக்கீசியரால் முதலில் இக்கோட்டைக் கட்டப்பட்டதாக அறியப்படுகின்றது. கிபி 17ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பின் அதன் தொடர்ச்சியிலும் ஆட்சி புரிந்த டச்சுக்காரர்கள் இக்கோட்டையை மேலும் விரிவாக்கி தற்போது நாம் காணும் நட்சத்திர வடிவத்துடன் இக்கோட்டையை அமைத்தனர். டச்சுக்காரர்களுக்குப் பின்னர் இலங்கை தீவை ஆண்ட பிரித்தானியர் சில மாற்றங்களை ஏற்படுத்தினாலும் அடிப்படை தோற்றத்தில் குறிப்பிடத்தக்க மாற்றங்களைச் செய்யவில்லை . ஆகவே இக்கோட்டை டச்சுக் கோட்டை என்றும் அழைக்கப்படுகின்றது.*

*போர்த்துக்கீசியர் இலங்கைத் தீவிற்கு வருவதற்கு ஈராயிரத்திற்கும் முற்பட்ட காலகட்டத்திலேயே ரோமானியருடனும், இந்தியா, அரேபியா ஆகிய நாடுகளுடனும், ஏனைய கிழக்காசிய நாடுகளுடனும் வணிகப் போக்குவரத்துக்கள் இருந்தமையும், இப்பகுதியில் நிகழ்த்தப்பட்ட தொல்லியல் அகழ்வாய்வுகளில் கண்டுபிடிக்கப்பட்ட அகழ்வாய்வுச் சின்னங்கள் உறுதி செய்கின்றன. பழமையான கற்கோவில்கள் இங்கு இருந்தமைக்கான சான்றுகளும் கிடைக்கின்றன. பிற்கால ஐரோப்பியர் வருகையின் போது அவை சிதைக்கப்பட்டிருக்கலாம் என்பது இந்த யாழ்ப்பாணக் கோட்டை உள்ள பகுதியில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளின் வழி தெரிய வருகின்றது.*

*தமிழகத்தை ஆண்ட சோழ மன்னன் முதலாம் ராஜராஜன் இலங்கைத் தீவின் பெரும்பகுதியைத் தனது ஆட்சிக் காலத்தில் கைப்பற்றினான். அப்போது இலங்கையின் இன்றைய பொலநருவை உட்படப் பல பகுதிகளில் அவனால் சிவாலயங்கள் எழுப்பப்பட்டன. இந்த யாழ்ப்பாணக் கோட்டையில் கண்டெடுக்கப்பட்ட பழமையான கல்வெட்டொன்று முதலாம் ராஜராஜன், இங்குக் கட்டப்பட்ட கோயிலுக்கு வழங்கிய தானம் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றது.*

*இங்கு நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வு, இப்பகுதி சோழமன்னர் ஆட்சிக்காலத்தில், அதாவது கி.பி 9, 10ம் நூற்றாண்டு காலகட்டத்தில் இப்பகுதி ஒரு வணிகப்*

பெருநகரமாக இருந்திருக்கலாம் என்பதை விளக்குவதாக அமைகிறது. இக்கோட்டை அமைந்திருக்கும் பகுதி ஐந்நூற்றுவன் வளவு என அழைக்கப்படுகின்றது. சோழ மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் புகழ்பெற்று விளங்கிய வணிகக் குழுக்களில் பெயர்களையும் நகரங்களின் பெயரையும் ஒத்த வகையில் இது அமைந்திருப்பதையும் காணவேண்டியுள்ளது. இது இப்பகுதி ஒரு வணிகப்பெருநகரமாக அக்காலகட்டத்தில் திகழ்ந்திருக்கக்கூடிய சாத்தியக் கூறுகளை உறுதிப்படுத்துவதாகவும் அமைகின்றது.



டச்சுக்காரர்கள் காலத்தில் அவர்கள் எழுதிவைத்த ஆவணங்களில் யாழ்ப்பாணக் கோட்டை கட்டிய வரலாறும் கோட்டையைக் கட்டுவதற்கு அவர்கள் பயன்படுத்திய கற்கள் எவ்வாறு கொண்டுவரப்பட்டன என்ற வரலாறும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அதில் கோட்டை கட்டுவதற்கு வேண்டிய முருகக் கற்கள் (கோரல் கற்கள்) அருகில் உள்ள வேலனை, நயினாதீவு, எழுவைதீவு, அனலைதீவு ஆகிய இடங்களில் இருந்து பெறப்பட்டன என்ற செய்திகளை அறியமுடிகின்றது.

இத் தீவுகளைச் சுற்றி உள்ள பகுதிகளில் இருந்து முருகக் கற்களைக் கொண்டு வந்த ஒவ்வொருவருக்கும் அக்காலத்தில் 3 பணம் வழங்கப்பட்டது என்றும்,

கடலிலிருந்து கற்களைச் சேகரித்து தோணி ஏற்றுவதற்குத் தோணி ஒன்றுக்கு அரைப் பணம் வழங்கப்பட்டது என்றும் அறியமுடிகின்றது.

டச்சுக்காரர்கள் ஆட்சியின் போது இக்கோட்டைக்குள் ஒரு தேவாலயம் கட்டப்பட்டது. கி.பி1730ல் கட்டிமுடிக்கப்பட்ட இத்தேவாலயத்தின் அமைப்பு சிலுவை போன்ற வடிவில் அமைந்துள்ளது. தற்சமயம் இந்தத் தேவாலயம் போரினால் பாதிக்கப்பட்டுள்ளதால் ஆலயத்தின் முழுமையான வடிவமைப்பைத் தெரிந்து கொள்ள முடியாத அளவில் ஆலயம் முற்றாக அழிந்து கல் மேடாகக் காட்சியளிக்கிறது.

அண்மையில் இலங்கையில் நடைபெற்ற போரில் இந்த யாழ்ப்பாணக் கோட்டை பெரிய பாதிப்பை சந்தித்தது. போருக்குப் பின் இன்று இக்கோட்டையின் சில பகுதிகளைப் புனரமைக்கும் பணிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

யாழ்ப்பாணக் கோட்டை உள்ள இப்பகுதியில் நடைபெற்ற தொல்லியல் அகழ்வாய்வுகளின் போது கண்டுபிடிக்கப்பட்ட பொருட்கள் இங்குள்ள அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. அகழ்வாய்வில் கிடைத்த தொல்லியல் ஆதாரங்களும் பழமையான சிவாலயத்திற்குப் பயன்படுத்தப்பட்ட கற்கள் மற்றும் தூண்கள், கட்டிடத்தின் பாகங்கள் ஆகியவையும் கிடைத்துள்ளன.

இக்கோட்டைப்பகுதியில் மேலும் தொடர்ந்து அகழ்வாராய்ச்சிகள் நடத்தப்படுமானால் இப்பகுதியின் பண்டைய நாகரிகமும் வணிகச் சிறப்பும் மேலும் ஆய்வுலகத்தினால் வெளிக்கொண்டுவரப்படலாம்.

துணைநூல்கள்: -
இலங்கைத் தமிழர் வரலாறு - ஒரு சுருக்க வரலாறு, பேரா.ப.புஷ்பரட்ணம்
வரலாற்று உலா, ஆ.சி.நடராசா

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 17. 8ம் நூற்றாண்டில் வடவிலங்கை அரசு

*— ப. முகுந்தன்*

***முன்னுரை:***

*பொதுயுகத்திற்கு முற்காலத்திலிருந்தே இலங்கையின் வடபகுதி நாகநாடு/ நாகதீபம்/ உத்தர தேசம் என்று வழங்கப்பட்டு வந்தது. அப்பகுதியை ஆண்டவர்கள் சிலநேரங்களில் அனுராதபுர அரசைக் கைப்பற்றி ஆண்டது பற்றி மகாவம்சம், சூளவம்சம் போன்றவற்றிலிருந்து அறியலாம். இக்கட்டுரையில் நாகநாட்டின் பகுதியான கதிரமலை சிங்கைநகரை ஆண்ட உக்கிரசிங்கன், வாலசிங்கன் பற்றிப் பார்க்கலாம்.*

***வடவிலங்கைத் தகவல்கள்:***

*பதின்மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட யாழ்ப்பாண அரசின் வரலாற்றை பொதுவாகக் கட்டுக்கதை என்பதே பல வரலாற்று அறிஞர்களின் கருத்து. யாழ்ப்பாண வைபவமாலை (18ம் நூற்றாண்டு), வையாபாடல் (16ம் நூற்றாண்டு), கைலாயமாலை(16ம் நூற்றாண்டு அளவில்) என்பன கூறும் உக்கிரசிங்கன் கதையை இங்கு ஆராய்வோம்.*

***கைலாயமாலை கூறியது[1] :***

*சோழன் மகளொருத்தி கடற்கரை வந்து தீர்த்தமாடும்போது முருகன் அடியவனான கதிரமலை நாட்டரசன் அவளைக் கண்டு அவளை மணம்புரிந்து நரசிங்கன் எனும் மகனையும் ஒரு மகளையும் பெற்றான்.. நரசிங்கன் கதிரமலையை ஆளும்போது யாழ்ப்பாணன் என்பவன் கவிதை பாட நரசிங்கன் மகிழ்ந்து ஒரு நகரத்தைப் பரிசாக வழங்கினான். அந்த நகரத்தை யாழ்ப்பாணம் எனப் பெயர் சூட்டி யாழ்ப்பாணன் ஆண்டு வந்தான்.*

***வையாபாடல்[2] கூறியது:***

*அயோத்தி மன்னன் குலக்கேதுவின் மைத்துனன் உக்கிரசோழனின் மகன் சிங்ககேது , மகள் மாருதப்புரவை . மாருதப்புரவை குதிரை முகம் மாற இலங்கை கீரிமலை வந்து நீராட குதிரைமுகம் மறைந்ததனால் மாவிட்டபுரமென்று பெயர் சூட்டி இறைவனை வணங்கினாள். கதிரயம்பதியில் சென்று அரன் மகவை (முருகன்) வணங்கி உக்கிரமசிங்கசேனனை மணந்தாள். அதன்பின் உக்கிரமசிங்கசேனன் கதிரயம்பதியை விட்டு அடங்காப்பற்றேகி அங்கே வாவெட்டி மலையில் மண்டபம் கட்டி அரசாண்டான்.*

*அவனுக்குப்பின் ஆண்ட சிங்கமன்னவன் தன் மாமனான சிங்கேதுவிடம் தூதர்களை அனுப்பிப் பெண்கேட்க அவனும் அறுபது வன்னியர்களுடன் தனது பெண் சமதூதியை அனுப்பிவைத்தான்.*

***யாழ்ப்பாண வைபவமாலை[3] கூறியது:***

*சாலிவாகன சகாத்தம் 717-ல் உக்கிரசிங்கன் கதிரைமலையில் அரசாண்டு வந்தான்.*

*திசையுக்கிரசோழன் மகள் மாருதப்பிரவல்லி தனது வியாதியை மாற்றத் தீர்த்தமாடி வருகையில் சாந்தலிங்கம் என்ற சன்னியாசி கூறியதன் படி இலங்கையின் வடமுனையில் உள்ள கீரிமலைத் தீர்த்தத்திலே நீராடி குதிரை முகத்தை மாற்றினால்.*

*அங்கே உக்கிரசிங்கன் மாருதப்பிரவல்லியைக் கண்டு மயங்கினான். மாருதப்பிரவல்லி அங்கே மாவிட்டபுரம் என்று ஒரு கந்தசுவாமி கோவில் கட்டத்தொடங்கினாள்.*

*கோவில் திருப்பணி முடிய உக்கிரசிங்கன் மற்றும் மாருதப்பிரவல்லி கதிரமலை சென்று விவாகம் முடித்தனர்.*

*இதன்பின் சிறிது காலத்தில் உக்கிரசிங்கன் கதிரமலையிலிருந்து செங்கடகநகரிற்கு( சிங்கை நகர்) இராசதானியை மாற்றி அரசாளும்போது நரசிங்கராசன் எனும் மகனும் சண்பகவதி எனும் மகளும் பிறந்தார்கள்.*

*அவனுக்குப்பின் நரசிங்கராசன் என்னும் வாலசிங்கன் செயதுங்கவரராசசிங்கம் என்னும் பட்டத்துடன் அரசாண்டான்.*

*சோழநாட்டிலிருந்து வந்த இரண்டுகண்ணும் குருடான கவிவீரராகவன் என்னும் யாழ்ப்பாணன் என்பவன் வாலசிங்கன் பேரிற் பிரபந்தம் பாடி யாழ் வாசித்துப் பாடியமையால் மகிழ்ந்த அரசன் இலங்கையின் வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் நாட்டைக் கொடுத்தான்.*

*யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் எனப் பெயரிட்டு ஆண்டான்.*

**மேற்குறிப்பிட்ட நூல்கள் கூறுவதைப் பின்வருமாறு தொகுக்கலாம்:**

*அயோத்தி மன்னன் குலக்கேதுவின் மைத்துனன் சோழநாட்டு மன்னன் திசையுக்கிரசோழன். அவன் மகன் சிங்ககேது , மகள் மாருதப்புரவை ( மாருதப்பிரவல்லி) .*

*சாலிவாகன சகாத்தம் 717-ல் (பொ.பி.795) உக்கிரசிங்கன் என்பவன் கதிரைமலையில் அரசாண்டு வந்தான். தன் நோய் நீங்கக் கீரிமலை வந்த*

*மாருதப்புரவை மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயிலைக் கட்டினாள். உக்கிரசிங்கன் – மாருதப்பிரவை மணம் செய்தனர். பின்னர் உக்கிரசிங்கன் கதிரமலையை விட்டு அடங்காப்பற்றேகி / செங்கடகநகரிற்கு( சிங்கை நகர்) சென்று அங்கே வாவெட்டி மலையில் மண்டபம் கட்டி அரசாண்டான்.*

*அவர்களுக்கு நரசிங்கனும் (சிங்கமன்னவன்) செண்பகவதியும் பிறந்தனர்.*

*உக்கிரசிங்கனுக்குப்பின் நரசிங்கராசன் என்னும் வாலசிங்கன் செயதுங்கவரராசசிங்கம் என்னும் பட்டத்துடன் அரசாண்டான்.*

*நரசிங்கராசன் தனது மாமனான சிங்ககேதுவிடம் தூதர்களை அனுப்பிப் பெண்கேட்க அவனும் அறுபது வன்னியர்களுடன் தனது பெண் சமதூதியை அனுப்பிவைத்தான்.*

*சோழநாட்டிலிருந்து வந்த இரண்டுகண்ணும் குருடான கவிவீரராகவன் என்னும் யாழ்ப்பாணன் என்பவன் வாலசிங்கன் பேரிற் பிரபந்தம் பாடி யாழ் வாசித்துப் பாடியமையால் மகிழ்ந்த அரசன் இலங்கையின் வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் நாட்டைக் கொடுத்தான்.*

*யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் எனப் பெயரிட்டு ஆண்டான்.*

*இதுவரை வடவிலங்கையின் புராதன நூல்கள் கூறிய கருத்துக்களைப் பார்த்தோம். தற்போது கிழக்கிலங்கைச் செப்பேடுகள் சிலவற்றைப் பார்ப்போம்.*

***கிழக்கிலங்கைத் தகவல்கள்:***

*கிழக்கிலங்கைச் செப்பேடுகள் பற்றிய விபரம் அருள் செல்வநாயகம் எழுதிய சீர்பாதகுல வரலாறு (http://www.noolaham.org/wiki/index.php/சீர்பாதகுல_வரலாறு)*

*மற்றும் வித்துவான் F. X, C. நடராசா எழுதிய மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்(http://noolaham.net/project/46/4575/4575.pdf) என்னும் நூல்களிலிருந்து பெறப்பட்டது. இச் செப்பேடுகளில் உள்ள தகவல்கள் எப்போது எழுதப்பட்டன என்பதற்குச் சரியான ஆதாரங்கள் கிடைக்காவிடினும், அவற்றில் சில சுவையான விடையங்கள் காணப்படுகின்றன. கண்டி , இந்தியா என்னும் சொற்களின் மூலம் இவை 18ம் நூற்றாண்டில் பதிப்பிக்கப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகின்றது..*

***வீரர்முனை செப்பேடு[4] கூறுவது:***

*கலிங்க நாட்டு உக்கிரசிங்கன் கண்டியை ஆண்டான். மருதப்புரவீகவில்லியை அவன் மணந்து பெற்ற மகன் வாலசிங்கன்.*

*அவன் குமராங்குசன் என்ற சோழனின் மகள் சீர்பாததேவியை மணந்தான்.*

***துறைநீலாவணைச் செப்பேடு[5] கூறுவது:***

*சற்சன சோழன் மகளான மாருதப்புரவீக வல்லி, குதிரை முகம் மாற, வடிவேற் பெருமான் வீற்றிருக்கும் நாகநாட்டில் உள்ள கதிரை எனும் இடத்திற்குச் செல்ல விரும்பி இலங்கை வந்து கீரிமலை வந்து குதிரை முகம் மறைய மகிழ்ந்து தந்தைக்குத் திருமுகம் அனுப்பி கந்தன் பொற்சிலையைக் கேட்டாள். அது வந்து இறங்கிய கச்சாத் துறை, காங்கேசன் துறை எனப்பட்டது. கோவில் கட்டி மாவிட்டபுரம் எனப் பெயர் வைத்துத் தாய்நாடு போகவிருந்தபோது, உக்கிரவீரசிங்கன் அங்குவந்து அவளை மணந்து வாலசிங்கம் எனும் மகனைப் பெற்றனர். பின்னர் வாலசிங்கன் அரசாளும்போது சோழ மன்னனின் மகள் சீர்பாத தேவியை மணந்தான்..*

*இங்கே கூறப்பட்ட கதைகள் அனைத்திலும் காணப்பட்ட பொதுத் தன்மையைப் பார்த்தால், கதிரமலையை ஆண்ட உக்கிரசிங்கன், அவன் மனைவி மாருதப்பிரவை ஒரு சோழனின் மகள். அவர்களின் மகன் வாலசிங்கன்.. அவன் மணந்ததும் ஒரு சோழன் மகள் சமதூதி/சீர்பாததேவி*

*மாருதப்பிரவையின் தந்தை பெயர் திசையுக்கிர சோழன் / சற்சன சோழன். யாழ்ப்பாண வைபவ மாலை கூறும் சாலிவாகன சகாத்தம் 717-ற்குப் பின் 8ம் ஆண்டு (கி.பி.803) காலப்பகுதியில் சோழர் வரலாறு தெளிவாக இல்லை.. வாலசிங்கன் மணந்த சோழ இளவரசியின் தந்தையின் பெயர் சிங்ககேது. வீரர்முனைச் செப்பேட்டின்படி அவன் பெயர் குமராங்குசன். வையாபாடலின் படி அச்சோழன் மாருதப்பிரவையின் சகோதரன்.. இக்காலப்பகுதியில் குமராங்குசன் என்ற பெயரில் ஒரு சோழன் ஆண்டிருக்கின்றான்.*

***9ம் நூற்றாண்டில் தென்னிந்தியாவின் நிலை:***

*9ம் நூற்றாண்டின் ஆரம்பப்பகுதியில் சோழர்கள் சிற்றரசர்களாகவே ஆண்டுவந்தனர். பொ.பி 850ம் ஆண்டளவில் விஜயாலய சோழன் ஆட்சிக்கு வந்தான். இவனது ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற திருப்புறம்பியம் போரில் (888) இவனும் இவன் மகன் ஆதித்தனும் வகித்த பங்கு சோழரின் எழுச்சிக்கு உதவியது. விஜயாலயன் முத்தரையர்களின் கையில் இருந்த தஞ்சையைக் கைப்பற்றிக்கொண்டான்.*

*தந்திவர்மன் (796-846 ) எனும் பல்லவ மன்னன் காலத்தில் முதலாம் வரகுண பாண்டியன்(792-835) பல்லவர்க்குக் கீழ்ப்பட்டிருந்த சோழ நாட்டையும் தொண்டை நாட்டின் பெண்ணையாறுவரையான பகுதியையும் கைப்பற்றியிருந்தான்(780). வரகுணனுக்குப் பின் அவன் மகன் வல்லபன்(835-862) அரசாண்டான். அக்காலப் பல்லவ மன்னன் மூன்றாம் நந்திவர்மன் (பொ.பி 843-866). பொ.பி 850 அளவில் நடைபெற்ற தெள்ளாற்றுப் போரினால் நந்திவர்மன் சோழநாட்டை மீண்டும் கைப்பற்றினான்.*

*முதலாம் வரகுணன் காலத்தில் களக்குடி நாட்டு கரவந்தபுரம் பகுதியில் உக்கிரன் என்பவனை வரகுணன் முறியடித்ததாக ஒரு கதை உண்டு. அவனும்*

*திசைஉக்கிரசோழன் எனக் குறிப்பிடப்படுபவனும் வாழ்ந்த நிலப்பகுதி (பொ.பி.803) ஒன்றானாலும் அவர்கள் இருவரும் ஒன்றா என்பது தெரியவில்லை.*

***வேலூர்பாளையப் பட்டயம்:***

*மூன்றாம் நந்திவர்மனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்ட வேலூர்பாளையப் பட்டயத்தில் (South Indian Inscriptions, Vol. II, pp. 507-510) புழல் கோட்டம் ஞாயிறு நாடு திருக்காட்டுப்பள்ளி என்ற ஊரைச் சிவன்கோவிலுக்குத் தானமாக வழங்கியமை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. இத் தானத்தை வழங்குமாறு கேட்டுக்கொண்டவன் ''சோழமகாராஜா குமராங்குசன்'' எனக் குறிக்கப்படுகின்றான். இதன்படி பொ.பி 848 அளவில் சோழ நாட்டை ஆண்டவன் குமராங்குசன். பல்லவர்களால் சோழமகாராஜா எனக் கூறப்படுமளவுக்கு இருந்திருக்கின்றான். ( வரகுணனையும் மகாராஜா என்றே பல்லவர்கள் குறிப்பிட்டுள்ளனர்). இவனுக்குப் பின் விஜயாலயன் (பொ.பி 850) ஆட்சிக்கு வந்தான்.*



(*C.P. No.* 24 *of* 1910–11).

VĒLŪRPĀḶAIYAM PLATES OF NANDIVARMAN III: 6TH YEAR.

This copper-plate record issued in the **6th year** of **Nandivarman** (III) registers a gift of the village **Śrīkāṭṭuppaḷḷi**, to the Śiva temple built by Yajñabhaṭṭa, at the request of **Chōḷa-Mahārāja Kumārāṅkuśa**, for the expenses of daily worship and for a feeding house. This Chōḷa-Mahārāja and Vijayālaya, the founder of the revived Chōḷa line at Tanjore are taken to have belonged to one and the same family. This is doubtful and he should propably have belonged to the family of Rēnāṇḍu Chōḷas[4].

Published in *South Indian Inscriptions*, Vol. II, pp. 507–510.

*வேலூர்பாளையப் பட்டயத்தில் கூறப்படும் குமராங்குசன் என்பவனும் இலங்கை மூலங்களில் கூறப்படும் குமராங்குசனும் வாழ்ந்த காலம் சமகாலமாயிருப்பதால், இருவரும் ஒன்று எனக் கூறலாம்.*

*(சுந்தரமூர்த்தி நாயனார் கூறும் கழற்சிங்கன் என்பவன் மூன்றாம் நந்திவர்மன் என்பது பலரது கருத்து. கழற்சிங்கனுக்குக் கீழ் ஆண்ட குமராங்குசனுக்குச் சிங்கதேது எனப் பெயர் இருந்ததா எனச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.*

*கரிகாலன் வழிவந்த சோழனாகக் கூறும் புண்ணியகுமாரனின் மேலப்பாடு செப்பேட்டில்(EPIGRAPHIA INDICA VOL XI பக்.337) சிங்க இலச்சினை காணப்படுவதையும் இங்கே சிந்தித்துப்பார்க்கவேண்டும். )*

*அக்காலச் சோழர் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களிலிருந்து ஆண்டிருக்கச் சாத்தியங்கள் உள்ளன . பல்லவர் சார்பான சோழர் தொண்டை மண்டல ஞாயிறு*

*நாட்டுப் பகுதியிலும், பாண்டியர் சார்பான சோழர் பாண்டியர் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளிலும் ஆண்டிருக்கலாம்.*

*கிழக்கிலங்கையில் எழுந்த செப்பேடுகள் பிற்காலத்தில் ( 16-17ம் நூற்றாண்டு) தென்னிந்தியாவில் இருந்த ஓர் இளவரசியைக் கண்டி இராசதானிக்கு மணமுடிக்கக் கூட்டிவரும்போது அவளுடன் வந்தவர்களால் ஏற்படுத்தப்பட்ட வீரமுனைப் பிரதேசம் மற்றும் சிந்தாயாத்திரைப் பிள்ளையார் கோயிலின் வரலாற்றைப் பழைய கதையொன்றுடன் இணைக்கும் போக்கில் எழுதப்பட்டதாகத் தோன்றுகின்றது. இதே போல் கண்ணகி கதையையும் வெடியரசன் கதையையும் இணைத்து கண்ணகிக்குக் காற்சிலம்புக்கு மாணிக்கம் எடுக்க வந்த மீகாமனுக்கும் வெடியரசனுக்கும் சண்டைநடந்தாகக் கூறும் கண்ணகி வழக்குரை காவியம் தோற்றம்பெற்றது.*

*அதேபோல பொ.பி 13 ம் நூற்றாண்டளவில் வாழ்ந்ததாகக் கருதப்படும் அந்தக் கவி வீரராகவன் கதையும் இங்கே யாழ்ப்பாணன் கதையுடன் இணைக்கப்பட்டுள்ளது.*

*வடவிலங்கை, கிழக்கிலங்கை, தென்னிந்திய ஆதாரங்களை வைத்துப் பார்க்கும்போது பின்வருமாறு முடிவுசெய்யலாம்.*

*பொ.பி 810 அளவில் இருந்த சோழன் திசையுக்கிர சோழன் / சற்சன சோழன் . அவன் மகள் மாருதப்புரவீகவல்லி. பொ.பி 795 முதல் கதிரமலையை ஆண்ட உக்கிரசிங்கன் என்பவன் அவளை மணந்தான். பின்னர் கதிரமலையை விட்டு சிங்கைநகர்/வாவெட்டி மலை சென்று அரசாண்டனர். அவர்களுக்கு வாலசிங்கன்(நரசிங்கன்) , செண்பகவதியும் பிறந்தனர். உக்கிரசிங்கனுக்குப் பின் வாலசிங்கன் செயதுங்கவரராசசிங்கம் என்னும் பட்டத்துடன் அரசாண்டான். அவன் தனது தாயின் சகோதரனான குமராங்குசன்/சிங்ககேதுவிடம் தூதர்களை அனுப்பிப் பெண்கேட்க அவன் தனது பெண் சமதூதியை அனுப்பிவைத்தான்.*

*யாழ்ப்பாணன் என்பவன் வாலசிங்கன் பேரிற் பிரபந்தம் பாடி யாழ் வாசித்துப் பாடியமையால் மகிழ்ந்த அரசன் இலங்கையின் வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் நாட்டைக் கொடுத்தான்.*

*யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் எனப் பெயரிட்டு ஆண்டான்.*

*இதிலிருந்து, பொ.பி 850 அளவில் சிங்கைநகர் என்னும் அரசு வாலசிங்கன் என்னும் செயதுங்கவரராசசிங்கம் என்பவனால் ஆளப்பட்டுவந்து எனவும் அவன் காலத்தில் யாழ்ப்பாண நகர் தோற்றம்பெற்றது என்பதை அறியலாம்.*

*இலங்கையின் சிங்கள அரச வம்ச வரலாற்றைக் கூறும் நூலான சூளவம்சம் (Chapter 48) மன்னன் இரண்டாம் மகிந்தன் காலத்தில் (பொ.பி 787 – 807) நடைபெற்ற இரண்டு வடபிரதேசப் படையெடுப்புப்பற்றிக் கூறுகின்றது.*

*முதலாவது படையெடுப்பு : அக்கபோதியின் இறப்பின் பின்னர் நாட்டில் ஏற்பட்ட குழப்பநிலையைப் பயன்படுத்தி உத்தர தேசத் (வட பிராந்தியம்) தலைவர்கள் மக்களுடன் சேர்ந்து அதனைத் தமதாக்கிக்கொண்டதோடு திறை கொடுக்கவும் மறுத்தனர். மகிந்தன் படையோடு சென்று அவர்களை அடக்கினான்.*
*இரண்டாவது. படையெடுப்பு : சிறிது காலத்தின் பின் மகிந்தன் – தப்புலனுடன் போரிட கலாவாவி நோக்கிச் சென்றபோது உத்தரதேசத் தலைவர்கள் தலைநகரைக் கைப்பற்றினார்கள். பின்னர் மகிந்தன் அவர்களைத் துரத்திவிட்டான்.*

*மேற்கூறப்பட்டவாறு சூளவம்சத்தில் கூறப்படுவதிலிருந்து , தலைநகர் அனுராதபுரத்தைக் கைப்பற்றுமளவுக்கு அக்கால உத்தரப்பிரதேசத் தலைவர்கள் இருந்திருக்கின்றார்கள் எனத் தெரிகின்றது. இது யாழ்ப்பாண வைபவ மாலை கூறும் உக்கிரசேனன் காலப்பகுதியை உறுதிப்படுத்துகின்றது.*

***உதவிய சான்றுகள்:***

*1. கைலாயமாலை கூறுவது*
*2. வையாபாடல் கூறுவது*
*3. யாழ்ப்பாண வைபவமாலை கூறுவது*
*4. வீரர்முனை செப்பேடு*
*5. துறைநீலாவணைச் செப்பேடு*

*தொடர்பு: ப. முகுந்தன் (mukunthan@gmail.com)*

***8ம் நூற்றாண்டில் வடவிலங்கை அரசு - பிற்சேர்க்கை:***

***1. கைலாயமாலை கூறுவது:***

*(முத்துராச கவிராசரின் கைலாயமாலை http://www.noolaham.net/project/02/101/101.htm)*
*உதபகுல ராசன் உதயமதி வாசன்*
*சிதைவின்மனு ராசவம்ச தீரன்-துதையளிகள்*

*பாடுமலர் ஆத்திபுனை பார்த்திவன்தன் சீர்த்திமுற்றும்*
*தேடுந் தனிக்கவிதைச் செம்பியர்கோன்- நீடுகரைப்*

*பொன்னித் துறைவன் புலிக்கொடியன் பூவில்மன்னர்*
*மன்னனெனுஞ் சோழன் மகளொருத்தி-கன்னிமின்னார்*

*தேடுங் கடலருவித் தீர்த்தசுத்த நீரகத்துள்*
*ஆடிப் பிணிதணிப்பத் தானினைந்து-சேடியர்தஞ்*

*சேவைகளுங் காவலுறு சேனையுமாய் வந்திறங்கிப்*
*பாவையுறு தீர்த்தம் படிந்ததற்பின்-ஏர்வைபெறு*

*கங்குலுற எங்குமிகு காவ லரண்பரப்பிச்*
*சங்கையுறு கூடாரந் தானமைத்து-மங்கை*

*விரிந்தசப்ர மஞ்சமெத்தை மெல்லணையின் மீதே*
*பொருந்துதுயி லாயிருக்கும் போது-வரிந்தசிலை*

*வேடர்குல மாதுபுணர் வேலா யுதகரன்செங்*
*காடன் புதல்வன் கதிர்காமன்-ஏடவிழுந்*

*தார்க்கடம்பன் பேர்முருகன் தாமோ தரன்மருகன்*
*சீர்க்குரவன் தேவர் திரட்கொருவன்- சூர்ப்பகையை*

*மாற்றுங் குகன்குழகன் வாய்ந்தஅடி யார் துயரை*
*ஆற்றுங் குமரன் அருளாலே-போற்றுதவர்*

*வாய்ந்த கதிரைமலை வாழு மடங்கன்முகத்*
*தாய்ந்த நராகத்(து) அடலேறு-சாய்ந்துகங்குல்*

*பேரவதன்முன் ஏகியந்தப் போர்வேந்தன் மாமகள்தன்;*
*காவல் கடந்தவளைக் கைப்பிடித்தே-ஆவலுடன்*

கொண்டேகித் தன்பழைய கோலமலை மாமுழைஞ்சில்
வண்டார் குழலை மணம்புணர்ந்(து)-உண்டான

பூவிலநு போகம் பொருந்திப் புலோமசையுங்
காவலனும் போலக் கலந்திடுநாள்-தாவில்மணப்

பூமான் மதிக்கப் புவிமான் மகிழ்ச்சியுறக்
கோமான் மனுவின் குலம்விளங்க-நாமானும்

உன்னிமிகும் ஆசி உரைத்துத் திருத்தமிகு
தன்னிதய சந்தோஷந் தான்பெருக-மன்னுபுவி

மாந்தர்சுக மேவ மனுநீதி யுண்டாக
வேந்தர்கள்தம் நெஞ்சம் மிகநடுங்கப்-பூந்தவிசின்

வேதன்கை நோகவரும் மேலோன் விழிதுயிலப்
போதன்மணி மேனி புளகரும்பச் சோதிபெறு

தேவா லயங்கள் செயும்பூ சனைசிறக்க
மேவுஆலை வில்லி விருதுகட்ட-நாவார்

மறையோர்கள் வேள்விமல்க மாதவங்க ளோங்கக்
குறையாது நன்மாரி கொள்ள-நிறைவாகச்

செந்நெல் விளையச் செகம்செழிக்கச் செல்வமுற
மன்னன் மகள்தன மணிவயிற்றில்-மன்னு

கருவாய்ந்(து) அயனமைத்த கட்டளைகள் திட்ட
உருவாய்ந்து பத்துமதி யொத்துத்-திருவாய்ந்த

திங்கள் முகத்தழகுஞ் செய்யவடி வாலழகும்
துங்கமுறும உச்சிச் சுழியழகும்-பொங்குமணிக்

கண்ணழகும் மூக்கழகுங் காதழகுங் கையழகும்
மண்ணில நராபோல் வடிவழகும்-நண்ணி

வரசிங்க ராயன் மகாராச ராசன்
நரசிங்க ராசனெனும் நாமத்-துரைசிங்கம்

வந்துபிறந் திந்தவள மண்டலமெல் லாம்மதிக்க

இந்துவென வேவளரும் ஏல்வையினிற்-பிந்தியொரு

பெண்பிறந்தாள் அந்தவெழிற் பெண்ணையுமுன் அண்ணலையுங்
கண்போல் வளர்த்துக் கவின்பெறலும்-நண்பாகத்

தந்தையர்க்குந் தாயருக்குஞ் சாற்றுமணம் ஆற்றுவித்த
கந்தனுமை மைந்தன் கருணையினால்-வந்த

இருவருக்கும் நன்முகூர்த்த மிட்டுமகிழ் பூப்பத்
தருவிருக்கு மாலைவடஞ் சாத்தித்-திருவிருக்குஞ்

செய்யமணஞ் செய்து திறல்வேந்தர் போற்றிநிற்பத்
துய்யநவ ரத்னமுடி சூட்டியபின்-பையரவின்

உச்சியினின் றாடும் ஒருவனின் ஆகுமென்ன
மெச்சுக்ர வாளகிரி வெற்புமட்டும்-உச்சிதஞ்சேர்

தன்னாணை செல்லத் தரியலர்கள் தாள்வணங்கப்
பொன்னாட் டரசன் புகழ்குறையப்-பன்னாட்

டரசர் திறையளப்ப அந்தணர்கள் வாழ்த்த
முரசதிரப் பேரி முழங்க-வரிசையுடன்

சங்கமெழுந் தார்ப்பத் தமனியப்பொற் காளாஞ்சி
மங்கையர்க ளேந்தி மருங்கி(ல்)நிற்ப-எங்குமிகு

கட்டியங்க ளார்ப்பக் கனஅரி யாசனத்தில்
இட்டமெத்தை மீதில் இனிதிருந்து-திட்டமுடன்

நங்கோ னிராமன் நடத்தியுல காண்டதுபோற்
செங்கோ லரசு செலுத்தும்நாள்-மங்காத

பாவலர்கள் வேந்தன் பகருமி யாழ்ப்பாணன்
காவலன்தன் மீது கவிதைசொல்லி- நாவலர்முன்

ஆனகவி யாமின் அமைவுறவா சித்திலும்
மானபரன் சிந்தை மகிழ்வாகிச்-சோனைக்

கருமுகில் நேருங் கரன்பரிசி லாக
வருநகர மொன்றை வழங்கத்-தருநகரம்

*அன்றுமுதல் யாழ்ப்பாணம் ஆன பெரும்பெயராய்*
*நின்ற பதியில் நெடுங்காலம்-வென்றிப்*

*புவிராசன் போலப் புகழினுட னாண்ட*
*கவிராசன் காலங் கழிய-அவிர்கிரண*

*சந்திரனில் லாதவெழிற் றாரகைபோல் வானரசாள்*
*இந்திரனில் லாத இமையவர்போல்-விந்தை*

*கரைசேரிம் மாநகர்கோர் காவலரண் செய்யுந்*
*தரையரச னின்றித் தளம்ப-விரைசேருந்*

---

***2. வையாபாடல் கூறுவது:***
*(வையாபாடல் - பதிப்பாசிரியர் க. செ. நடராசா*
*http://www.noolaham.net/project/02/151/151.htm)*
*அரசளித் தவனங் கிருந்திடு நாளி*
*லயோத்தி மன்னன் குலக்கேதுக்*
*குரியமைத் துனனவ் வுக்கிர சோழ*
*னுகந்துபெற் றிடுமக வானோர்*
*மரபினுக் குரிய சிங்ககே தென்ற*
*மைந்தனு மாமுகந் தரித்தங்*
*சூரனொடு முதித்தாள் மாருதப் பிரவை*
*யுவமையில் வல்லியென் பவளும்*

*கூடிய குதிரை முகமது மாறக்*
*குணமுள் தீர்த்தங்கள் யாவும்*
*தேடியே யிலங்கை நகரினிற் சென்று*
*திறமுள கீரிமா மலையி*
*லாடினள் தீர்த்த மம்முக மகன்ற*
*தன்னதால் மாவிட்ட புரமென்*
*றேடரு நதியும் நிகரில வென்றே*
*யிறைஞ்சின ளிறைவனை நினைந்தே*

*பொன்னகர் நிகருங் கதிரையம் பதியிற்*
*போயரன் மகவினை வணங்கிப்*
*பின்னருக் கிரம சிங்கசே னன்றன்*
*பெண்ணென விருந்தன ளதற்பின்*
*மன்னவ னடங்காப் பற்றினி லேகி*

மாநகர் வாவெட்டி மலையிற்
றன்னிக ரற்ற மண்டப மியற்றித்
தன்னர சியற்றின னிருந்தான்

அப்பொழு தன்னான் றனக்கொரு மைந்த
னரியினின் முனமுமோர் வாலு
மொப்பனை சொல்லற் கரியதா யுதித்தா
னுலகனில் விபீஷண னந்நாள்
செப்புதற் கரிய வைகுந்த பதவி
சேர்ந்திட நினைத்தவன் றன்னை
யெப்புவி தனக்கு மிறைவனா யிருத்தி
யென்றினி திருத்தினா னியல்பால்

மன்னவ னிராமன் கொடுத்திடு முடியும்
மந்திர வாளுமெவ் வுலகுந்
தன்னடி படுத்துஞ் சக்கர மொன்று
தன்கையி லிடுகணை யாழி
மின்னிக ரிடையாள் மோகினி யென்னும்
வீரமா காளிமற் றுன்னித்
துன்னலர் தம்மைச் செகுத்திடு மென்றே
தொகைபெறக் கொடுத்தனன் மாதோ

மானகர் தன்னை யாண்டிடு சிங்க
மன்னவன் தூதரை யழைத்துத்
தேனலர் மாலைப் புயத்தவன் சிங்க
கேதுவென் பானிட மணுகி
யான்மண முடிக்க விசைத்திடு நீவி
ரென்னலு மடிமுறை பணிந்து
கானகங் கங்கை நீங்கியே மதுரைக்
காவலன் றனக்கிவை யுரைத்தார்

கேட்டு மாமது ராபுரி மன்னவன் கிளர்ந்த
தாட்ட கம்பெறு வன்னியர் தரணிப குலத்தோர்
காட்ட கம்பெறு வாள்கட கஞ்சுழல் கையார்
கூட்ட மாயினா ரறுபது பேரையுங் குறித்தான்

குறித்து நீவிரிம் மாதினைக் கொண்டசென் றிலங்கைப்
புறத்து மாநக ராளுவோற் குள்ளன புகன்று
மறத்த ராமென மற்றவற் காயிரங் கதிரோன்
திறத்து ளோர்புகழ் சந்திரன் றனைவிரு தீந்தான்

*ஈந்த பின்னவட் கிணையிலா வியந்திரத் திகிரி*
*வாய்ந்த வெண்மைசேர் குடைமுதல் வாகன முதவி*
*யேந்த லாமென வேகுமி னென்றலு மிறைஞ்சிக்*
*கூந்தல் சேர்முடி யழகினள் குதிரைமேற் கொண்டாள்*

*குதிரை மீதினி லேறியே கொங்கர்கோன் புதல்வி*
*மதியி னாள்சம தூதியை மன்னவன் றனக்கு*
*விதிய தாய்மண முடித்தபின் விளங்கிடு மடங்காப்*
*பதியை நீரர சாண்மெனப் பார்த்திபன் புகன்றான்*

---

***3. யாழ்ப்பாண வைபவமாலை கூறுவது:***
*(யாழ்ப்பாண வைபவ மாலை. மயில்வாகனப் புலவர் (மூலம்), குல.சபாநாதன் (பதிப்பாசிரியர்) http://noolaham.net/project/03/256/256.html)*
*சாலிவாகன சகாத்தம் 717-ல் (கி.பி.795) விஜயராச னின் சகோதரன் மரபிற் பிறந்த உக்கிரசிங்கன் என்னும் அரசன் வடதிசையிலிருந்து பெருந்திரளான சேனைகளைக் கொண்டு வந்து போராடிச் சில தலைமுறையாய் இழந்து போனஇவ்விலங்கை அரசாட்சியில் அரை வாசி வரைக்கும் பிடித்துக் கதிரை மலையிலிருந்து அரசாண்டு வந்தான். தென் னாடுகளை வேற்றரசன் ஆண்டுவந்தான்.*
*இவ்வுக்கிரசிங்க மகாராசனுக்குச் சிங்கத்தையொத்த முகமும் மானிட தேகமுமிருந்தன. இவன் நகுலேசர் கோவி லைத் தரிசிக்கக் கீரிமலைச் சாரலில் வந்திறங்கி, முற்காலத்திலே சோழராசன் தான் தீர்த்தமாட வந்திறங்கியிருக்கும் காலத்திலே மாளிகை கட்டுவித்திருந்த வளவர்கோன் பள்ளம் என்னும் இடத்திலே பாளயமிட்டிருந்தான்.*
*தொண்டைமான் வரவு*
*அவன் அவ்விடத்தில் வந்திருப்பதையும், கரணவாய், வெள்ளப்பரவை முதலிய இடங்களில் நல்லுப்புப் படுஞ்செய்தியையும் தொண்டை நாட்டை அரசாண்ட தொண்டைமான் என்னும் அரசன் கேள்விப்பட்டுப் பரிவா ரங்களுடன் கீரிமலைச் சாரலில் வந்திறங்கிச் சந்தித்து, அந் நாட்டில் விளையும் உப்பிலே தனக்கு வேண்டியவளவு வருடந்தோறும் விலைக்குக் கொடுக்கவும், உப்புப் படுமிடத்துக்குச் சமீபத்திலே மரக்கலங்களைக் கொண்டுபோய் உப்பேற்ற வும், மாரி காலங்களில் மரக்கலங்களை ஒதுக்கிவிட்டு நிற்க வும் வசதியாக வடகடலில் ஓர் ஆறு வெட்டுவித்துக்கொள்ள வும் உத்திரவு கேட்டான். உக்கிரசிங்க மகாராசன் உத்தரவு கொடுக்கத் தொண்டைமான் அங்கிருந்த சிற்றாற்றை மரக்க லங்கள் ஓடத்தக்க ஆழமும் விசாலமும் உள்ளதாகவும் ஒதுக் கிடமுள்ளதாகவும் வெட்டுவித்துத் தன்னூருக்கு மீண்டான். அது முதல் இதுவரைக்கும் அவ்வாறு தொண்டைமானாறு என்று அழைக்கப்படுகின்றது.*
*வன்னியர் அடக்கம்*

உக்கிரசிங்க மகாராசன் அதன்பின் கதிரை மலைக்குத் திரும்பினான். அவன் வன்னி மார்க்கமாகச் செல்லுகையில் வன்னியர் ஏழு பேரும் எதிர்கொண்டு வந்து, தாங்கள் வன்னி நாடுகளைத் திறைகொடுத்து ஆள உத்தரவு கேட்டனர். அரசன் தன்னிராச்சியமெங்கும் தன் ஆணையே செல்லவுந் தனக்கு வரவேண்டிய திறையைக் கோணேசர் கோவிலுக்குக் கொடுக்கவும் உடன்பாடு பண்ணுவித்துக் கொண்டு கதிரை மலையிற் சேர்ந்தான்.

மாருதப்பிரவல்லி:

இவை சம்பவித்த எட்டாம் வருடத்திலே சோழ தேசாதி பதியாகிய திசையுக்கிரசோழன் மகள் மாருதப்பிரவல்லி என்பவள், தனக்கிருந்த குன்ம வியாதியினால் மெலிந்தவ ளாய், வியாதியை வைத்தியர் ஒருவருஞ் சுகமாக்க முடியாத தனால், இனித் தீர்த்த யாத்திரையாதல் செய்து பார்த்தால் சுகம் வரவுங்கூடும்', என்றெண்ணிக் காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து புறப்பட்டு, அங்குமிங்கும் போய்த் தீர்த்தமாடி வரு கையில் சாந்தலிங்கனென்னும் ஒரு சந்நியாசி கண்டு, "உன் வியாதி பண்டிதர் ஒருவராலுங் குணமாக்கத் தக்கதன்று. நீ இப்பொழுது எடுத்த முயற்சியே உனக்குச் சுகம் தரத்தக்கது. இலங்கையின் வடமுனையிலே கீரிமலை என்றொரு மலை யுண்டு. அது சமுத்திர தீரத்திலுள்ளது. அங்கே உவர்ச்சல் மத்தியிற் சுத்த தீர்த்தமும் மலையருவித் தீர்த்தமுங் கலந்த உத்தம தீர்த்தம் ஒன்றுண்டு. அது உலகத்திலுள்ள எந்தத் தீர்த்தங்களிலும் முக்கிய தீர்த்தமாயிருக்கின்றது. அதிலே நீ போய் நீராடிச் சில காலந் தங்கியிருந்தாற் சுகமடைவாய் என்று சொல்ல, அச்சொற்படி மாருதபிரவல்லி புறப்பட்டுத் தாதிமாருந்தோழிமாருஞ் சூழ்ந்துவரக் கீரிமலைச் சாரலில் வந்திறங்கிக் குமாரத்தி பள்ளம் என்னும் இடத்திற் பாளையம் போட்டுக் கொண்டிருந்து, நகுலமுனிவரைக் கண்டு சாட்டாங்கமாக வணங்கி, அவரால் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு, அத்தல விசேடத்தையும், தீர்த்த மகிமையையும், அத்தீர்த்தத்தில் ஆடித்தனக்குக் கீரிமுகம் மாறின செய்தி யையும் அம்முனிவர் சொல்லக் கேட்டு,மிக்க சந்தோஷத்து டன் தீர்த்தமாடிச் சிவாலய தரிசனை செய்து வந்தாள். சில காலத்தில் அவளுக்கிருந்த குன்மவலியுந் தீர்ந்து, குதிரை முகமும் மாறிற்று. மாறவே, மாருதப்பிரவல்லியின் யௌ வன சொரூபத்தைக் கண்டவர்கள் ஆச்சரியங் கொள்ளாதி ருந்ததில்லை.

அக்காலத்திலே கதிரை மலையிலிருந்து உக்கிரசிங்க மகாராசன் நகுலேசர் கோவிலைத் தரிசிக்க மூன்றாந்தரம் கீரிமலைச் சாரலில் வந்திறங்கி, வளவர்கோன் பள்ளத்திற்பா ளையம் போட்டிருந்தான். அவன் மாருதப்பிரவல்லியை நகுலேசர் சந்நிதானத்தயலிலே கண்டு, அவள் பேரழகினால் மயங்கி, மிகுந்த ஆச்சரியங் கொண்டு, தான் அவளை விவா கஞ் செய்ய வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான்.

மாவிட்டபுரம்

மாருதப்பிரவல்லி தனக்குக் குதிரை முகம் நீங்கின காரணத்தினாற் கோவிற்கடவை என்னுங் குறிச்சிக்கு மாவிட்டபுரம் எனப்பெயர் சூட்டி அவ்விடத்திலே கந்தசு வாமி கோவிலைக் கட்டுவிக்க ஆரம்பித்து, அதற்கு வேண் டிய சகல வஸ்துக்களும் விக்கிரகங்களும் பிராமணரும் வரும்படி பண்ண வேண்டுமென்று பிதாவாகிய திசையுக் கிர சோழனுக்குத் திருமுகம் அனுப்பினாள். அப் பொழுது திசையுக்கிர

*சோழன் சகல ஆயத்தங்களும் பண்ணிக் கொண்டு இலங்கையிலேயுள்ள கீரிமலை நாட்டுக்கு அனுப்புவதற்குத் தில்லை மூவாயிரரில் ஒருவரைத் தன்னி டத்துக்கு அனுப்பி வைக்கும்படி சிவாலயத் தலைவனுக்கு கட்டளை அனுப்பினான். அப்பொழுது சிவாலயத் தலை வன், 'பிராமணர் தோணியேறுவதும், இலங்கையிற் குடியி ருப்பதும் மகா தோஷமாயிருக்க, அரசன் இப்படிக் கட்டளை யனுப்பியிருக்கிறானே! நான் இதற்கென்ன செய்யலாம்!' என்று பயந்து, தில்லைச் சிவாலயத்திலே மூன்று நாள் பட் டினி கிடந்தான். அப்பொழுது கனவிலே, கீரிமலைச் சாரலா னது அங்குள்ள புண்ணியதீர்த்தத்தினாலுஞ் சிவாலய மகத்து வத்தினாலும் மகா திவ்விய தலமாகவேயிருக்கின்றது. காசி யிற் பிராமணரும் அங்கேயிருக்கிறார்கள். பிராமணர் தங்கள் நியமநிட்டை வழுவாமற் செய்வதற்கு மரக்கலங்களில் இராத் தங்காமல் ஏறலாம். நகுலமுனிவன் அத்தல விசே ஷத்தை நோக்கி அவ்விடத்திலிருந்து தவம் பண்ணும்போதே அத்தல விசேடத்தைக் குறித்து யோசிக்க வேண்டியதென்ன? யாதொரு யோசனையுமின்றி அனுப்பலாம்,' என்று உத்த ரவு கிடைத்தது.*

பெரியமனத்துளார் வருகை

*அப்பொழுது சிவாலயத் தலைவன் பெரிய மனத்துளார் என்னுந் தீட்சிதரைச் சோழராசனிடம் அனுப்பி வைக்கச் சோழராசன் சகல தளவாடங்களையுங் கந்தசுவாமி, வள் ளியம்மன், தெய்வநாயகியம்மன் விக்கிரகங்களையும் பெரிய மனத்துளார் கையில் ஒப்புவித்து அனுப்பி வைத்தான். தீட்சிதர் அவைகளையுங் கொண்டு ''காசாத்துறை" என்னுந் துறையில் வந்திறங்கினார். கந்தசுவாமி விக்கிரகம் வந்திறங்கின காரணத்தால், அந்தத் துறைக்குக் காங்கேசன் துறை என்று பெயராயிற்று.*

*மாருதப்பிரவல்லியின் மண நிகழ்ச்சி*

*ஒருநாளிரவில் மாருதப்பிரவல்லிதேவாலயத்திருப்ப ணியைப் பற்றிய ஆலோசனையுடன் சப்பிரமஞ்சத்திற் சாய்ந்து விழிப்பாயிருக்குஞ் சமயத்திலே அர்த்தசாம வேளையில் உக்கிரசிங்க மகாராசன் பாளையங்களையும் அரணிப்பான சேனைக்காவல்களையும் கடந்து, அவளி ருந்த பாளையத்தினுட் புகுந்து, அவளையெடுத்துத் தன் பாளையத்திற்குக் கொண்டு போய் வைத்துக் கொண்டான். பொழுது விடிந்த பின் மாருதப்பிரவல்லியின் தாதிமாருந் தோழிமாருங் காவற் சேனைகளும் அவளைக் காணா ததனால் மனங்கலங்கித் தேடிப்போய் உக்கிரசிங்க மகாரா சன் பாளையத்தில் இருந்த செய்தி அறிந்து, அவனிடத்திற் சென்று, "நாங்கள் என்ன செய்யலாம்?' என்று கேட்க,*

*நீங்கள் போய் இந்தச் சுபசோபனச் செய்தியைப் பிதா மாதா வுக்கறிவியுங்கள்' என்று சொல்லி, வழிச் செலவுக்குப் பொருளுங் கொடுத்தனுப்பி விட்டான். பின் உக்கிரசிங்க ராசன் கதிரை மலைக்குப் போக யோசித்த போதுமாருதப்பி ரவல்லி கந்தசுவாமி கோயிற்றிருப்பணி நிறைவேற்றி, முத லாம் உற்சவச் சிறப்புக் கண்டால் அல்லாமல், அவ்விடத்தை விட்டுப் போகப் பிரியமில்லை என்றதனால், அப்பிரயா ணத்தை நிறுத்தித் திருப்பணியை நிறைவேற்றி, ஆனி உத்தி ரத்தினன்று துவசாரோகணந் தொடங்கி உற்சவத்தை நிறை வேற்றிக் கொண்டு, கதிரை மலையிற் சென்று, விவாகச் சடங்கையும் நிறைவேற்றி, சகல சௌகரியங்களையும் அனு பவித்திருந்தான்.*

பெரிய மனத்துளாரின் விவாகம்

*தில்லையிற்பெண் எல்லை கடவாததால், பெரிய மனத்துளார் விவாகமில்லாதவராய் வந்திருந்தார். அவர் சாம்பசிவ ஐயரின் மகள் வாலாம்பிகையை விவாகஞ் செய்து, அப்பெண்ணுக்குத்தில்லை நாயகவல்லி என்று பெயரை மாற்றிக் கந்தசுவாமி கோவிற்றென் புறத்திலுள்ள அக்கிரகாரத்தில் வாசஞ் செய்து தன் பணிவிடையை நிறைவேற்றி வந்தார். பிராமணக் குடும்பங்கள் இரண்டும் ஒரு குடும்பமாகி இருதிறத்துக்கோவில்களுக்கும் ஒருவரே விசாரணைத் தலைவரானார்.*

*இது நிற்க, கதிரை மலையிலிருந்த உக்கிரசிங்கராசன் சில காலத்தின் பின் செங்கடக நகரியை இராசதானியாக்கி அங்கிருந்து அரசாண்டு வருங்காலத்தில் மன்மதன் போன்ற ரூபமும் சர்வ ராசலட்சணங்களும் உடையனாய், சிங்கத்தின் வாலையொத்த வாலுடனே ஒரு குமாரனும் அவ னுடனொரு பெண்ணும் பிறந்தார்கள். அவ்விருவருக்கும் நரசிங்கராசன் என்றுஞ் சண்பகாவதி என்றும் பெயரிட்டார்கள். அவர்களுக்கு விவாகம் நிறைவேற்றி, நரசிங்கராசன் என்னும் பெயர் படைத்த வாலசிங்கராசனுக்கு முடிசூட்டி அரசாள வைத்து மரணமடைந்தான். வாலசிங்க மகாராசன் செயதுங்கவரராச சிங்கம் என்னும் பட்டத்துடன் முடிசூட்டப்பெற்று. அரசாட்சியை ஒப்புக் கொண்டான்.*

*வீரராகவன்*

*அக்காலத்திலே சோழநாட்டிலிருந்து இரண்டு கண் ணுங் குருடனாகிய கவி வீரராகவன்' என்னும் யாழ்ப்பா ணன், செங்கடக நகரியிலிருந்து அரசாட்சி செலுத்தும் வால சிங்கமகாராசன் பேரிற் பிரபந்தம் பாடிக் கொண்டு போய் யாழ் வாசித்துப் பாடினான். அரசன் அதைக்கேட்டு மிக்க சந்தோஷம் கொண்டு அவனுக்குப் பரிசிலாக இலங்கையின் வடதிசையிலுள்ள மணற்றிடல் என்னும் இந் நாட்டைக் கொடுத்தான்.*

*யாழ்ப்பாணம்*

*யாழ்ப்பாணன் இதற்கு யாழ்ப்பாணம் என்று பெய ரிட்டு, இவ்விடத்தில் வந்திருந்து, வடதிசையிற் சில தமிழ்க் குடிகளை அழைப்பித்துக் குடியேற்றி, இவ்விடமிருந்த சிங்க ளவர்களையும் அவர்களையும் ஆண்டு, முதிர்வயதுள்ளவ னாய் இருந்து இறந்து போனான். அக்காலத்திலே சிங்களவ ரும் பிறரும் இந்நாட்டை அரசாளக் கருதித் தமிழ்க் குடிகளை ஒடுக்கியதால், தமிழ்க்குடிகள் மீண்டும் தங்கள் நாட்டுக்குப்போய் விட்டார்கள்.*

---

***4. வீரர்முனை செப்பேடு:***

*கலிங்க தேசத்தின் கண்ணின் மணியாய்*
*இலங்கப் பிறந்திடும் இராசாதி இராசனாம்*
*உக்கிர சிங்கனின் உறைவிடம் கண்டி*
*மிக்க புகழ் நின்ற விற்பனை கன்னிகை*
*மருதப்புர வீக வல்லி என்பாளை*
*பேருற மணந்து பெற்றிடும் மகனாம்*

*வால சிங்கனென வலிவுறு சிங்கம்*
*வேல்விழி மாடவர் விரும்பிடு சிங்கம்*

*குலைகள் அறுபத்து நான்கிலும் வலியன்*
*தோலைவில் விண்ணில் துரிதமாய் செல்லும்*
*முந்திர வித்தையும் மாண்புற கற்ற*
*சுந்தர ரூபன் சோழநா டேகி*

*ஆரவா பாணன் அடியினை மறவா*
*குமராங்குசனென கூறு பெயரினன்*
*சுறறந்திடு சோழன் அருந்தவப்புதல்வி*
*சீர்பாத தேவியை திருமணம் செய்து*

*ஈழநாடேகி என்னும் கால்*
*சோழ மாமன்னன் துணையாட்; களாய்*
*முன்னர் குலத்து மக்களை அனுப்ப*
*ஏண்ணம் கொண்டு இன்புடனாய்ந்து*

*திரு வெற்றியூர் சேர்ந்திடும் அயலிலும்*
*பெருந்துறையூர் பின்னர் தன் மருங்கிலும்*
*கட்டுமாவடி கரையிரு புறத்திலும்*
*மட்டுக்கூங்கிய மறுபுறங்களிலும்.*

---

***5. துறைநீலாவணைச் செப்பேடு:***
*பரத கண்டத்தில் பண்புடை அரசராய்*
*தரமுட னாண்ட சற்சன சோழன்*
*தவப்பு தல்வியாக தரையினிற் செனித்த*
*நவமணி நேரும் மாருதப் புரவீக*
*வல்லிதன் குதிரை வதனம் மாற*

*எல்லையிற் தீர்த்தம் இந்தியா முழுவதும்*
*படிந்து திரிந்து பயனில தாக*
*வடிவேற் பெருமான் வைகிய கதிரை*
*சென்றுதன் குறையை தீர்ப்பது முறையென*
*மன்றலங் குழலி வந்தனள் லிலங்கை*
*கந்தன் கழலடி காரிகை வணங்க*
*விந்தை யாக விரும்பும் நாகநன்*
*நாடதை கண்ணி நகுலநன் மனையின்*

*மாடே தெற்காய் மல்கும் நதியில்*
*முழுகிட வுந்தன் முற்பவ வினையால்*
*தழுவிய குதிரை சாயல் தீர்ந்து*

விளங்குவா யென்று மெல்லியல் கனவில்
உளம துருக உவப்புடன் கண்டு

கீரி மலையை கிட்டியே செல்வி
நீரினில் படிய நீத்தது மாமுகம்
அச்செயல் தன்னை அறிந்திடு மாது
மெச்சிட ஒற்றரை விரைவினிற் றான்
உச்சித மாக உவப்புட னனுப்பினள்

அச்சம தில்லையென அரசன் விருப்புடன்
கந்த னுருவக் கனகச் சிலைதனை
விந்தைய தாக விரைவுட னனுப்ப
கச்சாத் துறையின் கரையதிற் கொண்டு
மெச்சிட ஒற்றர் விட்டனர் படகை
அவ்விடந் தனில் ஆயிழை வந்து
செவ்வைசேர் காங்கேயன் திருவுரு வந்தனை
நகுல மலைக்கு நடந்தனள் கொண்டு

தகமைசேர் கோயில் தையலாள் இயற்றி
கொடித்தம்பம் நட்டு குற்றமில் விழாவை
துடியிடை மங்கை சோர்வுறச் செய்து
காரண நாமம் களறின ளப்போ

பாரதி லென்னை பற்றி தீய
மாமுக வடிவம் மாறின தாலே
மாமுக னுறைவது மாவிட்ட புரம்
காங்கேய னுருவது கரைசேர் இடம்
காங்கேயன் துறையென கழறியே மீண்டு
தாய்நா டேக தையலாள் இருந்தாள்

ஓயாப் புகழ்சேர் உக்கிர வீர
சிங்க னறிந்து தெரிவையை வேட்டு
மங்கா வால சிங்கமென மகவைத்
துரைதனி லீன்றாள் தற்பர னருளால்

உரைதரு பூர்வ உச்சித மதியென
சிங்கன் வளர்ந்து தேர்ந்தனன் கலைகள்
துங்கமார் தவசிகள் சூழும் ஆச்சிரமம்
துணிவுடன் சென்று தொழுதவர் பதத்தை
அணியனு மசியும் ஆகாய கமனமும்

பயின்றினி திருந்தான் பார்த்திபன் மிக்க
வைர உடலும் மாற்றார் போற்றும்
வாலைநற் பருவமும் வாய்த்திடு தன்மையால்
வால சிங்கனென வழுத்தின ருலகோர்
அன்னான் இலங்கையை யண்டியே கண்டி

நன்னகர் தன்னை நலியாது பிடித்து
அரசராய் பலகால் அமர்ந்தினி இருந்து
தரமுடன் மன்றல் தான்செய்ய எண்ணி
சோழ அரசனின் தூமணி யான
ஆழியி னமிர்தம் அதுநிகர் சீர்பாகதேவியை
விதிப்படி மணந்து விளங்கிடும் நாளில்

மதிமுக நங்கை மன்னனடி பணிந்து
காதல நினது கார்வள நாடெனும்
மாதல மனைத்தும் மகிழ்ந்து காட்டுவீரென
அரச னதற்கு அண்டியுன் பிதாவை
வரமது கேட்டு வருகுவீ ரென்று
கூறியே மன்னன் குறுகினன் குருசில்
சீர்பாத தேவி சேர்ந்துதன் தந்தைபால்
ஏரார் இலங்கை ஏகிடச் செலவு
பெற்றாள் படகிற் பேருவுவகை யாகி

உற்ற துணையால் உயிரின் தோழி
வெள்ளாகி யெனும் மெல்லியள் தன்னுடன்
இல்லாளர் ஊழியம் ஜெயமதில் நகர்கூக்க
திருவொற்றியூர் கட் டுமாவடி. பெருந்துறை
நற்றவ நகரில் நலம்பெற வதியும்
அரசர் வினைபுரி அருளுடை மேலோர்.

---

## 18. சிலோன் தீவு வரைப்படம்

*— முனைவர் க.சுபாஷிணி*

*Insel Zeilan என்ற டச்சு மொழிப் பெயருடன் இது தயாரிக்கப்பட்டுள்ளது. வரைபடம் முழுமைக்கும் லத்தின் மொழியில் ஊர்கள் மற்றும் கடல்பகுதிகள் பெயரிடப்பட்டுள்ளன. Insel Zeilan என்பது டச்சு மொழிப் பெயர். ஆக, இலங்கைத் தீவு டச்சுக்காலனித்துவத்தின் ஆதிக்கத்தில் இருந்த காலகட்டத்தில் இந்த வரைபடம் தயாரிக்கப்பட்டிருக்கலாம்.*

*இந்த வரைபடத்தின் அசல், காகிதத்தில் அச்சுப்பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. இந்த வரைபடத்தில் மன்னார், கண்டி, மட்டக்களப்பு, திரிகோணமலை போன்ற பெயர்களை அடையாளம் காண முடிகின்றது.*

*கி.பி.17ம் நூற்றாண்டில் இலங்கைத் தீவின் பெரும்பகுதி போர்த்துக்கீசியர்களாலும் உள்ளூர் இலங்கை மன்னர்களின் ஆட்சியின் கீழும் இருந்தது. போர்த்துக்கீசியர்களின் தாக்கத்தை எதிர்க்க உள்ளூர் இலங்கை மன்னர்கள் வணிகம் செய்ய வந்த டச்சுக்காரர்களின் உதவியை நாடினர். 1638ம் ஆண்டு கண்டி ஒப்பந்தம் மன்னன் 2ம் ராஜசிங்கனுக்கும் டச்சு அரசு பிரதிநிதிக்கும் இடையில் கையெழுத்திடப்பட்டது. டச்சு அரசின் தாக்கம் இதன்வழி இலங்கையில் காலூன்றத் தொடங்கியது. ஆனால் மன்னன் 2ம் ராஜசிங்கன் அதே வேளையில் பிரஞ்சுக்காரர்கள் உதவியையும் நாடியதோடு திரிகோணமலை துறைமுகத்தையும் அவர்களுக்கு வழங்கினார். இது டச்சுக்காரர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்தியிருக்கக்கூடும். இப்பகுதியைத் தாக்கி திரிகோணமலையை டச்சுக்காரர்கள் கைப்பற்றி தம் வசம் வைத்துக் கொண்டனர்.*

*இந்த நிலை படிப்படியாக மாறியது. இலங்கைத் தீவு Dutch Ceylon என்ற பெயரில் டச்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் கி.பி.1640 முதல் 1796 வரை இருந்தது. கடற்கரையோர பகுதிகளை இக்காலகட்டத்தில் டச்சுப்படை கைப்பற்றியிருந்தது. ஆனால் கண்டியைக் கைப்பற்ற இயலவில்லை. 1638ம் ஆண்டு கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தம் நடைமுறைப்படுத்தப்படவில்லை. டச்சுக்காரர்கள் தமிழர் வசம் இருந்த பகுதிகள் அனைத்தையும் தம் வசம் படிப்படியாகக் கைப்பற்றிக் கொண்டனர்.*

*இக்காலகட்டத்தில் தமிழகத்தின் தஞ்சையில் இருந்து யாழ்ப்பாணத்திற்குத் தோட்டங்களில் பணிபுரிய கூலித் தொழிலாளர்களாக மக்கள் அழைத்து வரப்பட்டனர். இவர்கள் இலவங்கப்பட்டை தோட்டங்கள், புகையிலைத் தோட்டங்களில் பயிர்த்தொழிலில் ஈடுபடுத்தப்பட்டனர். இக்காலகட்டத்தில் டச்சு கடற்கரையோர அரசு (Dutch Coromandel) இயங்கிக் கொண்டிருந்தது. இதன்*

தலைமையகம் தமிழகத்தின் பழவேற்காடு பகுதியில் அமைந்திருந்தது. இதன் வழி தங்கள் காலனித்துவ ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் தேவைப்படும் மனிதவளத்தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் பணியாட்களைக் கொண்டு சேர்க்கும் வகையில் இந்தத் தலைமையகம் செயல்பட்டது என்றும் அறியமுடிகின்றது.

*Insel Zeilan* என்று இலங்கை பற்றிய பெயர் குறிப்பு ஜெர்மானிய டோய்ச் மொழியில் வெளிவந்த ஆயிரத்து ஓர் இரவுகள் *(Tausand und eine nacht)* என்ற சிந்துபாத் கதையிலும், கி.பி *1755*ல் வெளிவந்த ஜெர்மானிய டோய்ச் மொழி வர்த்தகம் தொடர்பான லைப்ஸிக் நகரில் அச்சிடப்பட்ட ஒரு நூலிலும் மேலும் சில *18*ம், *19*ம் நூற்றாண்டு நூல்களிலும் குறிப்பிடப்படுகின்றது.




திரு. வேலழகனின் சேகரிப்பில் உள்ள, ஏலத்தில் வாங்கப்பட்ட ஆவணங்களுள் ஒன்று இந்த வரைபடம்

*இந்த வரைபடம் இலங்கைத் தீவின் முழுமையையும் குறிப்பதாகக் காட்டப்படவில்லை. குறிப்பாக இலங்கையின் தென்பகுதி இந்த வரைபடத்தில் தென்படவில்லை. ஆக, ஆரம்பக்கால ஆசிய நிலப்பகுதிகளின் வரைபட முயற்சியாக இருக்கலாம் என ஒரு வகையில் ஊகிக்கலாம். அத்துடன் டச்சு காலனித்துவ காலகட்டத்தையும் அச்சு இயந்திரங்கள் பரவலாக செயல்படத்தொடங்கிய நிகழ்வுகளையும் கருத்தில் கொண்டால் இது ஏறக்குறைய கி.பி 17ம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது 18ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தயாரிக்கப்பட்டிருக்கலாம் எனக் கருத வாய்ப்புள்ளது.*

*தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)*

## 19. மன்னார் தீவு வரைப்படம்

— முனைவர் க.சுபாஷிணி




இங்கு இணைக்கப்பட்டிருக்கும் தீவின் வரைபடம் இன்றைக்கு ஏறக்குறைய 400 ஆண்டுகள் பழமைவாய்ந்த ஒன்று. இதனைத் தயாரித்தவர் பாதிரியார் பிலிப் பால்டெயூஸ் *(Father Philip Baldaeus 1632-1672)* என்ற பெயர் கொண்ட டச்சுக்காரர். இவர் சிலோன் டச்சு அரசில் சமயத்துறை அமைச்சராகவும் பதவி ஏற்றிருந்தவர். இவர் ஒரு கத்தோலிக்க கிருத்துவ சமயப் பள்ளியை யாழ்ப்பாணத்தில் நிறுவி நடத்தி வந்தார். கி.பி.17ம் நூற்றாண்டில் இலங்கைத் தீவை கைப்பற்றி வணிக ஆளுமையை நிலை நாட்ட பெரும் முயற்சி மேற்கொண்டு அதில் வெற்றியும் கண்ட டச்சு அரச படையுடன் இவரும் அங்குப் பயணித்து பின்னர் யாழ்ப்பாணப் பகுதியில் தங்கியதாகக் குறிப்புக்கள் சொல்கின்றன. அவர் அன்றைய சிலோனில் தாம் பார்த்த, கேள்விப்பட்ட செய்திகளையும், பழகிய உள்ளூர் மக்களைப் பற்றியும், நடந்த நிகழ்வுகளையும் குறிப்பிட்டு தன் அனுபவங்களை ஆவணப்படுத்தியுள்ளார்.

*மன்னார் தீவின் இன்றைய நிலவரைப்படத்தை ஏறக்குறைய ஒத்த வகையில் இந்த வரைபடம் அமைந்திருக்கின்றது என்பது குறிப்பிடத்தக்க ஒன்றே. இன்றைக்கு நமக்குக் கிடைக்கும் நில அளவைக் கருவிகள் இல்லாத போதிலும் அன்றைய வரைபட தயாரிப்பு கருதுகோள் மற்றும் நெறிமுறைகளைப் பின்பற்றி இந்த வரைபடம் வரையப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். தீவுக்குள் அன்றைய காலகட்டத்தில் இருந்த சில கட்டுமானங்களையும் இந்த வரைபடம் காட்டுகிறது. அதில் டச்சு கோட்டையும் சில தேவாலயங்களும் இருப்பதைக் காணலாம். டச்சுக் காரர்கள் இலங்கைக்கு வருவதற்கு முன்னரே போர்த்துக்கீசியர் இலங்கைத் தீவின் பல பகுதிகளில் வணிகத்திற்காக வந்து பின்னர் தங்கள் ஆளுமையை விரிவாக்கியிருந்தனர் என்பதையும் காணும் போது இந்தத் தேவாலயங்கள் அனேகமாகப் போர்த்துக்கீசியர் காலத்திலும் சில டச்சுக்காரர்கள் ஆட்சிக்காலத்திலும் உருவாக்கப்பட்டிருக்கலாம் என ஊகிக்கலாம்.*

*மன்னார் தீவு இந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடையில் அமைந்திருக்கின்றது. மன்னாருக்கும் இந்தியாவின் தனுஷ்கோடிக்கும் இடையில் உள்ள தூரம் ஏறக்குறைய 57கி.மீ. இந்தக் கடல் பாதையில் மேலும் சில சிறிய தீவுகளும் உள்ளன. மன்னார் தீவில் உள்ள கோட்டை போர்த்துக்கீசியர்களால் கி.பி.1560ல் கட்டப்பட்டது. இக்கோட்டை பின்னர் டச்சுக்காரர்கள் ஆட்சியில் அவர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த அரச கோட்டையாகச் செயல்பட்டது. 1696ம் ஆண்டில் டச்சுக்காரர்கள் இக்கோட்டையைச் சீரமைத்துக்கட்டினர். டச்சுக்காரர்கள் சரணடைந்த பின்னர் பிரித்தானியர் காலத்திலும் இக்கோட்டை முக்கிய அரச அலுவல்களுக்காகப் பயன்படுத்தப்பட்டது. இன்று இக்கோட்டை இலங்கை ரயில் போக்குவரத்துத்துறையின் கீழ் அலுவலகமாக அமைந்துள்ளது.*

*பாதிரியார் பிலிப் பால்டெயூஸ் தாம் எழுதிவைத்த குறிப்புக்களைத் தொகுத்து உருவாக்கிய நூல் Description of the East India, Malabar and Coromandel coasts என்பதாகும். இது நெதர்லாந்தின் இன்றைய தலைநகர் ஆம்ஸ்டர்டாம் நகரில் டச்சு மொழியிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டு 1671ம் ஆண்டு அச்சு நூலாக வெளியிடப்பட்டது. ஏறக்குறைய 450 பக்கங்கள் கொண்ட நூல் இது. இந்த நூலில் மொழிபெயர்ப்புடன் பாதிரியார் பிலிப் பால்டெயூஸ் ஓவியமாகத் தீட்டி வைத்த வரைபடங்களும் அன்றாட வாழ்க்கை காட்சிகளும், மன்னார் தீவின் சில தேவாலயங்களின் ஓவியங்களும் இடம்பெறுகின்றன. இவை அக்கால காட்சியை இன்று நம் கண்முன்னே கொண்டு வந்து காட்டும் முதன்மைத் தரவுகளாகவும் அமைகின்றன. இந்த வரைபடம் நோர்வே திரு.வேலழகனின் சேகரிப்பில் உள்ள ஆவணங்களில் ஒன்று. இதனைத் தமிழ் மரபு அறக்கட்டளை மின்னாக்கப்பதிவிற்காக வழங்கியமைக்கு எமது நன்றி.*

*தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)*

# 20. நானிலத் தெய்வங்களும்; பண்டைத் தமிழர் வழிபாடுகளும்

*— முனைவர் ச.கண்மணி கணேசன்*

***முன்னுரை:***

*தொல்காப்பியம் அகத்திணையியல் 5ம் நூற்பா, அகப்பாடல்களில் இடம்பெறக் கூடிய நான்கு திணைகட்குரிய தெய்வங்களை வரையறுக்கிறது. ஆயினும் சங்க அகப்பாடற் செய்திகளுக்கும்; அந்நூற்பாவின் வரையறைக்கும் உள்ள இடைவெளியை அளந்தறிவதாக இக்கட்டுரை அமைகிறது.*

***தொல்காப்பிய வரையறை:***

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"*

*என்ற நூற்பா நான்கு திணைகட்குரிய தெய்வங்கள் யார் யார் எனச் சுட்டுகிறது. இளம்பூரணர் 'மேய' என்ற சொல்லுக்கு 'மேவிய' என்று பொருள் கூறுகிறார்.*

*நச்சினார்க்கினியர் 'மேய' என்ற சொல்லுக்கு 'காதலித்த' என்று பொருள் கூறுகிறார். சோமசுந்தர பாரதியார் 'மேய' என்ற சொல்லுக்கு 'உறைவிடமாகிய' என்று பொருள் கூறுகிறார். சிவலிங்கனாரும், மு.அருணாச்சலம் பிள்ளையும்; இளம்பூரணரின் 'மேவிய' என்ற உரைக்கு 'விரும்பிய' என்று அடிக்குறிப்பு தருகின்றனர்.*

*மாயோன் - திருமால்*
*சேயோன் - முருகன்*
*வேந்தன் - இந்திரன்*
*வருணன் - மழைக்கடவுள்*

*என்றே இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சோமசுந்தர பாரதியார் ஆகிய மூவரும் பொருள் கூறுகின்றனர். சிவலிங்கனார் 'வேந்தன்' என்பது மன்னனைக் குறிப்பதாகக் கொள்கிறார்.*

***முல்லைத்திணையும் வழிபாடுகளும்:***

*முல்லைநிலத் தெய்வமாக மாயோன் சுட்டப்பட்டிருப்பினும்; கலித்தொகை தவிர்ந்த பிற தொகைநூல்களில்; முல்லைத்திணைப் பாடல்களில் திருமால் பற்றிய குறிப்பு இல்லை. தலைவியின் கற்பு தெய்வமாகப் போற்றப் பெற்றது. முன்னோர் வழிபாடு காக்கைக்குச் சோறிடுவதன் மூலம் புலனாகிறது. நீர்நிலைகளிலும்,*

*கரைகளிலும், மரா மரத்திலும், தெய்வம் உறைவதாக நம்பி முறைப்படி தொழுதனர்.. பிற தெய்வக்குறிப்புகள் பல உள்ளன.*

*முல்லைநில மக்கள் திருமாலை வழிபடுவதை முல்லைக்கலிப் பாடல்கள் மட்டுமே சுட்டுகின்றன (பா-104,105,108).*

*தலைவன் வருவான் என்று ஆற்றி இருக்கும் தலைவியின் கற்பு கடவுள் தன்மை வாய்ந்தது என்ற குறிப்பு கிடங்கிற் குலபதி நக்கண்ணன் என்ற புலவரால் சொல்லப்பட்டுள்ளது.*

*“கடவுட் கற்பின் அவன் எதிர் பேணி*
*மடவை மன்ற நீ எனக் கடவுபு*
*துனியல் வாழி தோழி சான்றோர்*
*புகழு முன்னர் நாணுப*
*பழி யாங்கு ஒல்பவோ காணுங்காலே”(குறுந்தொகை 252)*

*எனும் பாடல் தலைவி தோழியைப் பார்த்துக் கூறுவதாகும். இங்கு தலைவியின் கற்பு கடவுள் தன்மை உடையது என்ற கொள்கை சிறப்பிடம் பெற்றுள்ளது.*

*காக்கைக்குச் சோறிடுவதைப் பலியிடல் என்று காக்கைப்பாடினியார் தோழி கூற்றாகச் சுட்டுவதால் இயற்கை எய்திய முன்னோரை வழிபட்ட வழக்கம் முல்லைத் திணைப் பாடலில் புலப்படுகிறது.*

*“திண்தேர் நள்ளி  கானத்து அண்டர்*
*பல்லா பயந்த நெய்யிற் தொண்டி*
*முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு*
*எழுகலத்து ஏந்தினும் சிறிதே என் தோழி*
*பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு*
*விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே.”(குறுந்தொகை- 210)*

*இப்பாடல் ஏழு கலங்களில் நெய் பெய்த வெண்ணெல் வெண்சோறு வைத்துக் காக்கைக்குப் பலியிட்ட வழக்கத்தைக் கூறுகிறது.*

*நீர்நிலைகளிலும், கரைகளிலும், மரா மரத்திலும், தெய்வம் உறைவதாக நம்பி முறைப்படி தொழுத பின்னர் ஆயர் ஏறு தழுவினர்.*

*“துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்*
*முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ”(முல்லைக்கலி- பா-101)*

*எனும் பாடலடிகள் மேற்சுட்டிய கருத்தைச் சுட்டுகின்றன.*

*திருமால், காமன், கண்ணன், பலராமன், சிவன், முருகன், கூற்றுவன், நான்முகன், திருமகள், பூமகள் ஆகிய பல தெய்வங்களும் உவமைகளாக முல்லைக்கலிப் பாடல்களில் எடுத்தாளப் பட்டுள்ளனர்.(பா.-103 -109)*

**நெய்தல் திணையும் வழிபாடுகளும்:**

*வருணன் நெய்தல் திணைக்குரிய தெய்வமாகச் சுட்டப்படினும் சங்க இலக்கியத்தில் ஒரு பாடலில் கூட வருணன் பற்றிய குறிப்பு இல்லை. சுறாக் கொம்பு; ஊர்க்காவல் தெய்வம், கடல் தெய்வம், நீர்நிலைத் தெய்வம், கடவுள் மரம் போன்ற வழிபடு தெய்வங்களைச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் காண இயல்கிறது. உவமைகளாகப் பிற பல தெய்வங்களும் இடம் பெறுகின்றனர்.*

*பட்டினப்பாலை சுறாவின் கொம்பை நட்டு பரதவர் வழிபட்ட செய்தியை,*
*"சினைச் சுறவின் கோடு நட்டு*
*மனைச் சேர்த்திய வல்லணங்கினால்*
*…………………………………………………..*
*புன்றலை இரும்பரதவர்"(அடி.- 86-90)*
*எனும் பாடற்பகுதியில் எடுத்து உரைக்கிறது. (உரையாசிரியரே சுறாவின் கொம்பை நட்டு வருணனை வழிபட்டனர் என்கிறார். இதற்கு வேறு எந்த ஆதாரமும் இல்லை.)*

*போந்தைப் பசலையார் என்ற புலவர் புகார் நகரத்துக் காவல் தெய்வத்தை நோக்கித் தலைவன் சூளுரைத்ததாகப் பாடியுள்ளார்.*
*"கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வம் நோக்கி*
*கடுஞ்சூள் தருகுவன் "(அகநானூறு- பா-110)*
*எனும் அடிகள் நோக்குக.*

*புகார் நகரின் காவல் தெய்வம் சம்பாபதி என்று சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் செய்தி உள்ளது. 1982ல் கள ஆய்வு செய்தபோது கூட சம்பாபதி என்று சுதை உருவம் ஒன்றை சாயாவனத்தின் வயல் காட்டிற்கு நடுவே பொதுமக்கள் காட்டினர்.*

*எழூஉப் பன்றி நாகன் குமரனார் நீர்த்துறைத் தெய்வத்தை தாயார் வணங்கச் செல்வது குறித்துத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவதாகப் பாடியுள்ளார்.*
*"…………………………………………………அந்தில்*
*அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி*
*யாயும் ஆயமொடு அயரும் ….."(அகநானூறு- பா- 240)*
*அதனால் பகலில் தலைவியைச் சந்திக்க ஏதுவாக இருக்கும் என்று அறிவுறுத்துகிறாள்.*

*சாகலாசனார் நெய்தல் நிலமக்கள் தெய்வமாக வழிபட்ட மரத்தில் இருந்த பறவைக்கூட்டைத் தம் பாடலில் புனைகிறார்.*
*"கடவுள் மரத்த முள்மிடை குடம்பை"(அகநானூறு- பா-270)*
*என்பது மரத்தை வழிபாடு செய்தமையைத் தெரிவிக்கிறது.*

*கடலை ஒரு பெண்தெய்வமாக நெய்தல்நில மக்கள் வழிபட்டனர் என்பது அம்மூவனார் பாடலில் தெரிகிறது. அந்திக்காலத்தில் கடல் தெய்வம் கரையில் நிற்பது போல் தலைவி தனித்துக் கடற்கரையில் இரங்கி நிற்பது பற்றித் தோழி,*

*"..............................................................அந்திக்*
*கடல்கெழு செல்வி கரை நின்றாங்கு*
*நீயே கானல் ஒழிய .......*"*(அகநானூறு- பா- 370)*

*எனும் பாடலடியில் கூறுவது காண்க.*

*இராமன், சிவன், திருமால், காமன், முருகன், பலராமன், முதலிய தெய்வங்கள் உவமைகளாக நெய்தல் பாடல்களில் எடுத்தாளப் பெற்றுள்ளனர். (அகநானூறு- பா.- 70, 120, 360& கலித்தொகை- பா.- 123,124,127,134,140,143,147,150)*

***மருதத்திணையும் வழிபாடுகளும்:***

*எந்த ஒரு சங்க இலக்கியப் பாடலும் இந்திரனைத் தெய்வமாகச் சுட்டவே இல்லை. இரட்டைக் காப்பியங்கள் தாம் இந்திரனைத் தெய்வநிலைக்கு ஏத்துகின்றன.*

*சிவலிங்கனார் குறிப்பிடுவது போல வேந்தன் என்னும் சொல் மன்னனைக் குறிப்பிடுகிறது என்று கொள்வது சங்க இலக்கியத்திற்குப் பொருத்தமாகப் படுகிறது.ஏனெனில் நற்றிணை(பா.- 150, 167, 170, 180, 237, 300, 320, 340, 390) யில் உள்ள மருதப் பாடல்களும், ஐங்குறுநூற்றில் உள்ள மருதப் பாடல்களும் (வேட்கைப்பத்து பா.-1-10, பா.- 54, 56, 61&78) அகநானூற்றில் பல பாடல்களும் மன்னனைப் போற்றுகின்றன. மன்னனின் செயல்கள், அவனது ஆட்சிக்கால நிகழ்வுகள் உவமைகள் ஆகின்றன.*

*வேங்கை மரம், நீர்த்துறைத் தெய்வம், ஊரெல்லைத் தெய்வம், திருச்செந்தூர் முருகன், கொற்றவை முதலிய தெய்வங்களும் மருதத் திணைப் பாடல்களில் வழிபாட்டிற்கு உரியவை ஆகின்றன. கற்புக்கடவுள் அருந்ததி, திருமகள், முதலிய தெய்வங்களும் உவமைகளாகின்றன.*

*"எரிமருள் வேங்கைக் கடவுள்" என்று வேங்கைமரம் தெய்வமாக வழிபடப் பட்டமை பற்றிய குறிப்பு நற்றிணைப் பாடல் 216ல் உள்ளது.*

*நீர்த்துறைத் தெய்வத்தைத் தாய் வழிபட்ட பாங்கினை ஆவூர் மூலங்கிழார்,*

*"கள்ளும் கண்ணியும் கையுறையாக*
*நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாய்*
*நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி*
*தணிமருங்கு அறியாள் யாய் அழ ..."(அகநானூறு- பா- 156)*

*என்று தாய் மேல் இரக்கம் தோன்ற வருணிக்கிறார்.*

இடையன் நெடுங்கீரனார் ஊர்காவல் தெய்வத்தை வழிபட்ட பாங்கினை,
“பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்
நறுவிரை தெளித்த நாறு இணர் மாலை
பொறிவரி இனவண்டு ஊதல் கழியும்
உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்”(அகநானூறு- பா- 166)
என்ற பாடலில் விரிவாகப் பேசியுள்ளார்.

பரணரின் மருதத்திணைப் பாடல் திருச்செந்தூர் முருகனை வழிபட்டுத் தலைவன் உரைத்த சூள் பற்றிப் பாடுகிறது.( அகநானூறு- பா- 266) மருதனிள நாகனாரும் ‘ஆலமர் செல்வன் அணிசால் மகனா’கிய முருகனைப் போற்றுகிறார் (கலித்தொகை- பா.- 81, 83, 93).

பெருங்காட்டில் கொற்றவைக்கு நிகழும் வழிபாடு பற்றி மருதக்கலிப் பாட்டில் மருதனிள நாகனார் பாடுகிறார்.(பா- 89)

சாகலாசனார் கற்புக்கடவுளாகிய அருந்ததியை மருதத் திணைத் தலைவிக்கு ஒப்பிடுகிறார். (அகநானூறு- பா- 16) ஓரம்போகியார் மருதத் திணைத் தலைவி திருமகளின் மங்கலம் பொருந்தியவள் என்கிறார்.(அகநானூறு- பா- 316)

**குறிஞ்சித் திணையும் வழிபாடுகளும்:**

முருகன் பெரிதும் போற்றப்படுகிறான்.(குறுந்தொகை- பா.- 1, 111;நற்றிணை- பா.- 82, 173, 225, 273; ஐங்குறுநூறு- பா.- 245, 247, 249& அகநானூறு- பா.- 22,98)

மிகப் பழைய மரத்தை தெய்வமாக வழிபடும் போக்கு குறிஞ்சித்திணை மாந்தரிடமும் இருந்தது.(நற்றிணை- பா- 83) செங்கடம்பு எனும் மரா மரத்தை முருகனின் அம்சமாக வணங்கினர்(குறுந்தொகை- பா- 87).

குறிஞ்சி நிலத்தில் முருகன் மட்டுமின்றி கொல்லிப்பாவை என்ற பெண்தெய்வ வழிபாடும் போற்றப்பட்டமை புலப்படுகிறது.நற்றிணைப்(பா.- 185, 192, 201) பாடல்கள் கொல்லிப்பாவை பற்றி விரிவாக வருணிக்கின்றன. பரணர் குறுந்தொகை 89ல் கொல்லிப்பாவையைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

பிற பல தெய்வங்களையும் குறிஞ்சி நில மக்கள் வழிபட்டனர் என்பது,
“வேற்றுப் பெருந்தெய்வம் பலஉடன் வாழ்த்தி“(குறுந்தொகை- பா-263)
தாய் தன் மகளுக்காக வழிபட்டதாகப் பெருஞ்சாத்தன் எனும் புலவர் பாடி இருப்பதிலிருந்து தெரிகிறது.

பல குறிஞ்சித்திணைப் பாடல்கள் ‘அணங்கு’ என்ற பொதுச்சொல்லைப் பயன்படுத்தினாலும் உரையாசிரியர்கள் முருகன் என்றே பொருள் கூறுகின்றனர். (நற்றிணை- பா.- 47, 165, 288, 322, 376, 385; அகநானூறு- பா-72) சில குறிஞ்சித் திணைப்

பாடல்கள் கடவுள் என்று சுட்டுமிடங்களிலும் உரையாசிரியர் முருகன் என்றே பொருள் கூறுகின்றனர்(குறுந்தொகை- பா- 105; நற்றிணை- 251, 351& ஐங்குறுநூறு- பா- 243,259). இப்போக்கு ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. ஏனெனில் தமிழகத்தில் சங்க காலத்தில் நீர்த்துறையிலும், ஊரெல்லையிலும் காவல் தெய்வங்களை வைத்து வழிபட்டமையையும், மரங்களைத் தெய்வமாக வழிபட்டமையையும் இதுகாறும் கண்டோம். கடவுள், தெய்வம் என்ற பொதுப் பெயர்களால் பிற திணைகளிலும் வழிபாடு நிகழ்ந்தமைக்குச் சங்க இலக்கியம் சான்று பகர்கிறது.

| எண் | நூல் | பாடல் எண் | புலவர் | பொதுச்சொல் | திணை |
|---|---|---|---|---|---|
| 1 | குறுந்தொகை | 203 | நெடும்பல்லியத்தன் | கடவுள் | மருதம் |
| 2 | ஐங்குறுநூறு | 23 | ஓரம்போகியார் | அணங்கு | மருதம் |
| 3 | ஐங்குறுநூறு | 76 | ஓரம்போகியார் | தெய்வம் | மருதம் |
| 4 | அகநானூறு | 136 | விற்றூற்று மூதெயினனார் | கடவுள் | மருதம் |
| 5 | கலித்தொகை | 82 | மருதனிள நாகனார் | புத்தேளிர் | மருதம் |
| 6 | கலித்தொகை | 84 | மருதனிள நாகனார் | கடவுள் | மருதம் |
| 7 | ஐங்குறுநூறு | 182 | அம்மூவனார் | கடவுள் | நெய்தல் |

**முடிவுரை:**

தொல்காப்பியம் சுட்டும் தெய்வங்களில் மாயோன் முல்லைக்கலியிலும், முருகன் குறிஞ்சிப் பாடல்களிலும் இடம் பெறுகின்றனர். வேந்தன் மருதத் திணையில் மன்னனாகவே இனம் காணப்படுகிறான். வருணன் வழிபாடு காணக் கிடைக்கவில்லை. சுறாக்கொம்பை வருணன் என உரையாசிரியரே கூறுகிறார்.

குறிஞ்சி நிலத்தில் கொல்லிப் பாவையும் வழிபடப் பட்டது.

முருகனாகக் கருதப்பட்ட மராமரம் குறிஞ்சியில் மட்டுமின்றி; முல்லையிலும் வழிபடப் பட்டது.

முல்லை நிலத்தில் தலைவியின் கற்பு தெய்வமாகப் போற்றப் பெற்றது. முன்னோர் வழிபாடு இருந்தது.

நீர்நிலைகளிலும், கரைகளிலும் தெய்வம் உறைவதாக நம்பி முறைப்படி தொழுதனர்.

வேங்கை மரம், நீர்த்துறைத் தெய்வம், ஊரெல்லைத் தெய்வம் முதலிய வழிபாடுகள் மருதத் திணைப் பாடல்களில் காணப்படுகின்றன.

*திருச்செந்தூர் முருகன் நெய்தல் நிலத்தில் எழுந்தருளி இருப்பினும் மருதப் பாடலில் போற்றப்படுகிறான். கொற்றவையும், அருந்ததியும், திருமகளும் போற்றப்படுகின்றனர்.*

*ஊர்க்காவல் தெய்வம், கடல் தெய்வம், நீர்நிலைத் தெய்வம், கடவுள் மரம் போன்ற வழிபடு தெய்வங்களைச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் காண இயல்கிறது*

*எல்லா நிலங்களிலும் கடவுள், தெய்வம், அணங்கு, புத்தேளிர் எனப் பொதுப் பெயர்களால் வழிபடுதெய்வங்கள் சுட்டப்படுகின்றன. பழைய மரங்கள், நீர்க்கரைகள், நீர்த்துறைகள், ஊர்க்காவல் தெய்வங்கள் அனைத்து நிலங்கட்கும் பொதுவாகின்றன. தொல்காப்பியம் சுட்டாத பல தெய்வ வழிபாடுகள் இருந்தமை உவமைகள் மூலம் புலனாகின்றன.*

*குறிப்பு: சென்னை, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனமும்; விருதுநகர், வே.வ.வன்னியப் பெருமாள் பெண்கள் கல்லூரியும் இணைந்து 13.12.2010 முதல் 22.12.2010 வரை 'சங்க இலக்கியத்தில் தொல்காப்பிய இலக்கியவியல் கோட்பாடுகளின் தழுவலும் விலகலும்' என்ற பொருண்மையில் நடத்திய பத்து நாள் பயிலரங்கில் 19.12.2010 ஞாயிற்றுக்கிழமை அன்று மதியம் 2.30 மணி அளவில் ''சொல்லிய முறையாற் சொல்லப்படும் தெய்வங்களும், பிற தெய்வங்களும்'' என்ற தலைப்பில் சமர்ப்பிக்கப்பட்ட உரையிது.*

*தொடர்பு: முனைவர் ச. கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

## 21. பழந்தமிழகத்தில் தொல்சமயத்தின் சிதைவும் சமயஉருவாக்கமும்

***— ஆ.சிவசுப்பிரமணியன்***

*உலகம் முழுவதுமே வர்க்கச் சமூகம் உருவாகியதன் உடன் விளைவாகத் தொல்சமயம் சிதைந்து, நிறுவனச் சமயம் உருவானது. ஆயினும், உலகில் தொல்சமயத்தின் எச்சங்கள் தொடர்ந்து நிலவி வருகின்றன. இந்தக் கட்டுரை பழந்தமிழகத்தில், அதாவது கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரையான காலத் தமிழகத்தில் தொல்சமயம் சிதைந்து அல்லது சிதைத்து நிறுவனச் சமயம் உருபெற்ற விதத்தையும், அதற்குப் பின் நிலவும் தொல்சமய எச்சங்களைப் பற்றியும் விளக்க முயல்கிறது. புதிய ஆராய்ச்சி இதழ் 7-ல் 'சங்க இலக்கியமும் தொல்சமயமும் : பண்டைய தமிழ்ச் சமூகத்தில் தொல்சமயம் குறித்த ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தேன், அந்தக் கட்டுரையின் தொடர்ச்சியாக இப்போது வெளிவருகின்ற இந்தக் கட்டுரை அமைகின்றது.*

***அரசு உருவாக்கமும் சமய உருவாக்கமும்:***

*சங்க இலக்கியங்கள் உருவான காலத்தையடுத்து தமிழகத்தில் நிலவுடைமைச் சமூக அமைப்பு வளர்ச்சிபெற்றது. குறுநில மன்னர்களும், அவர்களால் ஆளப்பட்ட இனக்குழுவினரும் படிப்படியாகக் கட்டுப் படுத்தப்பட்டு, வலுவான அரசு உருப்பெறத் தொடங்கியது. நாடு என்ற பெயரிலான பரந்து பட்ட நிலப்பரப்பில் அரசு நிலைபெறலாயிற்று. நாடு என்ற ஆட்சிப்பகுதி உருவாக, குறுநில மன்னர்கள் இல்லாது போக வேண்டும் என்ற கருத்து உருவானது. இனக்குழுக்களும், அவற்றை ஆட்சி புரிந்து வந்த குறுநில மன்னர்களும் தேவையற்ற உறுப்பாக மாறலாயினர். இந்நிலையை,*

*பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்து அலைக்கும்*
*கொல் குறும்பும் இல்லது நாடு*

*என்ற குறள் (74:5) வாயிலாக அறிய முடிகிறது. இக்குறளுக்கு உரையெழுதிய மணக்குடவர் 'கொல் குறும்பு' என்ற சொல்லிற்கு, “வேந்தனை அலைக்கின்ற கொலைத் தொழிலினையுடைய குறும்பரும் இல்லாதது நாடு என்றவாறு” என்று விளக்கம் அளித்துள்ளார், காளிங்கர், “நாடு பற்றி வாழும் பெருநெறி வேந்தனைக் காடு பற்றி நிற்கச் செய்யும் கொல்வினைக் குறும்பும் இல்லது யாது; மற்று அதுவே நாடாவது என்றவாறு” என்று விளக்கம் அளித்துள்ளார். நாடு என்ற அரசமைப்பின் உருவாக்கத்திற்கு, குறுநில மன்னர்கள் தடையென்னும் போது அவர்களால் ஆளப்படும் மக்களும் தடையாகக் கருதப்பட்டனர் என்பது தெளிவு.*

வேட்டையையும் மேய்ச்சல் தொழிலையும் மேற்கொண்டு வாழ்ந்த மக்களை ஆட்சி புரிந்த சீறூர்த் தலைவர்கள், அம்மக்களின் எளிய வாழ்க்கையுடன் இணைந்தவர்களாகவே சங்க இலக்கியங்களில் காட்சி தருகிறார்கள். ஆனால் நன்செய் வேளாண்மைக்காக ''காடு கொன்று'' நாடாக்குதலையும், ''குளம் தொட்டு வளம் பெருக்கு'' வதையும் மேற்கொண்டு குடிமக்களிடம் 'இறை' என்ற பெயரில் வரி வாங்கியும் வாழ்ந்த மன்னர்கள், குறுநிலத் தலைவர்களிடமிருந்து வேறுபட்டு விளங்கினர். இதற்கு அடிப்படைக் காரணம் பொருள் உற்பத்தி முறையில் ஏற்பட்ட மாற்றம்தான்.

நெல்-கரும்பு சாகுபடிகளும், இவற்றில் கிட்டிய உபரியும், கரும்பை மையமாகக் கொண்டு உருவான கரும்பாலைகளும், இவற்றுடன் உருவான உள்நாட்டு வாணிப வளர்ச்சியும், பிற நாட்டுடனான வாணிபத் தொடர்பும் இனக்குழு வாழ்வில் இல்லாதவை. இவற்றின் வாயிலாகக் கிட்டிய ''உல்கு'' (சுங்கம்) பொருளும் நிலவரியும் மன்னனின் அடிப்படை வருவாய் இனங்கள் ஆயின. மக்களுடன் இணைந்து வேட்டையாடிய, குறுநில மன்னனிலிருந்து மாறுபட்டு, செங்கோல், வெண்கொற்றக் குடை போன்ற அடையாளங்களுடன் அரண்மனையில் தங்கி ஆண்ட வேந்தர்கள் தம் குடிமக்களிடமிருந்து அந்நியப்பட்டுப் போயினர். தம்முடைய மேலாண்மையைக் குடிமக்கள் மீது நிலை நிறுத்திக்கொள்ள படைபலத்தின் துணை மட்டுமின்றி, 'இறை' என்ற பெயரிலான, மனித ஆற்றலுக்கப்பாற்பட்டது என்று நம்பிய ஓர் ஆற்றலின் துணையும் அவர்களுக்குக் கிட்டியது. ஆளுவோனும், கடவுளும் 'இறை' என்ற சொல்லால் சுட்டப்பட்டனர். ஆளுவோன் வாங்கும் வரியையும், 'இறை' என்ற சொல்லால் சுட்டப்பட்டமையையும் இங்கு நினைவில் கொள்வது அவசியம். இத்தகைய சமுக மாறுதல்கள் தொல்சமயத்தைச் சிதைத்து நிறுவன சமயக் கூறுகளைத் தோற்றுவித்து வளர்த்தன.

**மன்றம் - கோட்டம் - கோவில்:**

தமிழரின் தொல்சமயம் தோன்றி வளர்ந்த இனக்குழுச் சமூகத்தில் ''மன்றம்'' என்ற பெயரிலான அமைப்பு நிலவியது. இது ஊருக்கு வரும் கலைஞர்கள் தங்கும் இடமாகவும் சிறுவர்கள் விளையாடும் இடமாகவும் பயன்பட்டுள்ளது. அத்துடன் வழிபடும் இடமாகவும் இது விளங்கியுள்ளது. மேல்நிலை ஆவியத்தின் வளர்ச்சி நிலையாக, தெய்வம் உறைவதாக நம்பிய மரங்களை இங்கு வழிபட்டதன் அடையாளமாக 'மன்ற' என்னும் அடைமொழியிட்டு மன்ற வேம்பு, மன்றப் பலவு, மன்றப்பெண்ணை (நற்றிணை 303), மன்ற வேங்கை (குறுந்தொகை 21; அகநானூறு 232) என்ற சொல்லாட்சியைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. அத்துடன் கோவில் போன்ற அமைப்பு மன்றத்தில் இருந்ததையும் அணங்கு, சூர், முருகு என்ற பெயரில் அழைக்கப்பட்டு வந்த உருவமற்ற தெய்வங்களை வணங்கும் செயல் தொடங்கி விட்டதையும் அறிய முடிகிறது.

நடுகல்லிலும் 'கள்ளி நிழலிலும்' மர வடிவில் மன்றங்களிலும் அணங்கு என்ற பெயரில் பல்வேறு பொருள்களிலும் உறைவதாக நம்பி வழிபட்ட தொல்சமயக்

கடவுளர்களுக்கு மாற்றாகக் கட்டிட வடிவிலான கோவில்களில் புதிய கடவுளர்கள் இடம்பெறத் தொடங்கினர். திணைச் சமூகத்தின் அழிவு, திணைக்குரிய தெய்வங்களின் அழிவுக்கு இட்டுச் சென்றது. புதியதாக உருவான சிறப்புக் கடவுளர் உறைய 'கோட்டம்' என்ற பெயரிலான கோவில்கள் உருவாயின. அரசன் வாழும் அரண்மனையும், தெய்வம் உறைவதாக நம்பும் கோட்டமும் கோவில் என்ற ஒரே சொல்லால் அழைக்கப்பட்டன. கோவில், இறை என்ற கடவுளுடன் தொடர்புடைய இரு சொற்களும் மன்னனுடன் தொடர்புபடுத்தப்பட்டதைக் கவனிக்க வேண்டும்.

ஊரிலுள்ள மன்றத்தில் சுவர் எழுப்பியும், அதில் விட்டங்கள் வைத்தும், கூரை வேய்ந்தும் கோவில் உருவாக்கப்பட்டதையும் அதில் ஓவியமாகக் கடவுள் வடிவம் வரையப்பட்டிருந்ததையும், அவ்வுருவின் முன் 'இட்டிகை' என்ற பெயரில் பலிபீடம் அமைத்துப் பலி கொடுத்ததையும் அகநானூறு பின்வருமாறு விரிவாகக் குறிப்பிடுகிறது (167:9-20):

கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ
ஊர் எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிந் ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி
இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து
எழுது அணி கடவுள் போகலின் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணைப்
பால் நாய் துள்ளிய பறைக்கட் சிற்றில்
குயில் காழ் சிதைய மண்டி அயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
போர்மடி நல்இறைப் பொதியி லானே

மனித சமூக வளர்ச்சியில் தொடக்க கால நுண்கலையாக ஓவியம் அமைகிறது என்பதன் அடிப்படையில் நோக்கினால், ஆவி என்ற ஆற்றலுக்கு உருவம் அமைக்கும் முயற்சியினை இப்பாடல் செய்தி உணர்த்துகிறது. மானிடவியலாளரின் நோக்கில் கடவுளுக்கு மனித உருவேற்றம் (Anthropomorphic) வழங்கும் நிகழ்ச்சியின் வெளிப் பாடாக இதைக் கொள்ள முடியும். அதே நேரத்தில் பால்சாரத் தன்மையிலேயே இது அமைந்துள்ளது. முருகன் கோட்டம் புறநானூற்றிலும் (299:5-7), தேவர் கோட்டமும் காமன் கோட்டமும் கலித்தொகையிலும் (82:4-5, 109:19-20) இடம்பெற்றுள்ளன. இவற்றின் வளர்ச்சி நிலையைச் சிலப்பதிகாரத்தில் விரிவாகக் காணமுடிகிறது.

அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல் வாயில்
உச்சிக்கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம் வேல்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பனையான் வாழ்கோட்டம்

*நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம்*
*மற்றும் பாசண்டச் சாத்தன் கோவில் என காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த கோவில்களைச் சிலப்பதிகாரம் (9:9-13) குறிப்பிடுகிறது. மதுரை நகரில் பாண்டிய மன்னனின் காவலன், சீற்றமிகு தோற்றத்துடன் கண்ணகியின் வருகையைக் கூறும் போது கொற்றவை, காளி என்ற இரு பெண் தெய்வங்களைக் குறிப்பிடுகிறான். இவ்விரு தெய்வங்களின் பெயர்கள் மட்டுமின்றி அவை தொடர்பான புராணச் செய்திகளையும் இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார் (20:34-40). சிலம்பின் இறுதிப் பகுதியில் கண்ணகிக்குக் கோவில் எழுப்பி அவளைத் தெய்வமாக எழுந்தருளிவித்த செய்தி இடம் பெறுகிறது. இது இறந்தோர் வழிபாட்டின் வளர்ச்சி நிலையாகும்.*

*மணிமேகலைக் காப்பியத்தில் புகார் நகரின் சக்கரவாளக் கோட்டத்திலுள்ள கோவில்களும் பலிபீடங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன (6:51-62). இவை தவிர வச்சிரக் கோட்டம், கற்பகத்தரு கோவில், தீவதிலகை கோயில், புத்தபாத பீடிகைக் கோயில், மணிமேகலா தெய்வக் கோவில் என்ற கோவில்களும் குறிக்கப்பட்டுள்ளன.*

*பல்லவர் ஆட்சியின் போது செங்கல்லால் கட்டப்பட்ட கோவில்களும், கற்களால் கட்டப்பட்ட கோவில்களும் (கற்றளி) உருவாயின. பல்லவர் காலக் கோவில்களின் சிறப்புக் கூறான குடைவரைக் கோவில்கள் முதலாம் மகேந்திரவர்மனால் (கி.பி 615-630) அமைக்கப்பட்டன. 'மாடக்கோவில்' என்ற பெயரில் ஒரு குறிப்பிட்ட வடிவிலான கோவிலும் உருப்பெற்றது. கோவில் கட்டிடக்கலை வளர்ச்சியுற்று, பல் வேறு வகையான அமைப்புகளில் கோவில்கள் கட்டப்பட்டன. மகேந்திரவர்மன் காலத்தைச் சேர்ந்த திருநாவுக்கரசரின் தேவாரத்தில் குறிப்பிடப்படும் சிறப்புக்குரிய கோவில்கள் பல உள்ளன.*

*பெருக்கு ஆறு சடைக்கு அணிந்த பெருமான் சேரும்*
*பெருங்கோயில் எழுபதினோடு எட்டும், மற்றும்*
*கரக்கோயில், கடிபொழில் சூழ் ஞாழற்கோயில்,*
*கருப்பறியல் பொருப்பு அனைய கொகுடிக்கோயில்,*
*இருக்கு ஓதி மறையவர்கள் வழிபட்டு ஏத்தும்*
*இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில்*
*திருக்கோயில் சிவன் உறையும் கோயில் சூழ்ந்து,*
*தாழ்ந்து, இறைஞ்ச, தீவினைகள் தீருமன்றே. (கோபாலய்யர் 1985:332)*

*இவ்வாறு பல் வேறு வகையான கோவில்கள் மட்டுமின்றி இத்தகைய கோவில்களைக் கொண்ட ஊர்கள் சிலவும் சிறப்புடையனவாய்க் கருதப்பட்டன. இவ்வூர்களுக்குச் சென்ற நாயன்மார்களும், ஆழ்வார்களும் அவ்வூரையும் அங்குள்ள இறைவனையும் புகழ்ந்து பாடியுள்ளனர். இவ்வாறு நாயன்மார்களாலும், ஆழ்வார் களாலும் பாடப்பட்ட ஊர்கள் முறையே, பாடல்பெற்ற தலம் அல்லது வைப்புத்தலம் எனச் சைவர்களாலும் 'மங்களாசாசனம்' பெற்ற ஊர்கள் என வைணவர்களாலும் அழைக்கப்பட்டன. இன்று வரை இவை சிறப்பாகக் கருதப்படுகின்றன.*

தனித்தனியாக ஒரு தலத்தையும் அங்குள்ள சிவனையும் பாடியதுடன் மட்டுமின்றி இவ்வூர்களையெல்லாம் பட்டியலிட்டு 'ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம்' என்ற தலைப்பில் பத்துப் பதிகங்களைத் திருநாவுக்கரசர் பாடியுள்ளார் (கோபாலய்யர் 1985:330-331). சுந்தரரும் 'திருநாட்டுத்தொகை', 'திரு இடையாற்றுத் தொகை', 'ஊர்த்தொகை' என்ற தலைப்புகளில் பதிகம் பாடியுள்ளார் (கோபாலய்யர் 1985:394-395, 416, 436-437). ஒவ்வொரு பதிகத்திலும், ஊர்களின் பெயர்கள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

சைவ வைணவக் கோவில்களை உருவாக்கிய மன்னர்கள் பக்திப் பனுவல்களில் போற்றப்பட்டனர்.

பரமேச்சுர விண்ணகரத்து பல்லவன்
மல்லையர்கோன் பணிந்த பரமேச்சுர
விண்ணகரமதுவே

என்று பெரியாழ்வாரும், “என்தோள் ஈசர்க்கு எழில்மாடம் எழுபது செய்த உலகாண்ட திருக்குலத்து வளச்சோழன்” என்று திருமங்கையாழ்வாரும் போற்றிப்பாடியுள்ளனர். “திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே” என்பது நம்மாழ்வார் கூற்று.

**ஒன்றே தெய்வம்:**

கோயில் நிறுவனம் வளர்ச்சியடைந்து சென்றதன் விளைவாக, அரசன் - பேரரசனுக்கு இணையாக ஒரே தெய்வம் என்ற கருத்துப்போக்கு தோன்றி வளர்ந்தது. கடவுளுக்கு மனித உருவமும், பண்புகளும், பால்சார்புகளும் ஏற்றிச் சொல்வதைச் சங்க இலக்கியங்களில் காலத்தால் பிந்திய பரிபாடலில் காணமுடிகிறது. முருகன், சிவன், திருமால் ஆகிய தெய்வங்களைக் குறித்த வழிபாடும், அவை உறையும் கோவில்களும் விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அத்துடன் பல்வேறு பெயர்களில் வணங்கப்படும் தெய்வங்களை ஒரே தெய்வ வழிபாட்டிற்குள் அடக்கும் முயற்சியும் கூட உருவானது. இதை,

ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால் வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வை மேய வேறுவேறு பெயரின்
எவ்வயி னோயும் நீயே!

என்ற பரிபாடல் வரிகள் உணர்த்துகின்றன. இம்முயற்சியில் எழுத்து வடிவம் பெற்ற பனுவல்களின் பங்களிப்பு முக்கியமானதாய் இருந்தது. இக்கருத்துப் போக்கின் வளர்ச்சியை, சிவனை மையமாகக் கொண்ட சைவம் நிலைபெற்ற பின் மிக வெளிப் படையாகக் காண முடிகிறது. சிவஞான சித்தியார் சுபக்கம் நூலில் “யாதொரு தெய்வங் கொண்டர் அத்தெய்வமாகி ஆங்கு மாதொரு பாகனார்தாம் வருவர்” என்று வரும்

*தொடர் (115), பல்வேறு வழிபாட்டு முறைகளையும் தன்னுள் உள்வாங்கிக் கொள்ள சைவம் மேற்கொண்ட முயற்சியின் வெளிப்பாடுதான்.*

*மற்றொருபுறம், தொல்சமயத்தின் அணங்கு, தெய்வம், மூத்தோர், வீரர் முதலான நம்பிக்கைகள் இழிவுபடுத்தப்பட்டன. இறந்தோர் வழிபாட்டை மையமாகக் கொண்ட தொல்சமயநெறியில் இடம் பெற்றிருந்த தெய்வங்களுக்கு 'சிறு தெய்வங்கள்' என்ற பெயரைத் திருநாவுக்கரசர் இட்டு, ''சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்'' என்றும் பாடியுள்ளார். அற்பமான தெய்வம் என்ற பொருளில் 'இளந்தெய்வம்' என்ற சொல்லை வைணவத்தில் நம்மாழ்வார் பயன்படுத்தியுள்ளார். ''பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும், உண்டற்கு வேண்டி ந் ஓடித்திரியாதே'' என்று பெரியாழ்வார் பாடியுள்ளார்.*

***நடுகல் வழிபாட்டின் வீழ்ச்சி:***

*ஆறலைக் கள்வர்களால் கொல்லப்பட்ட வழிப்போக்கர்களுக்குப் பதுக்கை அமைத்தும், போரில் இறந்த வீரர்களுக்கு நடுகல் நாட்டியும் பண்டைத் தமிழகத்தில் ''இறந்தோர் வழிபாடு'' சிறப்புடன் நடைபெற்று வந்ததைச் சங்க இலக்கியமும் பெருங் கற்காலச் சின்னங்களும் காட்டுகின்றன.*

*தொல்சமயத்தின் சிதைவில் குறிப்பிடத்தகுந்த நிகழ்வாக அமைந்தது இறந்தோர் வழிபாட்டின் அடையாளமாக விளங்கிய நடுகல் வழிபாட்டில் ஏற்பட்ட மாற்றங் களாகும். இனக்குழுத் தலைவர்களை விட பரந்துபட்ட நிலப்பகுதியின் ஆளுவோராக மாறிய பல்லவர் கால ஆட்சியில் இம்மாறுதல் தொடங்கியுள்ளது. கோவில் என்ற அமைப்பு உருவாகத் தொடங்கியதும் சமாதிக் கோவில்களும் பள்ளிப் படைக் கோவில்களும் இறந்தோர் நினைவாக உருவாகத் தொடங்கிவிட்டன.*

*விஜயகம்பன் என்ற பல்லவமன்னன் தன் தந்தை புதைக்கப்பட்ட இடத்தில் கோவிலும் கல்லறையும் கட்டினான் (க. ஆ.அ. 1926:27-28). சோழர் ஆட்சிக் காலத்தில் செம்பியன் மாதேவி என்ற பெண் தன் கணவன் நினைவாகக் கோனேரிராஜபுரம் என்ற ஊரில் கோவிலொன்று கட்டினாள்.*

*இது போன்று பராந்தகச் சோழனின் மகன் அரிஞ்சயனுக்கு மேல்பாடி என்ற இடத்தில் கோவிலொன்றை இராஜராஜன் கட்டினான். முதலாம் ஆதித்தியன் நினைவாகச் சித்தூர் மாவட்டம் தொண்டமா நாட்டில் கோவில் ஒன்று கட்டப்பட்டது.*

*பள்ளிப்படைக் கோவில்கள் சிவனடியார்களுக்கும் மன்னர்களுக்கும் உருவாக்கப்பட்ட நிலையில் 'சமாதிலிங்க ஸ்தபனம்' என்ற பெயரில் இறந்தோரை அடக்கம் செய்த இடத்தில் கட்டப்பட்ட சமாதியின் மீது சிவலிங்கங்கள் அமைக்கப் பட்டன.*

மற்றொருபுறம் சிவனடியார்களை அடக்கம் செய்யும் விதிமுறைகளையும் சைவம் உருவாக்கியது. திருமந்திரம் சிவனடியார்களை அடக்கம் செய்வது தொடர்பாகப் பின்வரும் விதிமுறைகளை உருவாக்கியுள்ளது.

பக்தி இயக்கக் காலத்துத் திருமூலர், சிவஞானிகளின் உடலை அடக்கஞ் செய்யக் குழி (அவர் மொழியில் குகை) வெட்டுதல் குறித்தும், அதில் இட வேண்டிய பொருள்கள் குறித்தும் பின்வரும் விதிமுறைகளை உருவாக்கியுள்ளார்.

தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இந்நிலந் தாங்குகைக் கெய்தும் இடங்களே

என்று குறிப்பிடும் திருமூலர் (செய்யுள் 1878) குகையின் அமைப்பு குறித்தும், அதில் இட வேண்டிய பொருள்கள் குறித்தும் பின்வருமாறு விவரித்துள்ளார்:

"நல்ல குகையின் மேற்பரப்பு நால்வட்டம் சேர்ந்ததாயிருந்தல் வேண்டும். ஒன்பதடி நீளம் இடம் அமைத்தல் வேண்டும். மேலும் குகையின் அடிப்பகுதியில் பசும்பொன், வெண் பொன், செம்பொன், கரும்பொன் என்னும் பஞ்ச உலோகம் என்கிற ஐவகைப் பொன்னையும் ஒன்பது மணிகளையும் அமைத்தல் வேண்டும். இவற்றின் மேல் இருக்கை அமைத்தல் வேண்டும். அதன் மேல் திருவெண்ணீறு குவித்தல் வேண்டும், அதன் மேல் திருமேனியை வைத்தல் வேண்டும். அதன் மேல் அழகிய சந்தனச் சாந்து பூசிப் பொதிதல் வேண்டும். மேலும் குகையின் நடுவில் நால் வட்டம் அமைத்து அதன் மேல் நிறைந்த மலர் மாலைகள், சந்தனக்கலவை, கத்தூரி முதலிய மணக் கூட்டுக்கள், சாந்து, புனுகு, பன்னீர் சேர்த்துத் தக்கவாறு பொதிதல் வேண்டும். பின் சிறந்த நறும்புகையும் விரும்பி இடுதல் வேண்டும், இனி சிறப்பித்துச் சொல்லப்படும் திருவெண்ணீற்று முழுப்பூச்சு சட்டைபோல் அமைத்தல் வேண்டும். இருக்கை மேலும் திருவெண்ணீறு குவித்தல் வேண்டும், அதன் மேல் திரு உடலை எழுந்தருளுவித்தல் வேண்டும். மணப் பொடியும் திருவெண்ணீறும் மேலும் பொலிவித்தல் வேண்டும். அதன் மேல் திருமேனியைச் செம்மையுற இருத்தல் வேண்டும். மேலும் சொல்லியபடி அமைத்த பின் சாருமனை பொருந்த அதன் மேல் பாவாடை விரித்து இலையமைத்துப் பொன்போல் பொரித்த கறிவகைகளும் போனகமாகிய திருவமுதும் இளநீரும் திருமுன்னிலையில் படைத்தல் வேண்டும். அத்திரு முன் குழை முகப் பார்வை தரித்தலாகிய நைவேத்தியம் கண்டபின் மேற்கட்டி அமைத்து வேண்டுவ செய்யலாம்.

மேலே மழை போல் பொழியும் திருவெண்ணீராலும் மணப்பொடியும் பலவகை நறுமலரும், தருப்பைப் புல்லும் வில்வமும் கொண்டு சிவபிரான் திருவடி விளக்கிய தீர்த்த நீரால் திருமஞ்சனம் செய்து வழிபாடு செய்தல் வேண்டும். காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று காலங்களிலும் அன்பு,

*அறிவு, ஆற்றல் என்னும் பணி மூன்றாலும் அன்பு, இன்பு, அடைவு ஆகிய கருத்து மூன்றிலும் வழிபடுவதற்கு மூன்று அழகிய இடம் அமைத்தல் வேண்டும். மேலும் நிலவறைப்படுத்திய குகையின் மீது அரசு, சிவலிங்கம் ஆகிய இரண்டினுள் ஒன்றை நிலைநாட்டி வழிபடுதல் வேண்டும் என்பதாம் (பொன்.கணேசன் 2001: பக் 323 - 524)."*

*மற்றொரு மாற்றமும் குறிப்பிடத் தகுந்தது. ஒரு மனிதனின் உயிரைப் பறித்தவர்கள், உயிரை இழந்தவர்கள் என்ற இரு நிலைகளில், இறந்து போனவர்கள் நினைவாக நடுகல் நாட்டப்பட்டு வழிபாடு நிகழ்த்துவது சங்ககாலத் தொல்சமயத்தின் ஓர் அங்கமாகும். தொல்சமயம் சிதைவுறத் தொடங்கியவுடன் இதில் மாற்றம் ஏற்பட்டது. கொலையுண்டு இறந்தவர்கள் நினைவாக நடுகல் நாட்டுவதற்கு மாறாகக் கொலை செய்தவரிடம் தண்டமாகப் பொருள் வாங்கும் முறை அறிமுகமாகியது. சோழர் காலக் கல்வெட்டுக்களில் இது தொடர்பாகச் சில சான்றுகள் கிடைத்துள்ளன.*

*1012 அல்லது 1013 ஆண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் சோழர் கல்வெட்டு ஒன்றில் பொற்றாமன் என்பவன் சீராளன் என்பவனைக் கத்தியால் குத்திக் கொன்றான். இச்செயலுக்காக, ஜம்பை தான்தோன்றி ஆழ்வார் கோவிலில் நந்தா விளக்கேற்றி வைக்க பொன் வழங்கும் தண்டனை அவனுக்கு வழங்கப்பட்டது (கல் 1: கல் எண் : 7).*

*சேர்ந்தன் உமையாள் என்ற பெண் நஞ்சு குடித்துத் தற்கொலை செய்து கொண்டதற்குக் காரணமான பழங்கூறன் குன்றன் என்ற அரசு அதிகாரி திருத்தான்றி மகாதேவன் ஆலயத்தில் விளக்கெரிக்க 32 காசுகளை வழங்கிய செய்தியைப் பதினொன்றாம் நூற்றாண்டுக் கல்வெட்டு குறிப்பிடுகிறது (தென்னிந்திய கல்வெட்டு 22:80).*

*திருவண்ணாமலை மாவட்டம், சம்பை என்னும் கிராமத்தில் கத்தியால் குத்திக் கொலை செய்த ஒருவன் அதற்குக் கழுவாயாக அக்கிராமத்திலுள்ள சிவன் கோயிலுக்கு 32 பசுக்களைக் கொடையாக வழங்கினான் என்று 12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு (1226 : 27) குறிப்பிடுகிறது (தென்னிந்திய கல்வெட்டு : பகுதி 2 : 92).*

*இதுபோல் பொன், காசு, பசு, ஆடு ஆகியனவற்றைக் கோவிலுக்குக் கொடையாகக் கொடுத்து கழுவாய் தேடிக் கொண்டச் செயலை வேறு சில கல்வெட்டுக்களும் கூறுகின்றன (ஆ. சிவசுப்பிரமணியன் 2007: 17-19).*

*இச்செய்திகள் நிறுவனமாக்கப்பட்ட சமயம் பொருளாதார நிலையில் தன்னை வலுப்படுத்திக் கொள்ளும் நோக்கில் பொன், காசு, பசு, ஆடு எனப் பல்வேறு வடிவங்களில் கொலையாளிடமிருந்து கொடை பெற்றுள்ளதை உணர்த்துகின்றன. இம்மாறுதல் இறந்தோர் வழிபாட்டைப் புறம் தள்ளிவிட்டது.*

அதே நேரத்தில் கோவிலில் நடக்கும் தவறுகளையும் கோவில் சொத்துக்கள் தனிமனிதர்களால் துய்க்கப்படுவதையும் எதிர்த்து தற்கொலை செய்து கொண்டவர்களுக்கு உருவச் சிலை நிறுவி வழிபாடு நிகழ்த்த மானியங்களும் ஒதுக்கியுள்ளனர். பொது மக்களின் எழுச்சியை எதிர்கொள்ளும் வழிமுறையாகவே இது நிகழ்ந்துள்ளது. இவை விதிவிலக்கான நிகழ்வுகளே (சிவசுப்பிரமணியன் ஆ. 2007: 49-54). இப் போக்குக்கு மாறாக நடுகல் நிறுவுதலும் வழிபடுவதும் ஆங்காங்கே நிகழ்ந்து வந்துள்ளன. ஆனால் இவை ஆட்சியில் இருப்போரின் அரவணைப்பைப் பெற்றிருக்க வில்லை.

**வெறியாட்டை மாற்றுதலும் விலக்குதலும்:**

சைவம், வைணவம், சமணம், ஆசீவகம் என்ற நிறுவனச் சமயங்கள் குறித்த செய்திகளைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுவதுடன் வெறியாடுதலின் மாறிய வடிவமான தெய்வ ஆவேசமுற்று ஆடுதலையும் குறிப்பிட்டுள்ளது. தெய்வ ஆவேசமுற்று ஆடுதல் அச்சமய நெறிகளில் இடம்பெறவில்லை. ஒரு வகையில் பின்தங்கியிருந்தோரின் சமய நெறியாகச் சிலப்பதிகாரத்தில் காட்சியளிக்கின்றது.

மனித உடலில் தெய்வ ஆவி இறங்கும் நம்பிக்கை முற்றிலும் மறைந்து போய் விடாத நிலையில் கலை நிகழ்வாக இது மாற்றமடைந்தது. தெய்வ ஆவேசமுற்றவன் எத்தகைய உடலசைவுகளை மேற்கொள்வான் என்பதனை உரை எழுதிய சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், "தெய்வமுற்றோன் விநயஞ் செப்பிற் கைவிட்டெறிந்த கலக்க முடைமையு மடித்தெயிறு கௌவிய வாய்த்தொழிலுடைமையும் துடித்த புருவமுந் துளங்கிய நிலையும் செய்ய முகமுஞ் சேர்ந்த செருக்கும் எய்துமென்ப வியல்புணர்ந்தோரே" என்று விரிவுபடக் கூறியுள்ளார். வெறியாட்டு என்ற தொல்சமயம் சார்ந்த சடங்கு ஒரு கலையாக மாற்றமடைந்துள்ளதை அடியார்க்கு நல்லாரின் இவ்வுரைப் பகுதி எடுத்துரைக்கிறது.

சாலினிக்கு கொற்றவைக் கோலம் புனைந்ததைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. கொற்றவைக் கோலத்திலிருந்து தெய்வமுற்ற சாலினி கண்ணகியை,

இவளோ கொங்கச் செல்வி; குடமலை ஆட்டி;
தென்தமிழ்ப் பாவை; செய்த தவக் கொழுந்து;
ஒரு மா மணி ஆய், உலகிற்கு ஓங்கிய
திரு மா மணி எனத் தெய்வம் உற்று உரைப்ப

என்று பாராட்டி, பின்வருவது உரைத்தாள்.

முதலாவதாகக் கண்ணகியின் தோழி தேவந்திகை மீது சாத்தான் என்ற தெய்வம் இறங்குகிறது. அப்போது அவளின் தோற்றத்திலும் செயலிலும் ஏற்பட்ட மாறுதல்களை:

"குரல் தலைக் கூந்தல் குலைந்து பின் வீழ;

*துடித்தனள் புருவம்; துவர் இதழ்ச் செவ்வாய்*
*மடித்து எயிறு அரும்பினள்; வரு மொழி மயங்கினள்*
*திரு முகம் வியர்த்தனள்; செங் கண் சிவந்தனள்*
*கை விட்டு ஓச்சினள்; கால் பெயர்ந்து எழுந்தனள்*
*பலர் அறிவாராத் தெருட்சியள்; மருட்சியள்*
*உலறிய நாவினள், உயர் மொழி கூறி;"*

*என்று வரந்தருகாதை (30:38-45) வருணிக்கிறது. பின்னர் தேவந்திகை மீது கண்ணகியின் ஆவி இறங்கிய நிகழ்வும் (சிலம்பு 30:172) இடம்பெறுகிறது. திருமாலுக்குப் பணி செய்யும் பெண் ஒருத்தியின் மீதும் ஆவி இறங்குகிறது.*

*வெறியாடல் பற்றி சிலப்பதிகாரத்தில் வரும் குறிப்புகளுக்கு மாறான மனநிலையிலான நோக்குகளைப் பக்தி இலக்கியத்தில் காணமுடிகிறது. தலைவன் ஒருவன் மீது காதல் கொண்ட தலைவியின் உடல் நலிவுக்கான உண்மைக் காரணம் அறியாத தாய் வேலனையழைத்து வெறியாட்டு நிகழ்த்துவது சங்ககால மரபு. ஆனால் நிறுவனச் சமயமான வைணவம் சார்ந்த திருவாய்மொழி தலைவியின் காதல், திருமாலை மையமாகக் கொண்டதாகச் சித்திரிக்கிறது. தலைவியின் நோய் தீர்க்க இங்கும் வேலனை அழைக்கிறாள் தாய்; வெறியாட்டை விரும்பாத தலைவி திருமாலின் அடியார்களை வணங்கும்படி பின்வருமாறு தன் தாயிடம் கூறுகிறாள்:*

*அணங்குக் கருமருந் தென்றங்கோர்*
*ஆடும்கள் ளும்பராய்,*
*துணங்கை யெறிந்துநுந் தோள்குலைக்*
*கப்படும் அன்னைமீர்,*
*உணங்கல் கெடக்கழு தையுத*
*டாட்டம்கண் டென்பயன்?*
*வணங்கீர்கள் மாயப் பிரான் தமர்*
*வேதம் வல் லாரையே*

*இதன் உச்சகட்டமாக வெறியாட்டு கீழ்மையானது என்ற கருத்து பின்வருமாறு வலியுறுத்தப்படுகிறது:*

*வேதம்வல் லார்களைக் கொண்டுவின்*
*ணோர்பெரு மான் திருப்*
*பாதம் பணிந்து, இவள் நோயிது*
*தீர்த்துக்கொள் ளாது போய்*
*ஏதம் பறைந்தல்ல செய்துகள்*
*ளூடு கலாய்த்தூய்,*
*கீத முழவிட்டு நீரஅணங்*
*காடுதல் கீழ்மையே*

ஒரு மனிதன் மீது இறங்கி ஆடும் தெய்வம் அற்பமான தெய்வம் என்ற பொருளில் 'இந்நோய் இனதென்று இன்மொழி கேட்கும் இளந்தெய்வம் அன்றது' என்ற திருவிருத்தத்தில் நம்மாழ்வார் (செய்யுள் 20) பாடுகிறார்.

சங்க இலக்கியத் தலைவி தலைவன் மீது கொண்ட காதலினால் வெறியாட்டை விலக்கும்படி கூறுகிறாள். மற்றபடி வெறியாட்டுக்குரிய தெய்வத்தைப் பழிக்க வில்லை. ஆனால் திருவாய்மொழியில் (4:6:3) நம்மாழ்வார் சித்திரிக்கும் தலைவி கண்ணனைக் காதலனாகக் கொண்டு,

இது காண்மின் அன்னைமீர்! இக்கட்டு
விச்சிசொற் கொண்டு, நீர்
எதுவானும் செய்தங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவேல்மின்,
மதுவார் துழாய்முடி, மாயப்
பிரான்கழல் வாழ்த்தினால்,
அதுவே யிவளுற்ற நோய்க்கும்
அருமருந் தாகுமே

என்கிறாள். இவ்வுலகில் வாழும் தலைவன் மீது கொண்ட காதலால் உடல் மெலியும் தலைவிக்கு அவளது தாய் வெறியாட்டு நிகழ்த்துவதைச் சங்க இலக்கியங்கள் சித்திரிக்கின்றன. மாறாக, மறு உலகில் இருப்பதாக நம்பப்படும் கடவுள் மீது காதல் கொண்ட தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்தப்படுவதைத் திருவாய்மொழி சித்திரிக்கிறது. வெறியாட்டு என்ற சடங்கு தொடர்ந்தாலும் அதன் நோக்கில் மாறுபாடு தோன்றியுள்ளது.

**வேதநெறியின் செல்வாக்கு:**

இவையெல்லாம் ஒரு புறமிருக்க வடபுலத்தின் வேத நெறியின் தாக்கமும் தொல்சமயத்தின் சிதைவை வேகப்படுத்தியது. தமிழ் மன்னர்கள் வேதவேள்விகள் செய்தமை குறித்த சான்றுகள் சங்க நூல்களில் காணக் கிடைக்கின்றன.

புறநானூற்றில் இடம்பெறும் சில பாடல்களில் வேள்வி மற்றும் வடமொழிப் புராணங்களின் செல்வாக்கைக் காண்கிறோம். கடவுள் வாழ்த்தில் (1:6) ‘‘மறை நவில் அந்தணர்’’ என்று வேதம் ஓதும் அந்தணர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

இரண்டாவது பாடலில் பாரதப்போர் குறித்த புராணச் செய்தியும், அதனுடன் உதியஞ் சேரலாதனைத் தொடர்புபடுத்தும் போக்கும் காணப்படுகின்றன. அத்துடன் நான்கு வேத நெறியும், அந்தணர் மாலையில் செய்யும் வழிபாடும் குறிப்பிடப்படுகின்றன (புறநா 2:13-16, 19: 23-24). ‘‘நான்முறை முதல்வர்’’ என்ற சொல்லாட்சி ஆறாவது செய்யுளிலும், நால்வேதம் என்ற சொல்லாட்சி பதினைந்தாவது செய்யுளிலும், 'நான் மறை முதல்வர்' என்ற சொல்லாட்சி இருபத்தெட்டாவது செய்யுளிலும் இடம் பெற்றுள்ளன, 'தென்புலம்' என்று வீரர்

உலகம் மாற்றம் பெற்றுள்ளதை ஒன்பதாவது செய்யுள் வாயிலாக அறிய முடிகிறது. வேள்வி நடத்தி ''யாகத் தூண்'' நடும் பழக்கம் இருந்ததை,

நெய்ம் மலி ஆவுதி பொங்கப் பன்மாண்
வியாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியங்களம் பல கொல்?

என்று கபிலர் பாடல் (புறநா 15:19-21) வெளிப்படுத்துகிறது. இத்தகைய வேள்வி செய்ததன் அடிப்படையில், தான் செய்த வேள்வியின் பெயரை அடைமொழியாகக் கொண்டு பெருநற்கிள்ளி என்ற மன்னன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று அழைக்கப்பட்டுள்ளான் (புறநா 16).

''நான்மறை'' என்ற சொல்லாட்சி சங்க நூல்களில் இடம்பெற்றுள்ளது. வடமொழி வேத நூல்கள் நான்கையும் குறிக்கவே ''நான்மறை'' என்ற இச்சொல் பயன்படுத்தப் படுகிறது. நான்கு வேதங்களும் 'நான்மறை முதுசொல்' என்றழைக்கப்பட்டன (அகநா 186:16).

நான்முகன் நாவில் பிறந்த நான்கு வேதங்களும் ஒலிப்பதைக் கேட்ட மதுரை நகர் காலையில் விழித்தெழும் என்று பரிபாடல் (திருமால் 7:8) குறிப்பிடுகிறது. இதனால் வேதம் ஓதும் செயல் அதிகாலையில் நாள்தோறும் நிகழ்ந்ததை அறிய முடிகிறது,

நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ந்த அந்தணர் 'நான்கு மறை முதல்வர்' (பட் 302), நான்மறையோர் என்றும் (புற 93:7) முனிவர்கள், நான்மறை முனிவர் என்றும் (புற 8:20) அழைக்கப்பட்டனர். இவ்வாறு வேதம் அறிமுகமாகியிருந்ததன் விளைவாக வேதநெறி சார்ந்த வேள்விகளும் மன்னர்களால் நடத்தப்பட்டன. சங்க காலப் பாண்டிய மன்னர்களுள் ஒருவனான முதுகுடுமிப் பெருவழுதி, வேள்விகள் பல செய்தமையால் 'பல்யாக சாலை' என்ற அடை மொழியிட்டு பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்று அழைக்கப்பட்டுள்ளான்.

அந்தணர்களின் துணையுடன் மன்னர்கள் வேள்விகள் நடத்தியுள்ளனர். இதற்குச் சான்றாக,

"ஆன்ற கேள்வியடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக,
மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே.."

என்ற புறநானூற்றுப் பாடலைக் (26) கூறலாம்.

மன்னர் பரம்பரையினை தன் மழுவால் அடித்த பரசுராமன் வேள்வி செய்து, வேள்வித்தூண் நட்ட வடமொழிப் புராணச் செய்தி சங்ககாலத் தமிழகத்தில் பரவியிருந்துள்ளது. இச்செய்தியை,

*"மன்மருங்கு அறுத்த மழுவான் நெடியோன்*
*முன்முயன்று அரிதினின் முடித்த வேள்வி*
*கயிறு அரை யாத்த காண்தகு வனப்பின்*
*அருங்கடி நெடுந்தூண் போல... ..."*

*என்று அகநானூறு (220:5-8) குறிப்பிடுகின்றது. வேதசமயம் செல்வாக்குப் பெற்றதன் வெளிப்பாடாகவே வேள்வி, வேள்வித்தூண், வடமொழி புராணக் கதைமாந்தர் குறித்த செய்திகள் சங்க நூல்களில் பதிவாகியுள்ளன.*

*தமிழ்ச்சமூகத்தில் நிகழ்ந்த வடபுலத் தாக்கத்தை இச்செய்திகள் உணர்த்துகின்றன. இந்த மாற்றத்தை ஏற்றுக் கொள்ள முடியாத மனநிலையுடன், கா.சுப்பிரமணிய பிள்ளை நான்கு வேதம் என்பது தமிழ் வேதம் என்று நிறுவ முயன்றுள்ளார். ஆனால் நாம் விரும்பாத மாறுதல் நிகழ்ந்துள்ளதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டியுள்ளது. திராவிடக் கருத்துநிலை வளர்ச்சியின் பின்னர் சங்க காலம் ஆரியக் கலப்பற்ற தமிழ்ப் பண்பாட்டின் பொற்காலமாகக் கருதப்பட்டதாக சிவத்தம்பி, பாண்டுரங்கனின் (2008) நூலுக்கு எழுதிய பதிப்புரையில் கூறியுள்ளார். இக்கூற்றுக்கு அரண் செய்வதாகவே கா.சு.பிள்ளையின் கருத்து அமைந்துள்ளது.*

*சங்க காலத்திற்குப் பின் பல்லவர் காலத்தில் வேத சமயத்தின் புனிதமொழியாகக் கருதப்படும் வடமொழி செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தது. பல்லவர்களின் மெய்க் கீர்த்திகள் வடமொழியில் எழுதப்பட்டன. வடமொழிப் புராணப் பாத்திரங்களுடன் பல்லவ மன்னர்கள் தம்மைத் தொடர்புபடுத்திக் கொண்டனர். வேதம் வல்ல பிராமணர்களுக்கு நிலக் கொடைகள் வழங்கப்பட்டன.*

*பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் வடபுலத்திலிருந்து பிராமணர்களை அழைத்து வந்து குடியேற்றம் செய்யும் செயல் பரவலாக நிகழ்ந்தது. கல்வெட்டு மற்றும் செப்பேடுகள் வாயிலாக இதனை அறிய முடிகிறது.*

*இவ்வாறு கல்வெட்டுக்களும், செப்பேடுகளும் கூறும் செய்தியை இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன. வடபுல அந்தணர்களை அழைத்து வந்து மதுரையில் குடியேற்றிய செய்தியை, திருவிளையாடல் புராணம், மதுரைக் காண்டத்தின் திருநகரம் காண்படலம் குறிப்பிடுகிறது.*

***வேதநெறி ஏற்படுத்திய மாற்றங்கள்:***

*வடபுல அந்தணர்களின் குடியேற்றமும் செங்கல்லாலும், கருங்கற்களாலும் கட்டப்பட்ட கோவில்களில் அவர்கள் நுழைந்தமையும், தொல்சமய வழிபாட்டு முறையைச் சிதைக்கலாயிற்று.*

*பண்டைத் தமிழர்களின் தொல் சமயத்தில் இறைச்சியும் தானியமும் கலந்த படையல் படைக்கப்பட்டது. படையல் பொருளாகக் 'கள்' விளங்கியது. வேதநெறி*

*செல்வாக்கின் விளைவாக, முதலாவதாக உயிர்ப்பலியும் கள் படையலும் நிறுத்தப்பட்டன.*

*சைவ உணவு சமைத்துப் படைக்கப்பட்டது. அத்துடன் அதைச் சமைக்கவென்றே 'அடிசிலறை' என்ற பெயரில் சமையலறை உருவாகியது. வழிபாட்டின் போது விளக்கேற்றிய செயல் சங்க நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இல்லுறை தெய்வத்திற்கு விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவி வழிபட்டதை நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. விளக்கின் எரிபொருளாகப் பெரும்பாலும் நெய் விளங்கியதால் அதைப் பெறும் பொருட்டு கால்நடைகளைக் கொடையாக வழங்கும் செயல் உருவானது. மற்றொரு பக்கம் பொன்னும், பணமும், நன்செய், புன்செய் நிலங்களும், நந்தவனங்களும், மரங்கள் மிகுந்த தோப்புகளும் கோவில்களுக்குக் கொடையாக வழங்கப்பட்டன. உலோகப் பாத்திரங்களும், பொன்னாலாகிய அணிகலன்களும், ஐம்பொன் உலோக உருவங்களும் கொடையாக வழங்கப்பட்டன.*

*பல் வேறு வகையான இசைக்கருவிகள் கோவில்களில் இடம் பெற்றன. திருப்பதிகம் பாடுவார், தேவரடியார், சட்டுவன், இசைக் கருவிகள் இசைப்போர், நெற்குற்றுவோர், சமைப்போர், நீர் சுமப்போர், அலகிடுவோர் எனப் பல்வேறு பணிகளைச் செய்யும் ஊழியர்கள் கோவில்களில் இடம்பெற்றனர். தானியங்கள் சேமித்து வைக்கும் பெரிய களஞ்சியங்கள் இருந்தன. வட்டிக்குக் கடன் கொடுக்கும் செயலையும் கோவில்கள் மேற்கொண்டன. இதனால் சோழர்காலக் கோவில் என்பது ஒரு பெரிய நிறுவனமாகக் காட்சியளித்தது.*

*வேதநெறி வளர்ச்சியின் விளைவால், பலிகொடுக்கும் செயலைச் சங்க காலத்தில் நிறைவேற்றி வந்த குயவரும், வேலனாட்டம் நிகழ்த்திய வேலனும் தேவையற்றவர்களாகிப் போனார்கள். வெறியாட்டு நின்று போயிற்று. கல், மரம் என்பனவற்றைத் தூலமாகப் பார்த்து வழிபட்ட முறைக்கு மாறாக, ஐம்பூதங்களின் குறியீடாகச் சிலவற்றைக் கொண்டு வழிபடும் வழக்கமும் உருவானது.*

*மனித ஆற்றலுக்கு மேற்பட்ட ஓர் ஆற்றல் உள்ளது என்ற நம்பிக்கை மற்றும் அச்சத்தின் அடிப்படையில் உருவான தொல் சமயம், ஆகம விதிமுறைக்குட்பட்ட சடங்குகள், புராணங்கள், கோட்பாடுகள் ஆகியனவற்றின் தாக்குதலால் சிதைந்து போனது., இச்சிதைவின் மேல் வேதநெறிகளை உள்வாங்கிக் கொண்ட சைவமும், வைணவமும் தம்மை நிலைநிறுத்திக் கொண்டன.*

*மொத்தத்தில், தொல்சமயத்தைச் சைவமும் வைணவமும் புறந்தள்ளின. என்றாலும், முற்றிலும் அதை அழித்தொழிக்க அவற்றால் இயலவில்லை. ஆங்காங்கே தொல்சமயத்தின் எச்சம் போன்று நாட்டார் தெய்வ வழிபாடு நிலவியது. அரசின் மதம் என்று சொல்லத்தக்க அளவில் சைவம் ஏற்றம் பெற்றிருந்த பிற்காலச் சோழப் பேரரசின் காலத்தில்கூட பிடாரி, அய்யனார் போன்ற நாட்டார் தெய்வங்களைப் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டின்*

*தொடக்கத்தில் எழுதப்பட்ட முதல் இராசேந்திரச் சோழனின் கரந்தைச் செப்பேட்டில் (கி.பி 1020) 'பிடாரி', 'அய்யனார்' என்ற இரு நாட்டார் தெய்வங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன (கோவிந்தராசன் 1984: 54-57, 59, 31, 63, 67-70, 115).*

*சைவமும், வைணவமும் வலுவான நிறுவனச் சமயங்களாகத் தம்மை நிலைநிறுத்திக் கொண்டு, இறந்தோர் மற்றும் மூத்தோர் வழிபாட்டை உள்ளடக்கிய தொல்சமயத்தைச் சிதைப்பதில் வெற்றி கண்டன. என்றாலும், அதை வேருடன் அழிப்பதில் வெற்றி காண முடியவில்லை; அதன் எச்சங்கள் அடித்தள மக்களின் சமய வாழ்வில் இடம்பெற்றிருந்தன. இது குறித்து அடுத்துக் காண்போம்.*

**தொல்சமய எச்சங்களும் நாட்டார் சமயமும்:**

*சைவம் மற்றும் வேத சமயத்தின் பரவலால் தமிழர்தம் தொல்சமயமும் சிதைந்து போனது. ஆயினும், அதன் எச்சங்கள் இன்றும் கூட தமிழக நாட்டார் சமயத்தில் இடம்பெற்றுள்ளன. பெரும்பாலான தமிழக அடித்தள மக்களின் சமய வாழ்வு இரட்டைத்தன்மையுடையதாக அமைந்துள்ளது. ஒரு பக்கம் நிறுவனச் சமயங்களான சைவம், வைணவம் ஆகிய சமயங்களில் ஒன்றைப் பின்பற்றுவோராக விளங்குகின்றனர். இதன் அடிப்படையில் ஆகம விதிப்படி அமைந்த கோவில்களை வழி படுவதையும், ஆகமநெறிகளை ஏற்றுக் கொள்வதையும் தம் சமய வாழ்வில் ஒரு பகுதியாகக் கொண்டுள்ளனர். மற்றொரு பக்கம் சைவ, வைணவ சமய எல்லைக்குள் வராத, ஆகம நெறிக்குட்படாத கடவுளர்களை வணங்கி வருகின்றனர்.*

*குல தெய்வம், கிராம தெய்வம், ஊர்த் தெய்வம் என்ற பெயர்களில் அழைக்கப் படும் நாட்டார் தெய்வங்கள் பல்வேறு வடிவங்களில் அமைந்துள்ளன. மனித தோற்றம் கொண்டவை, பீட வடிவில் உள்ளவை, கல்லாக அமைந்தவை, விலங்கு முகமும் மனித உடலும் கொண்டவை என இவற்றின் தோற்றங்கள் பல தரத்தன. சில போழ்து மரங்களும் தெய்வமாக வணங்கப்படுகின்றன.*

*முதலில் குறிப்பிட்ட நிறுவனச் சமயத் தெய்வங்களைவிட வாழ்க்கை வட்டச் சடங்குகளில், இரண்டாவதாகக் குறிப்பிட்ட தெய்வங்களே சிறப்பிடம் பெறுகின்றன. சான்றாக, திருமணத்திற்கு அச்சடிக்கும் திருமண அழைப்பிதழின் முதல்படியை குலதெய்வத்தின் முன்வைத்து வணங்குவர். திருமணமான பின், புது மணப்பெண், குல தெய்வத்தின் அல்லது ஊர்த்தெய்வத்தின் முன் பொங்கலிடுவார். இவ்விரு வழிபாட்டு முறைகளை ஒரு சேர மேற்கொள்வதன் அடிப்படையிலேயே இரட்டைச் சமய வாழ்க்கை என்கிறோம்.*

*இரண்டாவதாக அமையும் சமயநெறியை "வெகுசன இந்துத்துவம்" (Popular Indhuism) என்ற சொல்லால் ஸ்டுவர்ட் பிளாக் பேர்ன் என்ற அமெரிக்க நாட்டார் வழக்காற்றியலாளர் குறிப்பிடுவார். ஐரோப்பிய நாடுகளில் கிறித்தவத் திருச்சபையின் வரையறைக்குள் அடங்காது, பின்பற்றப்படும் கிறித்தவத்தை, வெகுசனக் கிறித்தவம் என்ற சொல்லால் குறிப்பர். கிறித்தவம் என்ற நிறுவனச் சமய எல்லைக்குள்ளிருந்து*

*கிளைத்த ஒரு வழிபாட்டு மரபை, வெகுசனக் கிறித்தவம் என்று அழைப்பது பொருத்தமானதே.*

*ஆனால் தமிழ்நாட்டைப் பொருத்த அளவில் மேலே குறிப்பிட்ட குலதெய்வம் கிராமதெய்வம், குறிப்பிட்ட சாதிகளின் தெய்வங்கள் என்பன சைவ, வைணவ தெய்வங்களுடன் ஒட்டும், உறவும் இல்லாதவை. இத்தகைய தெய்வங்கள் சிலவற்றை வழிபடுவோர் மேற்கொண்ட பிராமணியத் தழுவலின் விளைவாக சிவன், திருமால், பார்வதி, இலக்குமி ஆகிய தெய்வங்களுடன் இன்று தொடர்புபடுத்தப்பட்டுள்ளனர் என்பது தான் உண்மை. அப்படியானால் இத்தெய்வங்களை என்ன பெயரிட்டு அழைக்கலாம் என்ற வினா எழுகிறது. இதற்கு விடையாக இவற்றை நாட்டார் தெய்வங்கள் என்று அழைப்பது பொருத்தமானது என்று கூறலாம். நாட்டார் (Folk) என்ற சொல்லுக்கு ஆலன் டண்டிஸ் என்ற நாட்டார் வழக்காற்றியலாளர் தரும் வரையறையின்படி, ஒரு குறிப்பிட்ட குடும்பம், குறிப்பிட்ட தொழில் செய்வோர், குறிப்பிட்ட ஊரினர் ஒரு நாட்டார் குழுவாக (Flok Group) அமைகின்றனர். தமிழ் நாட்டைப் பொருத்த அளவில் இவற்றுடன் சாதி என்பதும், ஓர் அடையாளமாக அமைகிறது.*

*இவ்வாறு ஒரு குறிப்பிட்ட நாட்டார் குழுவால் வணங்கப்படும் நாட்டார் தெய்வ வழிபாட்டில் இடம்பெறும் தெய்வங்கள் மனிதர்களாக வாழ்ந்து, இறந்து போன மனிதர்கள்தான், இவ்வகையில் இது தொல்சமயத்தின் இறந்தோர் வழிபாட்டை நினைவூட்டுகிறது. மேலும் இக்கடவுளர்களில் பெரும்பாலோர் கொலையுண்டு இறந்த மனிதர்களே.*

*கொலையுண்ட இறந்தோரை மையமாகக் கொண்ட நாட்டார் சமயத்தில் பின்வரும் மூன்று முக்கிய கூறுகள் இடம்பெறுகின்றன. அவை: 1. உயிர்ப்பலி, 2. மதுப் படையல், 3. சாமியாட்டம். இவை குறித்துத் தனித்தனியாக விரிவாக ஆராய்வோம்.*

***உயிர்ப்பலி:***

*மறி அறுத்து முருகனுக்குப் பலிப் பொருளாகக் கொடுத்து வணங்கிய செய்தியை முன்னர் குறித்தோம். வேப்ப மரத்தில் தெய்வம் உறைவதாக நம்பி அதற்குப் பசு மாட்டினைப் பலியாகக் கொடுத்து வணங்கியதையும் முன்னர் கண்டோம். ஆனால், ஆகம விதிகளுக்குட்பட்ட சைவ, வைணவக் கோவில்களில் உயிர்ப்பலி என்பது விலக்கப்பட்ட ஒன்றாகும். ஆனால் நாட்டார் தெய்வக் கோவில் விழாக்களில் ஆடு, கோழி, பன்றி என்பன உயிர்ப்பலியாகக் கொடுக்கப்படுகின்றன. சில கோவில்களில் எருமை மாடும் கூட பலிப்பொருளாக அமைகின்றது.*

***படையற் பொருளாக மது:***

*மது, சங்ககாலத் தமிழர்களின் சமூக வாழ்வில் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. இதன் அடிப்படையில் தெய்வங்களுக்கும், மதுவைப் படைத்து வழிபட்டுள்ளனர், ஆனால் சங்க காலத்திற்குப் பின் வலுவாகத் தம்மை நிலைநிறுத்திக்*

*கொண்ட சைவமும், வைணவமும் தம் வழிபாட்டில் விலக்கப்பட்ட ஒரு பொருளாக மதுவை நோக்கின.*

*தமிழக நாட்டார் சமயத்திலோ, படையல், பொருட்களில் ஒன்றாக மதுவும் இடம்பெறுகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக, தமிழகத்தின் தென்மாவட்டங்களின் நாட்டார் கோவில் திருவிழாக்களில் - குறிப்பாக, பெண் தெய்வக் கோவில்களில் 'மதுவூட்டு', 'மதுக் கொடை' என்ற பெயர்களில் மது தயாரித்துப் படைக்கும் சடங்கு இன்று வரை நடந்து வருகிறது. சங்க இலக்கியங்களில் அரிசியிலிருந்து மது தயாரிக்கும் செய்தி இடம்பெற்றுள்ளது. இவ்வாறு தயாரிக்கப்பட்ட அரிசிக் கள்ளை, ''தோப்பிக் கள்'' என்று குறிப்பிடும் சங்க இலக்கியம், அதை நடுகல் வீரனுக்குப் படையலாகப் படைத்து வழிபடுவதைக் குறிப்பிடுகிறது. இவ்வாறு சங்க இலக்கியம் குறிப்பிடும் அரிசிக் கள் இன்றும் ஒரு படையல் பொருளாக நாட்டார் தெய்வக் கோவில்களில் தயாரிக்கப்படுவது குறிப்பிடத்தக்க ஒன்று.*

***சாமியாட்டம்:***

*நாட்டார் தெய்வக் கோவில் விழாக்களில் வழிபடுவோர் அனைவரும் ஆர்வத்துடனும், பக்தியுடனும் எதிர்பார்க்கும் ஒரு முக்கிய நிகழ்வு சாமியாட்டம் ஆகும். இந்நிகழ்வின் போது சாமியாடி, கோமரத்தாடி, பூசாரி என்போரில் ஒருவர் மீது குறிப்பிட்ட தெய்வத்தின் ஆவி இறங்கும் என்பதே சாமியாட்டம் நிகழ்வு குறித்த அடிப்படை நம்பிக்கையாகும். இந்நிகழ்வு, சங்க இலக்கியத்தில் இடம்பெறும் 'வெறியாட்டு' நிகழ்வை நினைவூட்டுவதாக அமைகின்றது.*

***கொலையில் உதித்த தெய்வங்கள்:***

*நாட்டார் தெய்வங்களில் மிகப் பெரும்பாலான தெய்வங்கள் கொலையுண்டு, இறந்த மனிதர்களை மையமாகக் கொண்டு உருவானவை. கொலையுண்ட தனிமனிதர்கள் அனைவரும் வழிபாட்டிற்குரிய கடவுளர்களாக ஏற்றுக் கொள்ளப் படுவதில்லை. கடவுளர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டவர்கள் கொலையுண்டதற்குக் காரணங்களாகப் பின்வருவன அமைகின்றன.*

1. *நிலப்பிரபுத்துவ மற்றும் அதிகார வர்க்கச் சக்திகளின் பகைமை*
2. *பிறரின் பொறாமையுணர்வு*
3. *மூட நம்பிக்கை (நரபலி போன்றவை)*
4. *குடும்பப் பிரச்சினைகள் (மண உறவு - சொத்துரிமை - முறையற்ற பாலுறவு) தோற்றுவிக்கும் பகைமையுணர்வு)*
5. *நேரடியான போரில் ஈடுபட்டமை*
6. *வாழ்க்கைப் பிரச்சினையினால் சில தவறுகள் அல்லது குற்றங்களைப் புரிதல்*
7. *கொள்ளையர், காமுகர் ஆகியோரிடமிருந்து பிறரைக் காக்கும் முயற்சியினை மேற்கொண்டமை*
8. *சாதி மீறிய காதல்*

இக்காரணங்கள் அனைத்தும் இறுதியானவை அல்ல. கள ஆய்வில் இவையல்லாத வேறு காரணங்களும் கிட்டும் வாய்ப்புண்டு.

சங்க காலத்தில் ஆநிரை கவரச் சென்ற வீரர்களும், பகைவர் கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்கச் சென்ற வீரர்களும், பகை நாட்டின் மீது போர் தொடுத்தபோது போர்க்களத்தில் நேருக்கு நேர் போரிட்டு மாண்ட வீரர்களும் நடுகல் தெய்வமாயினர். நிகழ்வுகளில் மாற்றம் இருந்தாலும், இறந்தோர் வழிபாடு என்ற வழிபாட்டு மரபிற்குள் இவர்கள் அடங்குகின்றனர். இதன் அடிப்படையில் சங்ககால இறந்தோர் வழிபாட்டு மரபின் தொடர்ச்சியாகப் பெரும்பாலான நாட்டார் தெய்வங்கள் காட்சியளிக்கின்றன என்பதில் ஐயமில்லை.

**தமிழ் இஸ்லாமியர்களின் தர்கா:**

இஸ்லாமியர் ஏக இறைக் கொள்கையுடையவர்கள். இறந்தோரைப் போற்றுதலை - இஸ்லாம் ஏற்றுக்கொள்வதில்லை. இதனால் கல்லறை கட்டுவதைக்கூட அது ஆதரிப்பதில்லை. ஆனால் அவுலியாக்கள் எனப்படும் இறை அடியார்களின் அடக்கத் தலம் மரியாதைக்குரியதாகக் கருதப்படுகிறது. அவுலியாக்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் கபுர்ஸ்தான் என்ற அடக்கக் குழியின் மீது கல்லறை போன்ற அமைப்பை உருவாக்குகின்றனர். இதைப் பச்சைப் போர்வையால் போர்த்தி, மலர்களால் அலங்கரிப்பர். இஸ்லாமிய மகான்கள் அடக்கம் செய்யப்பட்ட இடம் தர்க்கா என்று அழைக்கப்படுகிறது.

தர்காவிற்கு இஸ்லாமியர்கள் மட்டுமின்றி இந்துக்களும் செல்வது இன்றும் வழக்கமாகவுள்ளது. தர்காவிற்குச் செல்லும் இஸ்லாமியர்கள் மகானின் கல்லறையைத் தொழுவதில்லை. அவ்வாறு தொழுவது மார்க்க விரோதம் ஆகும். கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டுள்ள அவுலியா தம் வாழ்நாளில் செய்த பாவங்களை மன்னிக்கும்படி இறைவனிடம் வேண்டுவர்.

ஆனால் இந்துக்கள் அவுலியாவை, தெய்வமாகவே வணங்குவர். உயிர்ப்பலி தருவதும் உண்டு. தமிழக தர்க்காக்களில் அடக்கம் செய்யப்பட்டவர்களில் அரேபிய இஸ்லாமியர்களும் உண்டு. அவுலியாக்களில் சிலர் கொலையுண்டு இறந்தவர்கள். தமிழக நாட்டார் சமயத்தின் தாக்கம் தர்க்கா வழிபாட்டில் இடம் பெற்றுள்ளது.

**தமிழ்க் கிறித்தவத்தில் இறந்தோர் வழிபாடு:**

மேற்கூறிய சங்ககால மரபின் தாக்கம் தமிழ்க் கிறித்தவத்திலும் ஊடுருவிச் செல்கின்றது. கிறித்தவம் ஏக இறைவன் மீது நம்பிக்கையைக் கொண்டது. இதன் அடிப்படையில் வேறு வழிபாடுகளுக்கு அச்சமயத்தில் இடமில்லை. அவ்வாறு வழிபடுவது அதன் இறையியல் கோட்பாடுகளுக்கு முரண்பாடானது.

இந்நிலையில், தமிழ்க் கத்தோலிக்கர்கள் தம்மிடையே பணியாற்றிய துறவிகள், துறவினிகள், குருக்கள் ஆகியோரில், பணியால் தம்மை மிகவும் கவர்ந்தோரின்

கல்லறைகளைப் புனிதத் தலமாகக் கருதி அவற்றிற்குப் படையல் படைத்துச் சிறப்பு செய்கின்றனர். அவர்களின் கல்லறைகளைச் சுற்றிக் கருவறை போன்ற அமைப்பை உருவாக்குவதும் உண்டு.

கிராமப்புறக் கத்தோலிக்கர்கள் தம் வீட்டில் கன்றை ஈன்ற பசு கறக்கும் முதற்பாலைக் கல்லறையின் மீது ஊற்றிச் சிறப்பு செய்வர். இதைப் போன்று வேளாண்மையில் முதல் அறுவடையில் கிட்டும் தானியத்தின் ஒரு சிறு பகுதியைக் காணிக்கையாக வைப்பர். காய்கறிகள் விளைவித்தால் முதன் முதலில் பறிக்கும் காய்கறிகளில் ஒரு சிறு பகுதியைக் கல்லறை முன் காணிக்கையாக வைப்பர்.

கல்லறையில் அடங்கியிருக்கும் துறவியோ, துறவினியோ சில இடர்ப்பாடுகளிலிருந்து காப்பாற்றுவர், தம் தொழிலில் ஆதாயம் கிட்டும்படி செய்வர் என்ற நம்பிக்கையே இச்செயல்களுக்குக் காரணமாகும். மேலும் எண்ணெய், பால் ஆகியனவற்றைக் கல்லறையின் மீது ஊற்றி, பின் வழித்து எடுத்துப் பருகினால் நோய்கள் குணமாகும் என்ற நம்பிக்கையுள்ளது. தாம் வாழும் ஊரிலிருந்து தொலைவில் உள்ள இத்தகைய கல்லறைகளுக்கு வருவோர் கல்லறையின் மீது ஊற்றி வழித்தெடுத்த எண்ணெயைக் குப்பியில் சேகரித்து வீட்டிற்குக் கொண்டு செல்வர். ஒரு புனிதப் பொருளாகக் குப்பிகளிலுள்ள எண்ணெய் கருதப்படுகிறது.

நெல்லை மாவட்டத்திலுள்ள உவரி என்ற கடற்கரைக் கிராமத்தில் கப்பல் மாதா கோவில் என்ற பெயரில், தேவாலயம் ஒன்று கடற்கரையில் உள்ளது. இதன் அருகில் ‘‘மரியாயின் ஊழியர் சபை’’ என்ற துறவினி அமைப்பைச் சார்ந்த பெண் துறவி ஒருவரின் கல்லறை உள்ளது. வெயில், உப்புக் காற்று, மழைநீர் படிதல் ஆகியன வற்றின் விளைவாகக் கல்லறை எழுத்துக்கள் அழிந்துவிட்டன. எனவே அவரைக் குறித்து தெளிவான செய்தி எதையும் அறிய இயலவில்லை . ஊர் மக்கள் நாடார் கன்னியாஸ்திரி என்று அழைக்கின்றனர். இக்கல்லறையின் மீது எண்ணெயை ஊற்றி அதை வழித்தெடுத்து மீன்பிடி வலையில் தெளித்தால் நல்ல மீன்பாடு கிடைக்கும் என்ற நம்பிக்கை இன்றும் உள்ளது. பேறு காலம் நன்றாக அமைய இவ்வாறு வழித்தெடுக்கும் எண்ணெயைக் கருவுற்ற பெண்ணின் வயிற்றில் தடவும் பழக்கமும் உள்ளது.

இவ்வாறு சமயப் பணியாளர்கள் மட்டுமின்றி சராசரிக் கத்தோலிக்கர்கள் சிலரின் கல்லறைகள் கூட சிறப்புக்குரியனவாக அமைவதுமுண்டு. எடுத்துக்காட்டாக, திருத்துறைப் பூண்டியிலிருந்து பட்டுக்கோட்டைச் செல்லும் சாலையிலுள்ள நெடும்பழம் என்ற கிராமத்திலுள்ள மரித்தியம்மாள் கல்லறைக் கோயில் என்ற சிற்றாலயத்தைக் குறிப்பிடலாம்.

இங்கு மரித்தியம்மாள் என்ற பெண் அடக்கம் செய்யப்பட்டுள்ளார். இவர் வாயிலாக ஆண்டவரிடம் வேண்டிக் கொண்டால் வேண்டுதல்கள் நிறைவேறும் என்ற நம்பிக்கை சுற்று வட்டாரத்தில் கத்தோலிக்கர்கள் மட்டுமின்றி இந்துக்களிடமும்

*உள்ளது. வேண்டுதலின் அடிப்படையில் ''திருயாத்திரை'' என்ற பெயரில் கால் நடையாக நடந்து வந்து வழிபாடு நிகழ்த்தும் பழக்கமும் உள்ளது.*

*தமிழகத்தில் உருவான இரு முக்கிய நிறுவனச் சமயங்களான சைவம், வைணவம் இரண்டிலும் படையல் பொருட்கள் தொடர்பாக இறுக்கமான விதிமுறைகள் உள்ளன. வடமொழி ஆகம விதிகளையொட்டி இவை உருவாகியுள்ளன. இவ்வகையில் தானியங்கள் கருவறையினுள்ளோ அதன் முன்போ படையலாகப் படைக்கப் படுவதில்லை. அதே நேரத்தில் முதல் விளைச்சலை மட்டுமின்றி, பொதுவாகத் தம் வயலில் விளைந்த தானியங்களையும் காணிக்கையாகச் செலுத்தும் வழக்கம் வேறு வடிவில் உள்ளது. கோவில் கருவறைக்கு எதிரில் உள்ள முன் மண்டபத்தில் தானியங்களைக் கொட்டிவிடுகின்றனர். இவற்றைக் கோவில் நிர்வாகம் சேகரித்துப் பாதுகாக்கிறது. ஒரு குறிப்பிட்ட அளவு சேர்ந்ததும் அது ஏலமுறையில் விற்பனை செய்யப்பட்டுவிடுகிறது, இது போன்றே ஆடு, கோழி, மாடு ஆகியன கோவிலுக்கு வெளியே கட்டப்படுகின்றன. இவையும் ஏலத்தில் விடப்பட்டுப் பணமாக்கப் படுகின்றன.*

*ஆனால், நாட்டார் தெய்வக் கோவில்களில் இன்றும் கடவுளின் சிலை அல்லது பீடத்தின் முன் தானியங்கள் குவிக்கப்படுகின்றன. விலங்குகள் உயிர்ப்பலியாகத் தரப்படுகின்றன. மேலும் தமிழ்நாட்டின் அய்ரோப்பிய சமயமான கத்தோலிக்கத்திலும் இம்முறை இடம் பெற்றுள்ளது. தமிழகக் கத்தோலிக்கர்கள் தம் விளைச்சலின் முதற்பலனைக் கத்தோலிக்கப் புனிதர் முன் படைக்கின்றனர். புனிதர்கள் பெயரால் அமைந்த தேவாலய வளாகத்தில் உயிர்ப்பலி தருகின்றனர். இவையெல்லாம் சங்ககாலச் சமூகத்தில் வழக்கிலிருந்த தொல்சமயத்தின் எச்சம் என்று கூறுவது பொருத்தமானதே.*

***தொடரும் சொல்லாட்சிகள்:***

*தொல்சமய வழிபாட்டுடன் தொடர்புடைய சங்க இலக்கியச் சொல்லாட்சிகள் இன்றும்கூட நாட்டார் சமயச் சடங்குகளிலும், இறப்புச் சடங்குகளிலும் அதே பொருளில் தொடர்கின்றன.*

*போர்க்கருவிகளால் தாக்குண்டு இறந்து போனோரை 'பட்டான்' என்று புறநானூறு (277:3, 307, 279) குறிப்பிடுவதை தொல்சமயத்தைப் பற்றி ஆராய்ந்தபோது கண்டோம். போர்க்களத்தில் இறந்தவன் 'படுமகன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளான் (புறநா 278:8).*

*'பட்டான்' என்ற சொல்லால் போர்க்கள மரணத்தைக் குறிக்கும் கல்வெட்டுத் தொடர்களும், அக்கல்வெட்டுக்களின் காலம் குறித்த செய்திகளும் வருமாறு; எறிந்து பட்டான் (கி.பி ஐந்தாம் நூற்றாண்டு), தொறு கொண்ட ஞான்று பட்டான் (சிம்ம வர்ம பல்லவனின் இருபதாம் ஆட்சியாண்டு), பெருங்குளத்தூரு பட்டார் (சிம்மவர்மனின் ஐந்தாவது ஆட்சியாண்டு), பூசலுட் பட்ட (கி.பி 560), தொறுக் கொண்ட ஞான்று*

*சேடாரு மக்கள் கட்டி எறிந்து பட்டான் (கி.பி 574), அச்சுர பாநில் பட்டார் (கி.பி. 594), பொருத ஞான்று பட்டான் (கி.பி 595), பூசலில் பட்டான் (கி.பி ஏழாம் நூற்றாண்டு), தொறுக்கொளிற் பட்டார் (இரண்டாம் நரசிம்மனின் பத்தாம் ஆட்சியாண்டு), தொறு இடுவித்து தாசமாரியார் பட்டார் (கி.பி 703), தொறு மீட்டுப் பட்டார் (கி.பி. 703), மறித்தொறு கொண்ட ஞான்று பட்டார் (கி.பி. 710).*

*பல்லவர் காலத்தையடுத்த சோழர்காலத்திலும் பட்டான் என்ற சொல்லாட்சி கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ளது. பொன்னைத் தொறுவிய ஞான்று பட்டான் (கி.பி. 910), பட்டான் தோவிடன் (கி.பி. 968), தொறுமீட்டுப் பட்டான் (கி.பி. 998), தொறுக் கொள்ள மீட்டுப் பட்டான் (கி.பி. 10 ஆம் நூற்றாண்டு), தொறு இட்டுப் பட்டான் (கி.பி 11 ஆம் நூற்றாண்டு).*

*கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள ஆரல்வாய்மொழியில் கிடைத்த எட்டாம் நூற்றாண்டின் இறுதிக்காலத்துப் (கி.பி 792) பாண்டியர் கல்வெட்டில் போர்க்களத்தில் பலரும் இறந்து போனது, 'பலரும் பட்ட இடத்து' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதே கல்வெட்டில் பாண்டிய மன்னனின் படைத் தளபதியான இரணகீர்த்தி என்பான் போரில் இறந்த செய்தி 'பலரோடுங் குத்திப் பட்ட பின்'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

*பட்டான் என்ற சொல்லாட்சி சங்க காலத்துக்குப் பின்னரும் தொடர்ந்துள்ளதை இக் கல்வெட்டுக்கள் வாயிலாக அறிய முடிகிறது. கொலையுண்டு தெய்வமாக்கப் பட்டோரை வழிபடும் நாட்டார் தெய்வக் கோவில்களில் 'பட்டவன்' என்ற சொல்லாட்சி 'பட்டபிரான்', பட்டவராயன், பட்டமுத்து என்ற பெயர்களில் இடம்பெற்றுள்ளது.*

*தமிழகத்தின் சிற்சில பகுதிகளை ஆண்டு வந்த பாணர் மரபினரின் தர்மபுரிக் கல்வெட்டு (தெ.இ.க. VII : 1581) ''போரிற் துஞ்சின பின்னை '' என்று போர்க்கள இறப்பை குறிப்பிட்டுள்ளது. இதனைச் சங்க காலத்திற்குப் பிந்தைய வழக்காகக் கொள்ளலாம்.*

***ஆய்வு முடிவுகள்:***

*இது வரை ஆராய்ந்த செய்திகளின் அடிப்படையில் பின்வரும் முடிவுகளுக்கு வரமுடிகிறது. தொல்சமயம் குறித்து விளக்கம் தரும் மானிடவியலர்கள் அதன் முக்கிய கூறுகளாக இறந்தோர் மற்றும் மூத்தோர் வழிபாடு; உயிர்ப்பலி; புனிதம், புனிதமற்றவை என்று இன்று நாம் பாகுபடுத்துவது போலன்றி இறைச்சிகள் ஆகியனவற்றைப் படையல்களாகப் படைத்து வழிபடல்; ஒரு குறிப்பிட்ட தெய்வத்தின் ஆவி, ஒரு குறிப்பிட்ட மனிதனின் மீது இறங்கும் என்று நம்புதல்; இவையனைத்தையும் இணைக்கும் சரடாக ஆவி என்ற கண்ணுக்குப் புலனாகாத ஒரு பொருள் குறித்த நம்பிக்கை முதலானவற்றைக் குறித்துள்ளனர். இவ்வாறான தொல்சமயம் பண்டைய தமிழகத்தில் நிலவியது.*

| தமிழரின் தொல்சமயம் | நிறுவன சமயம் (சைவம்-வைணவம்) | தமிழக நாட்டார் சமயம் |
|---|---|---|
| 1 இறந்தவரும் மூதாதையரும் வழிபாட்டிற்குரியவர்கள். | வழிபாட்டிற்குரியவர்கள் அல்லர். | வழிபாட்டிற்குரியவர்கள். |
| 2 இறந்தோரின் ஆவியைக் கல்லில் நிலை நிறுத்த முடியும் என்ற நம்பிக்கை உண்டு. | எல்லாம் வல்ல தெய்வத்தின் ஆற்றலை மட்டுமே நிலை நிறுத்த முடியும் என்ற நம்பிக்கையுண்டு. | இறந்தோரின் ஆவியை நிலைநிறுத்தி வழிபட வெறும் கற்கள், மண் அல்லது சாந்தினால் கட்டப்பட்ட பீடங்கள், சிலைகள் ஆகியன உண்டு. |
| 3 வழிபாட்டிற்குரிய கல்லை நிலைநிறுத்த ஆகம விதிகள் கிடையாது. சில படிநிலைகளே உண்டு | ஆகம விதிகளின் அடிப் படையிலேயே சிலைகள் நிறுவப்படும். | ஆகம விதிகள் கிடையாது. |
| 4 வழிபாட்டிற்குரிய கல்லை நிலைநிறுத்தக் கட்டிடங்கள் கிடையாது. திறந்த வெளியில் இருக்கும். | ஆகம விதிகளின் படி கட்டப்பட்ட கோவில் என்ற அமைப்பிலேயே வழிபாட்டிற்குரிய சிலைகள் நிறுவப்படும். | கட்டிடங்கள் வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. திறந்த வெளியிலும் நிறுவப்படலாம், கட்டிடங்களுக்குள்ளும் நிறுவப்படலாம். |
| 5 மனிதஉருவம் பெற்றும், பெறாமலும் வழிபாட்டிற்குரிய சிலையிருக்கலாம். தாவரம், விலங்கு ஆகியனவாகவும் இருக்கலாம். | பெரும்பாலும் மனிதத் தோற்றம் பெற்றே இருக்கும். மனித உருவம் இல்லாத உருவங்களும் வரையறுக்கப் பட்ட வடிவிலேயே அமையும் (சான்றாக சிவலிங்கம்). விலங்கு முகமும் மனித உருவம் கொண்டும் அமையலாம் (சான்றாக நரசிம்மர்). | மனித உருவத் தோற்றம் பெற்றும் பெறாமலும் இருக்கலாம். விலங்கு முகமும் மனித உடலும் கொண்டும் அமையலாம். (சான்றாக கொம்பு மாடசாமி கரடி மாடசாமி). |
| 6 நிறுவப்படும் தெய்வங்களை மையமாகக் கொண்ட எழுத்து வடிவிலான நூல்கள் கிடையாது. | எழுத்து வடிவிலான புராணங்கள், இலக்கியங்கள் உண்டு. | வாய் மொழிக் கதைகளும் அவற்றை மையமாகக் கொண்டு உருவான நாட்டார் நிகழ்த்துக் கலைகளுக்குரிய எழுத்து வடிவிலான பனுவல் களுமுண்டு (சான்றாக வில்லுப் பாட்டுப் பனுவல்கள்). |
| 7 புனித நூல்கள் எவையும் கிடையாது. | புனித நூல்கள் உண்டு. | புனித நூல்கள் கிடையாது |
| 8 தெய்வத்திற்குப் படைக்கும் படையல் பொருட்கள் தொடர்பாகக் கட்டுப்பாடுகள் இல்லை. | கட்டுப்பாடுகள் உண்டு. | கட்டுப்பாடுகள் இல்லை. |
| 9 விலங்கு உயிர்ப்பலி உண்டு. | விலங்கு உயிர்ப்பலி கிடையாது. | விலங்கு உயிர்ப்பலி உண்டு |
| 10 தெய்வத்தின் ஆவி மனிதனின் மீது இறங்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் ஆவி இறங்கல் நிகழ்வு உண்டு. | ஆவிஇறங்கல் கிடையாது ஆவியிறங்கியதாகச் சிலர் கூறினாலும் அதை ஊக்குவிப்பது கிடையாது. | சாமியாட்டம், அருள் வருதல் என்ற பெயரில் ஆவியிறங்கல் நிகழும். இது வரவேற்கப்படும். |

இனக்குழு வாழ்க்கை சிதைந்து, பேரரசு உருவான பின்னர், உருவான நிறுவன சமயங்கள் தொல் சமயத்தில் சில கூறுகளை உள்வாங்கிக் கொண்டன. ஆனால் அவற்றைத் தம் சமயநெறிகளுக்கேற்ப மாற்றியமைத்துக் கொண்டன. சான்றாக இறந்தோர் வழிபாடு, சமய அடியார் வழிபாடாகவும், மன்னர் வழிபாடாகவும் மாற்றம் பெற்றன. அதே நேரத்தில் உயிர்ப்பலி, இறைச்சி, கள் ஆகியனவற்றை விலக்கப்பட்ட பொருளாகத் தள்ளி வைத்தனர். இதுபோன்றே வெறியாட்டும் விலக்கப்பட்ட ஒன்றாக மாறியது. இறந்த மனிதர்கள் மற்றும் முன்னோர்கள் தெய்வமாகக் கருதப்பட்ட நிலை மாறி, புராண வீரர்கள் தெய்வங்களாக்கப்பட்டனர்.

நிறுவனச் சமயங்களில் காணப்படும் இம்மாறுதல்களுக்கு மாறாகத் தமிழக நாட்டார் சமயமானது தமிழரின் தொல்சமயத்தின் அடிப்படைக் கூறுகளான இறந்தோர் வழிபாடு, உயிர்ப்பலி, இறைச்சி, கள் ஆகியனவற்றைப் படையல்களாகப் படைத்தல், வெறியாட்டு என்பனவற்றை இன்றும் தக்க வைத்துக் கொண்டுள்ளது. இவ்வுண்மையை, இணைக்கப்பட்டுள்ள அட்டவணை மூலம் உணரலாம்.

இன்று நிகழும் "இந்து" என்ற பெரும் அடையாளத்தை உருவாக்கும் முயற்சியில் ஈடுபடுவோர் நாட்டார் சமயநெறி பேணி வரும் இம்மரபுகளை அழித்துவிட்டு வேதநெறி சார்ந்த ஒற்றை அடையாளத்தை உருவாக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். இது வெற்றி பெற்றால் தமிழரின் தொல்சமயத்தின் அடிப்படைக் கூறுகள் முற்றிலும் துடைத்தழிக்கப்பட்டு, மரபின் தொடர்ச்சியற்ற ஒன்றாகத் தமிழர் சமய வாழ்வு மாற்றமடையக் கூடும். இம்மாற்றம் சமய வாழ்வோடு நிற்காமல் தமிழர்களின் ஒட்டுமொத்த வாழ்க்கைக் கோலச் சிதைவாகவும்கூட போகலாம்.

**துணைநூற் பட்டியல்:**

*கணேசன் பொன்., 2001: என்னை நன்றாக இறைவன் படைத்தான், திருமந்திரம் உரைநடை*
*கோபாலய்யர் (ப.ஆ-) 1934, தேவாரம் - பண்முறை, புதுச்சேரி.*
*கோவிந்தராசன் சி, 1994, கரந்தைச் செப்பேட்டுத் தொகுதி, மதுரை : காமராசர் பல்கலைக்கழகம்.*
*சிவசுப்பிரமணியன் ஆ., 2007: 'சைவம் உறிஞ்சிய முன்னோர் வழிபாடு', கோபுரத் தற்கொலைகள். பாண்டுரங்கன் அ. 2008, தொகை இயல், புதுச்சேரி.*
*மற்றும் சங்க இலக்கியங்கள், கல்வெட்டித் தொகுப்புகள்.*

*நன்றி: புதிய ஆராய்ச்சி – இதழ்: 9 – 2018*

## 22. 'நந்தனார்' - 18-19-ஆம் நூற்றாண்டுக்கால சமூகப் பதிவு

*— ஆறு.அன்புஅரசன்*

*'செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்திநாயனாரின் 'திருத் தொண்டத் தொகையில்' கூறப்பட்டுள்ளதை ஆதார மாகக் கொண்டும், நம்பியாண்டார் நம்பி நல்கிய திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் நூலினை முதல் நூலாகக் கொண்டும் வழிநூலாகச் சேக்கிழார் பெரிய புராணம் இயற்றினார் என்பதே ஆய்வாளர்கள் கருத்து.*

*மேற்கண்ட இரண்டிலும் நந்தனார் பற்றிய கதை இடம்பெறவில்லை. சுந்தரமூர்த்தி நாயனார், நம்பியாண்டார்நம்பி இருவரும் நந்தனார் பற்றிய குறிப்பு மட்டும் கொடுத்தார்களே அன்றி வாழ்க்கை வரலாற்றைக் கொடுக்கவில்லை. சேக்கிழார் நந்தனாரின் பெயரை மட்டுமே கொண்டு கதை புனைந்துள்ளார். எனவே, இது ஒரு கற்பனைக் கதை என்று சிலர் வாதிடுவர்.*

*சுந்தரமூர்த்தி நாயனார் காலத்திற்கு முன்பிருந்தே நந்தனார் கதை தமிழகத்தில் நிலவி வந்துள்ளது என்பதை யாவரும் மறுப்பதற்கில்லை. உபமன்னிய முனிவர் எழுதிய பக்த விலாசத்திலும் நந்தனார் கதை பேசப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். எனவே முற்றிலும் கற்பனையான கதை தொடர்ந்து மக்களால் தாங்கி வந்திருக்க வாய்ப் பில்லை. எனவே, இக்கதையில் ஒரு சிறிதேனும் உண்மை இருந்திருக்க வேண்டும்.*

*சுந்தரமூர்த்தி நாயனார் காலம் கி.பி.7ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலம். நம்பியாண்டார் நம்பி சுமார் 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று அறியப்படுகிறது. இருவருக்கும் இருநூறு ஆண்டுகளுக்கும் மேலான கால இடைவெளி நிலவுகின்றது. இந்தக் கால இடைவெளியில் ஒரு கதையின் செய்திகள் பல்வேறு மாற்றங்களை அடையக்கூடியது என்பதை எளிதாக உணர முடியும். இவர்கள் காலத்திற்குப் பின்னால் வந்த சேக்கிழார் காலமோ கி.பி.1162 என்பர்.*

*ஏழாம் நூற்றாண்டிற்கும் முன்னிருந்து பதினொன்றாம் நூற்றாண்டு வரையிலான கால இடைவெளியில் மக்களின் பேச்சு வழக்கில் பயணித்த கதை ஒன்றின் போக்கில் எத்தனையோ மாற்றங்கள், இட்டுக் கட்டப்பட்ட செய்திகள் இடம் பெற்றிருக்கும் என்பதில் ஐயம் எதுவுமிருக்க வாய்ப்பில்லை.*

*"பகவத்கீதை, பாரதப் போருக்குச் சற்று முன்பாக பகவான் கிருஷ்ணனால் உபதேசிக்கப்படுவதாகக் கருதப்படுகிறது. ஆயின் அந்தப் பகவானே பாரதக் கதைக்குப்*

புதியவர். அப்போர் நடந்து பல நூற்றாண்டுகள் கழிந்தும் அந்தப் பகவானின் உயர்ந்த தெய்வீகத் தலைமை ஏற்றுக்கொள்ளப் படவில்லை. அதில் வழங்கும் சமஸ்கிருத மொழி நடை கிட்டத்தட்ட கி.பி.மூன்றாம் நூற்றாண்டிற் குரியது. ஆனால் அவ்வாறு கிருஷ்ணன், பகவான் அந்தஸ்தைப் பெறுவதற்கு நீண்ட காலம் முன் பாகவே, மகாபாரதத்தின் முக்கிய சம்பவங்கள், ஒருமைப்பாடுடைய பிராமண காவியமாக முதல் நிலைத்திருத்தம் பெற்று, மகாபாரதக் கதை அமைப்பின் மூலம் நிகழ்ந்துவிட்டது என்னும் டி.டி.கோசாம்பி கூற்று நினைக்கத் தக்கது. அளவுக்கு மீறி விரிவாக்கப்பட்ட மகாபாரதக் கதையைப் பல பிராமண ஆசிரியர்கள் தங்கள் வம்சங்களை மரி யாதைக் குரியதாக்கிக் கொள்வதற்குப் பயன்படுத்திக் கொண்டனர். இதே போக்கில் தான் நந்தனார் சரித்திரமும் கோபாலகிருஷ்ண பாரதியாரால் அமைக்கப்பட்டுள்ளது.




பெரிய புராணத்தில் திருநாளைப் போவார் புராணம் சேக்கிழாரால் இரு குறிப்புகளைக் கொண்டு விரித்துரைக்கப்பட்டுள்ளது. ஆனால் கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தனார் கீர்த்தனையைப்பற்றித் தமிழ்த் தாத்தா உ.வே.சா. கூறுகையில் ''நந்தனார் சரித்திரம் கோபால கிருஷ்ண பாரதியாருடைய பேராற்றலையும் கற்பனை மிகுதி யையும் நன்கு விளக்குகிறது. பெரியபுராணத்தில் உள்ள சுருக்கமான வரலாற்றை அதில் விரித்து இவர் அமைத்திருக்கிறார். வேதியரைப் பற்றிய செய்தி யேனும் நந்தனாரை அவர் துன்புறுத்திய விஷய மேனும் பெரிய புராணத்தில் காணப்படவில்லை. நந்தனார், பழைய கால வழக்கப்படி தம் குலத்திற் கேற்ப ஒரு பண்ணையாளாகத்தான் இருந்திருக்க வேண்டுமென ஊகித்து அவருக்கு ஓர் எஜமானனை இவர் உண்டாக்கிக் கொண்டார். நந்தனாருடைய சிவபக்தியும் துறவு நிலையும் சாந்த உள்ளமும் நிறைந்த குணங்களும் பிரகாசிக்க வேண்டும் என நினைந்து அவருடைய இயல்புகளுக்கு மாறாக உள்ளவைகளை அவ்வாண்டைக்குப் பொருந்தினார்'' என்று உ.வே.சா. அவர்கள் பெரிய புராணத்தில் உள்ள சுருக்கமான வரலாற்றைக் கோபால கிருஷ்ண பாரதியார் விரித்துக் கற்பனை கலந்து கீர்த்தனை

யாகப் படைத்துள்ளார் என்று கூறுகின்றார். இந்நூலைப் படிக்கும்போது மனதிற்குப் பல வேதனைகளையே தருகிறது என்று புலவர் ச.சீனிவாசன் கூறுவார்.

ஒவ்வொரு படைப்பாளனும் தன் படைப்பில் தன் காலச்சூழலைப் பதிவு செய்திருப்பான். பாரதி யாரும் அதையே செய்திருக்கின்றார். பெரிய புராணத்தில் சொல்லப்படாத பலவற்றைக் கற்பனை யாகப் பாரதியார் படைக்கக் காரணம் அவர் காலத்திய சாதியப் பிரிவினைகள் அழுத்தமாக நிலவிய காலம், பாரதியாருக்கும் தன் சாதியான பார்ப்பனர்களே மிக உயர்ந்த சாதியினர் என்ற சாதி மேலாதிக்க உணர்வு மேலோங்கி இருந்திருக்க வேண்டும்.

கோபாலகிருஷ்ண பாரதியார் 1788-ஆம் ஆண்டு நாகப்பட்டினத்துக்கு அருகில் உள்ள நரி மணம் என்னும் ஊரில் பார்ப்பனகுலத்தில் வடமர் என்னும் வகுப்பில் பிறந்தவர். நல்ல இசைப் பயிற்சியும் சிவபக்தியும் உடையவர். தில்லை நடராசர் மீது மிகுந்த விருப்பம் கொண்டவர், நாகப்பட்டினத்தில், கந்தப்ப செட்டியார், செல்லப்பச்சந்திரசெட்டியார் ஆகிய இரு சகோதரர்களின் வேண்டுகோளுக் கிணங்க நந்தனார் சரித்திரத்தைக் கீர்த்தனையாகச் செய்தார். இதனை, சீசய்யாதுரை என்னும் பிரான்சு நாட்டவர் காரைக்காலில் இருந்து அச்சுப் பிரதி யாக்கினார்.

சாதியின் பெயரால் சுமத்தப்பட்ட இழிவுகள் நந்தனார் கீர்த்தனையில் யதார்த்தம் என்ற பெயரால் பதிவு செய்யப்பட்டிருந்தது.

''பறையா நீ சிதம்பரம் என்று சொல்லப்
படுமோடா போகப்படுமோடா-அடா''

''மாடு தின்னும் புலையா உனக்கு மார்கழித் திருநாளோ
ஆடு தின்னும் புலையா உனக்கு ஆனித்தரிசனமோ''

''உலகினில் கடைச்சாதி யெந்தனுக்கு வமையாருமில்லையே''
என இன்னும் நிரம்ப இடங்களில் சாதி துவேஷத்தை பதிவு செய்திருப்பதைக் காண முடிகிறது.

''தில்லையம்பலத் தானைக் கோவிந்தராஜனைத்
தெரிசித்துக் கொண்டேனே''
என்று சேக்கிழாரின் பெரிய புராணச் செய்திக்கு முற்றிலும் பொருந்தாத அதில் இடம் பெறாத செய்தியைச் சொல்லியிருப்பது, சைவ, வைணவ இணைப்புடன் கூடிய பார்ப்பனிய நிலையாக்கத் திற்கு அரண் சேர்ப்பதாக இருக்கின்றதைக் காண முடிகிறது. சங்கரருக்குப் பின்னாலான வைதீக மதத்தில் ஒரு பிராமணன் பெற்றிருக்கும் உரிமை களையும், சலுகைகளையும், ஒரு சத்திரியன் பெற முடியாது. ஒரு வைசியன் கொண்டிருக்கும் உரிமை களையும், சலுகைகளையும் விடக்கூடுதலாக பிராமணன் கொண்டிருக்கின்றான். வைசியன் ஒரு சூத்திரனைவிட அதிகமான உரிமைகளையும்,

*சலுகை களையும் பெற்றிருக்கின்றான். ஆனால், அவன் ஒரு சத்திரியன் பெற்றிருக்கின்ற உரிமைகளையும், சலுகை களையும் கோர முடியாது. சூத்திரன் எந்த உரிமைக்கும் உரியவனல்ல, சலுகையைப் பற்றிய பேச்சே இல்லை. அவனுடைய சலுகையெல்லாம் மூன்று உயர் வகுப்பாரையும் வருத்தாமல் உயிர் வாழலாம் என்பதே என்று சுட்டிக்காட்டுவார் அம்பேத்கர்.*

*இந்த வருணாசிரமப் பேதமும் படிநிலை ஏற்றத் தாழ்வும் அடுக்குமுறை அடிமைத்தனமும் சூத்திரர் களுக்கு உரியது என்றால் இந்த அடுக்குமுறைக்கு வெளியே பெரும்பான்மையான மக்கட் சமூகத்தை வைதீக மதம் புறந்தள்ளி வைத்திருக்கின்றது. அவர்கள் கீழ்மையானவர்களாக உரிமையற்றவர்களாக மனித சமூகத்திற்குரிய மதிப்பில்லாதவர்களாகக் கருதியது. அத்துடன் சூழ்நிலையை அம்மக்கள் அடைய வேண்டும் என்பதற்காகப் பலப்பல புனைவுகளையும் பொய்மையையும் வலிமைப்படுத்தி நிலை பெறவும் செய்தது. இதன் தொடர்ச்சிதான் ஆண்டை கதைப் பாத்திரத்தின் வெளிப்பாடாக அமைந்தது.*

*''புண்ணியமா முனிவடிவமாய்*
*மெய்திகழ்வெண் ணூல்விளங்க*
*வேணிமுடி கொண்டெழுந்தார்''*
*என்று சேக்கிழாரும் நந்தனாரைப் புலைய உடல் நீங்கிப் புது உடல் எடுக்கச் செய்வித்தமையும் அமைந்திருக்கிறது என்பதை உணர வேண்டும்.*

*ஆனால், சேக்கிழாரின் பெரிய புராணத்திலே கூறுவதற்கு மாறாகவும் கோபாலகிருஷ்ண பாரதி யாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனைக்கு எதிரான கருத்தை முன்வைக்கும் அயோத்திதாசப் பண்டிதர் நந்தனாரை வரலாற்று மாந்தனாக முன்நிறுத்து கின்றார்.*

*''புன்னாட்டுக்குக் கிழக்கே வாதவூரென்னும் தேசத்தை நந்தன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். இவன் பௌத்த சமயத்தவன்''*

*''வஞ்சகத்தால் நந்த அரசனைக் கொன்றுவிட வேண்டுமென்று தங்களுக்குள் இரகசியமாக முடிவு செய்து கொண்டு அதற்காக ஒரு திட்டமும் தீட்டிக் கொண்டார்கள். அதன்படி நந்தன் அரண் மனைக்கு மேற்கே அரைக்காத தூரத்திலுள்ள ஒரு காட்டில் இருந்த மண் மேட்டைத் தகர்த்து அதன் மத்தியில் சிதம்பச் சூத்திரம் நாட்டினார்கள்.*

*பிறகு அரசனைப் பொய் சொல்லி அழைத்துச் சென்று சூத்திரப் பாவையில் கால்களை வைக்கச் செய்தனர். நந்தன் தலைகீழாகவும், கால்கள் மேலாகவும் நசியச் சிதம்பித்துக்குக் கொல்லப்பட்டான்.*

உடனே வஞ்ச மிலேச்சர்களாகிய ஆரியர்கள் ஊருக்குள் சென்று குடிமக்களெல்லாரையும் அழைத்து நந்தன் பக்தியுடையவனாக இருந்ததால் சுவாமி விருப்பங்கொண்டு விழுங்கி விட்டார். பாதங்கள் மட்டும் மேலே தெரிகின்றது பாருங்கள் என்று காட்டினார்கள்.

நந்தனை சிதம்பித்துக் கொன்ற இடம் சிதம்பரம் என்றானது என்பது அயோத்திதாசர் கருத்தாகும்.

பாரதியாரோ, "பறையா நீ சிதம்பரம் என்று சொல்லப்படுமோடா, போகப்படுமோடா-அடா? என்ற நந்தனாரின் முதலாளி திட்டுவதாக அமைத் துள்ளார். சிதம்பரம் என்பதில், சிதம்பர் என்றால் இழிந்தோர், கீழோர், தாழ்ந்தார் என்ற பொருளைக் கழக அகராதி தருகிறது என்பதைக் கருத வேண்டும்.

பெரிய புராணம் பௌத்தர்கள் மீதுற்ற வெறுப் பினால் எழுதப்பெற்ற நூல் என்பது பெரியாரின் வாதம். மேலும் நந்தனார் கதை பொய்யான கற்பனைக் கதை என்பதும் அவர் முன்னுரைப்பதாகும்.

அயோத்திதாசரோ நந்தன் பௌத்த அரசன். அவன் ஆரிய சூழ்ச்சியால் கொல்லப்பட்டான் என்றுரைப்பார், உபமன்யு, சுந்தரமூர்த்தி சுவாமிகள், நம்பியாண்டார்நம்பி, சேக்கிழார், கோபால கிருஷ்ண பாரதியார் இவர்கள் புராணக் கதையான நந்தனை அணுகிய போது, அயோத்திதாசர் மட்டும் நந்தனை வரலாற்று மனிதனாக முன்னிறுத்துகின்றார். இவரின் இம்முயற்சிக்குக் காரணம் இருக்கின்றது.

பாரதியாருடைய கீர்த்தனைக்கு அவர் காலத்தி லேயே ஒரு எதிர்ப்பும் ஏற்பட்டுள்ளது.

"நந்தன் சரித்திரத்தைக் கேளாதே - நாளும்
வந்த தரித்திருந்தான் மாளாதே
தந்தனமாகக் கொள்வான் தடிப்பிரமசாரி
தையலர் மேற்பெருங்காமவிகாரி
பெரிய புராணத்தில் இருப்பதை விட்டுப்
பேய்த்தனமாக இவன் சொன்னதைத் தொட்டு
அரிய புலவருக்கு வந்ததே சொட்டு
ஐயையோ அத்தனையும் கதை கட்டு"

என்று எழுந்த எதிர்ப்பை யார் எழுதியது என்று குறிப்பிடாமல் உ.வே.சா அவர்கள் தம் நூலில் பதிவு செய்துள்ளார். இதுபோன்றதொரு எதிர்ப்பு சமய வாதிகளால் எடுத்துரைக்கப்பட்டாலும், அயோத்தி தாசருக்கான அவசியம் அவ்வாறானது இல்லை. காரணம் அவர் இயல்பில் பௌத்தர் மட்டும் அல்லாது அம்பேத்கருக்கும் முன்னாலேயே ஆதி திராவிடர்களுக்கான உரிமைக்குக் குரல் கொடுத்த சமூகத்தலைவர். ஒரு பைசா தமிழன் என்ற செய்திப் பத்திரிகை மூலம் தன்

*புரட்சிக்கருத்துக்களை வெளிப்படுத்திய போராளி. எனவே, அவருக்குத் தன் சமூகத்தின் மீதான இழிவுகளைக் களைய வேண்டிய கட்டாயம் இருந்தது. எனவே தான் நந்தனை வரலாற்றி லிருந்து பெயர்த்துச் சிதம்பரத்தோடு சிற்றரசாகப் பொருத்துகின்றார். பண்டிதர் தரும் நந்தனார் பற்றிய செய்திகள் தனி ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டியவை. நந்தனார் வரலாற்று மனிதர் என்பதனைக் கட்டுரையாளர் தனிக்கட்டுரையாகச் செய்திருக்கிறார்.*

*கோபால கிருஷ்ண பாரதியாரின் காலம் 1788 முதல் 1881 வரை என்றால் அயோத்திதாசப் பண்டிதரின் காலம் 1848 முதல் 1914 வரை ஆகும். சுமார் 33 ஆண்டுகள் இருவரும் ஒரே சமயத்தில் வாழ்ந்திருக்கின்றார்கள்.*

*பாரதியாரின் கீர்த்தனைகள் சாதி இந்துக்கள் மத்தியில் பெருமளவில் பரவியதால் நந்தனாரை பண்டிதர் வேறு வடிவத்தில் கொண்டு செல்ல விரும்பினார். காரணம், கீர்த்தனையில் பார்ப் பனர்களே மிக உயர்ந்த சாதியினர், மற்றையோர் யாவரும் கீழ்ச்சாதியினர், அதிலும் பறையர், புலையர் முதலியோர் மிகவும் கீழ்ப்பட்ட சாதியினர்- என்பது மிக அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளதை பண்டிதர் ஏற்க வில்லை. ஆனால், பறையர் என்பார் ஆதி தமிழர்கள், பறை என்பது சொல் என்பதால் சொல் மொழியைக் குறிக்கும், இம்மொழிக்குரியவர்கள் பறையர்கள், புலையர்கள் என்பதும் புலம் என்பதில் லகரம் ஐகாரம் பெற்றுப் புலை எனக் கீழ்மைக்கு உரியவராய் பின்னர் திரிக்கப்பட்டிருக்க வேண்டும்.*

*பறையர்களையும், புலையர்களையும் ஆதி திராவிடர் என்று அழைக்க வேண்டும் என்று அரசு ஆவணங்களில் பதிவு செய்தவர் பண்டிதர் என்பதை உணர வேண்டும்.*

*பாரதியாரின் கீர்த்தனைகள் பண்ணைக்காரன் கதைப்பாத்திரம் மூலமாக, சாதி மேலாதிக்கச் சிந்தனை வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றது. ஒடுக்கப்பட்ட மக்கள் தங்கள் உரிமைகளை இறைஞ்சிதான் பெற வேண்டும். அவர்களின் வாழ்க்கை மேல் சாதிக் காரர்கள் விருப்பப்படியே இருக்க வேண்டும். அப்படியே ஒடுக்கப்பட்டவர்கள் எங்கேனும் அடக்கு முறைக்கு எதிராகக் கலகம் செய்தால் அந்தக் கலகத்தால் கிடைக்கும் நியாயமான உரிமையைக் கூட மேல் சாதிக்காரர்கள் அவர்களாகவே முன்வந்து பெருந் தன்மையோடு கொடுத்ததாக இருக்க வேண்டுமே தவிர அது போராட்டத்தால் கிடைத்த வெற்றியாக இருக்கக் கூடாது என மனநிலை மேலிட்டதாக கீர்த்தனை அமைந்திருப்பதாக பண்டிதர் கருதியிருக்க வேண்டும். எனவே கீர்த்தனைகளுக்கு எதிரான கருத்துகளை பண்டிதர் முன்மொழிவு செய்திருக் கின்றார்.*

*பண்டித சாதி தீண்டாமைக்கு எதிராகப் பெரு மளவில் முயன்று தன் கருத்துக்களை முன்மொழிந் திருந்தாலும் பாரதியாரின் கீர்த்தனைகள் தமிழ்ச் சமூகத்திடம் சென்று சேர்ந்த அளவிற்கு பண்டிதரின் கருத்துக்கள் சென்றடையவில்லை.*

சமூக உளவியல் என்பது இந்தியாவில் பார்ப் பனிய மேலாதிக்க உணர்வோடு கலந்திருக்கின்றது. பார்ப்பனியம் தன்னை மிக வலுவாகக் கட்டமைத்துக் கொண்டதாக விளங்குகின்றது. அதிகார வர்க்கத் தோடும் ஆதிக்க வர்க்கத்தோடும் பின்னிப் பிணைந் துள்ளது. "ஏழையின் சொல் அம்பலம் ஏறாது" என்பது போல பௌத்த பறையரான பண்டிதரின் வாதம் தமிழகம் முழுவதும் பரவாமல் போனது. புறக்கணிக்கப்பட்டதாகவும் இருக்கின்றது.


குறிப்புதவி நூல்கள்:

1. திருநாளைப்போவாரென்னும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை- கோபாலகிருஷ்ண பாரதியார்.
2. பண்டைய இந்தியா-டி.டி.கோசாம்பி
3. பவுத்தமும் பழந்தமிழ்க் குடிமக்களும் ஓர் ஆய்வு - புலவர் ஜே.ஆனந்தராசன்.
4. க.அயோத்திதாசப் பண்டிதர்- கௌதம்சன்னா
5. அம்பேத்கர் சிந்தனைத் தொகுதி Dr.B.R. அம்பேத்கர்



நன்றி: "உங்கள் நூலகம்," ஆகஸ்ட் - 2013

## 23. திருப்புன்கூர்
## — தேமொழி

திருப்புன்கூர் கோயில் .... இங்கு வரலாற்றில் இருந்த சாதி பேதத்திற்கு ஆவணப்படுத்தும் வகையில் சிற்பச் சான்றும் உருவாக்கி வைத்துள்ளார்கள்.

திருநாளைப்போவார்(நந்தனார்) திருப்புன்கூர் சென்று சிவனை வழிபட விரும்பினாராம், அவர் நன்கு பார்த்து கும்பிடும் வகையில் நந்தியை விலகி நிற்கச் சொன்னாராம் சிவன்.

கவனிக்க, உள்ளே வாயேன் என்று சிவன் அவரை அழைக்கவில்லை, அழைக்க விரும்பவுமில்லை.



source: http://rightmantra.com/wp-content/uploads/2016/02/thirupunkoor-nandhi-3.jpg

இதை ....

"சீரேறும் இசைபாடித்
திருத்தொண்டர் திருவாயில்
நேரேகும் பிடவேண்டும்
எனநினைந்தார்க் கதுநேர்வார்
**காரேறும் எயிற்புன்கூர்க்**
**கண்ணுதலார் திருமுன்பு**
**போரேற்றை விலங்கஅருள்**
**புரிந்தருளிப் புலப்படுத்தார்"**
என்று பெரியபுராணம் கூறும்.

கருவறையில் இருந்து பார்க்கும்பொழுது தோன்றும் காட்சி இது, சிவனின் கட்டளையை ஏற்று பார்வையை மறைக்காமல் தூண் ஓரமாக ஒதுங்கி நிற்கும் நந்தி.



source: https://i.ytimg.com/vi/JygVxvlwAtU/maxresdefault.jpg

இந்தப் படத்தில் அறிவிப்புப் பலகையை படிப்பவர் அருகில் நின்று பார்த்தால் சிவனை நந்தி மறைக்காது. ஆனால் திருநாளைப் போவாருக்கோ அதுவரை செல்ல அனுமதியில்லை. அவரை உள்ளே அழைக்க சிவனுக்கும் மனமில்லை. அதனால் 'சற்றே விலகி இரும் பிள்ளாய்' என்று நந்தியை நகரச் சொன்னாராம்.
நந்தி விலகியதாம். இன்று,
**"நந்தி மாதிரி குறுக்கே நிற்காதே"**
என்பது மக்கள் வழக்காற்றில் இடம் பெற்றுவிட்ட ஒரு கூற்று.



source: https://2.bp.blogspot.com/-fV3kqhPnYtU/Wds4FvEt_NI/AAAAAAAAAjo/q-r1ae-7Fg4gXpSTG1bHuCVNTrIBGaBVwCLcBGAs/s1600/the-off-centre-nandi.jpg

இப்பொழுது படத்தில் தோன்றுவது போல தெருவில் நின்றவாறே நந்தி மறைக்காமல் சிவனை வணங்கலாம்.

*இன்று இந்த படத்தில் அர்ச்சகர் (?) இருக்கும் இடத்தில் அவர் மூதாதையரும் நின்றிருப்பார். அது பிறப்பு அடிப்படையில் உள்ள அனுமதி என்று நமக்குத் தெரிவதால் உறுதியாகச் சொல்லலாம்.*

*மற்றொரு பக்கத்தில் உள்ள அம்மையாரின் மூதாதையர் அனுமதிக்கப்பட்டிருப்பார்களா? தெரியாது. உறுதியாகச் சொல்ல வழியில்லை.*

*இந்த ஆண் பெண் இருவரின் உடையமைப்பின் அடிப்படையில் அவர்களது மூதாதையர் பின்னணி கணிக்கப்படுகிறது.*

*ஆண்கள் சட்டையை நீக்கிவிட்டு கோயிலுள் நுழைவதன் தேவை என்ன?*

*குலத்திற்கேற்ற வகையில் ஆடை அணிவது, அணியவேண்டும் என்பது, சட்டை போடக்கூடாது, இரவிக்கை அணியக்கூடாது என்பதெல்லாம் யார் சொன்னது?*

*யார் யார் கோயிலுக்குள் வரவேண்டும் வரக்கூடாது என்று சொன்னதெல்லாம் யார் சொன்னது? கடவுள் சொன்னதா?*

*அவ்வாறு சொல்லியிருந்தால் வள்ளுவர் போல நாமும் பாடவேண்டியதுதான்... கெடுக உலகியற்றியான்.*

*சமய அடிப்படையில் இருந்த சாதிபேதத்தை நன்றாகவே ஆவணப்படுத்தியுள்ளது பாராட்டிற்குரியது.*

*மனதில் ஒரு குற்றவுணர்வே இல்லாமல் பேதம் காட்டியுள்ளார்கள் என்பதற்கு திருப்புன்கூர் நந்தி இன்று சாட்சியாக நிற்கிறது.*

*படங்கள் உதவி: இணையம்*

*தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)*

## 24. மந்திரம் - ஒரு பொருள் விளக்கம்

***— இராம.கி.***

*இரு மொழிகளிலும் சிறந்த புலமைபெற்ற சிவாச்சாரியார்களையும், பட்டர்களையும் வைணவ ஆச்சாரியார்களையும் உள்ளடக்கிய தென்னிந்திய அருச்சகர் சங்கம் வெளியிட்ட சிவாகம விளக்கவுரை நூலிலிருந்து எடுக்கப்பட்டதாக மந்திரமென்ற சொல்லுக்கு*

> *சமசுகிரதத்தில் 'மந்திரம்' என்னும் சொல் மநநம் + த்திராணம் என்னும் இரு சொற்களின் புணர்ச்சியால் ஏற்பட்டதாகும் இச்சொல் வாசகம் வாச்யமென்று இரண்டாக விரியும். அதாவது தான் நினைத்த பொருளைப் பிறர்க்குத் தெரிவித்தலும், பிறர் தெரிவித்ததனைத் தாமுள்ளுணர்தலமாகும்*

*என்று விளக்கம் சொல்லப்பட்டது. படித்து நான் வியந்துபோனேன். என் குறைபட்ட மொழியியலறிவில் புரிந்துகொண்டபடி, மநநம்+த்ராணம் என்பது ஒருநாளும் மந்திரமாகாது. புணர்ச்சியில் அது மநந்த்ராணம் என்றே திரியும். கண்டமேனிக்குச் சங்கத இலக்கணம் இப்படியெல்லாம் வேலை செய்யாது. இதுபோன்ற "பௌராணிக விளக்கங்களை" வைத்துப் பொருள்கொள்வோருக்கு என்னசொல்ல முடியும்?. மோனியர் வில்லியம்சைப் பாருங்கள் என்றுமட்டுமே சொல்லமுடியும். பௌராணிகர்களைப் பார்த்தால் தடுமாறத்தான் வேண்டும். மந்திரத்தின் தாதுவாக "மந்"நையே மோனியர் வில்லியம்சு அகரமுதலி சொல்லும். அத்தாது, ஆத்மனேபாதத்தில் சொல்லப்பட்டதில், 8.4 ஆம் வகையைச் சேர்ந்ததாம். பாணினியின் தாது பாடப்படி, அது xxx, 9; xxv, 670 என வகைப்படுத்தப் படும்.*

*இதன் அடிப்பொருள் to think, believe, imagine, suppose, conjecture என்பதே. இதன் அடிவழி வந்த சொற்கள் பல. மந, மநந, மநஸ், மநு, மநுஷ், மநோ, மந்த்து, மந்த்ர, மந்த்ரி போன்றவையும் பிறவும் ஆகும். இவையெலாம் ஒழுங்கான சங்கத இலக்கணவழி வந்த சொற்கள். "சூ, மந்திரக்காளி, ஓடிவா, ஓடிவா" என்றபடி, மநந்த்ராணம் என்றசொல் மந்த்ரம் ஆகிவிடாது. மந்த்ர என்பதற்கு instrument of thought, speech, sacred text or speech, a prayer or song of praise என்று பொருள் சொல்வர். இதன்படி "சிவசிவ, ஓம் நமசிவாய, ஓம் நமோ நாராயணா, ஓம் மணிபத்மே ஹூம், பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடு நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு ......." போன்று இன்னும் பலவும் மந்திரங்களே. அவற்றைச் சொல்வதில் ஒருவிதமான எழுச்சி, நிறைவு, அமைதி போன்றவை ஒருவருக்குக் கிடைக்குமானால் அம் மந்திரங்களுக்குப் பயனுண்டு தான். இவை மனம் தொடர்பானவை.*

*மந் எனும் தாதுக்கும் முந்தையதாய் முல்*>முன்>மன் எனும் வேரைத் (முன்னு-தல் வினையைத்) தமிழ்ச்சொற்பிறப்பியல் சொல்லும். ("வேறுபல முன்னிய விரகறி பொருந - பொருநராற்றுப்படை 3) கன்னடத்திலும் இது முந்நு என அமையும். ஞாவகம் கொள்ளுங்கள். மொழியீற்றில் னகரம் என்பது நகரத்தின் போலி. சொல்முடிவில் வெரிந் என்றசொல் தவிர்த்து மற்ற சொற்களில் னகரமே ஈற்றாகும். பொதுவாக முன்னுதலென்பது பொருந்தல் பொருளையே உணர்த்தும். மு- வும் நு வும் பல சொற்தொடக்கங்களில் போலிகள்.' மன்>மன்னு, மனம், மனசு, மனனம், மன்>மான்>மாந்து, மாந்தன், மந்திரம், மந்திரி என்ற சொற்களைத் தமிழென்றுஞ் சொல்லலாம். மன்னுந் திரம்(>திறம்) தமிழில் மந்திரமாகும். இதற்குச் சங்கதத்தைத் துணைக்கழைக்கத் தேவையில்லை.*

*அன்றாடம் நாம் காணும் காட்சிகளை, பட்டறிந்தவைகளை, ஏதோசிலவோடு பொருத்துகிறோம். அப்பொருத்தல்களே நம்மூளையில் பதிகின்றன. பின் நினைவாகின்றன. முன்>நுன்>நின்>நினை என்பதும் முன்னுதலின் இன்னொரு வடிவுதான். இதேபோல் முன்>உன்>உன்னு என்பதும் இன்னொரு வடிவு. உல்>உள்>உள்ளம் என்பதும் மனத்தின் இன்னொரு சொல். உள்>ஒர்>ஓர்>ஓர்தல்= பொருந்தல். கருதல், கண்ணுதல் என்ற சொற்களும் பொருந்தல் தொடர்புள்ளவை செ>செத்து>சித்து>சிந்து>சிந்தனை என்பதும் கருதல் தொடர்பானது. முன், நினை, உன், உள், ஓர், கண், கருது, சித்து என்பவற்றின் அடியிலும் பலநூறு தமிழ்ச்சொற்கள் உள்ளன. எல்லாவற்றையும் சங்கதப்படுத்திப் பார்ப்பது நம்மை அடிமைத்தனத்திற்கே இட்டுச்செல்லும். வழக்கம்போல் ஒரு சிலர் எதுமுந்தி என்பதில் குடுமிப் பிடிச் சண்டையும் போடலாம். அது வேறு கதை.*

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப*

*என்று வரையறை தருவார் தொல்காப்பியர் (செய்யுளியல் 178). இதைவிடச் சிறப்பான வேறு வரையறையை மந்திரத்திற்கு நான் கண்டேனில்லை. மேலேசொன்ன "சிவசிவ, ஓம் நமசிவாய, ஓம் நமோ தமிழ் நாராயணா, ஓம் மணிபத்மே ஹூம், பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடு நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு ......." என்பன வெல்லாமும் நிறைமொழி மாந்தரின் ஆணையில் கிளந்தவையே. மந்திரம் என்பது வாய்மொழி எனவுஞ் சொல்லப்படும். திருமூலர் அருளிய திருமந்திரமும், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியுங் கூட மந்திரவகையைச் சேர்ந்தவை தான். வாய்மொழி என்பதைச் சிவவாக்கியர் நெற்றிப்பொட்டில் அடித்ததுபோல் ஒரு பாட்டில் சொல்லுவார்:*

*நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே*
*சுற்றிவந்து முணமுணன்று சொல்லுமந்திரம் ஏதடா?*
*நட்டகல்லும் பேசுமோ? நாதனுள்ளி ருக்கையில்*
*சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?*

முள்ளுதல்> மொள்ளுதல் என்பது வாய்க்குள் நாவை உருட்டி ஒலிஎழுப்புவது. மொள்>மொழு>மொழி என்பதும் அதே பொருள்தான். முள்>முழங்கு = சத்தமாய் ஒலியெழுப்புவது. முள்>முழு<முணு> முணுமுணுப்பு= காதில்கேட்காத அளவிற்கு மென்குரலில் சொல்வது., பலரும் மந்திரம் சொல்லும்போது சத்தமிட்டுச் சொல்ல மாட்டார். முணுமுணுத்தே சொல்வார். மந்திரம் என்றால் என்னவென்று புரியச் சிவவாக்கியரின் மேலுள்ள வாக்கும் தேவைதான்.

*தொடர்பு:*
*இராம.கி. (iraamaki@bsnl.in)*
*http://valavu.blogspot.com*

# 25. நார்த்தமலை - பெயர் விளக்கம்

***— நூ.த.லோகசுந்தரம்***

*நார்த்தமலை நார்த்தம்புல் வளரும் மலை. நாரத்தைப்புல் வளரும் இடம் ஆதலால் நார்த்தமலை எனப் பெயரிட்டனர். தமிழ் மக்கள் எப்போதும் இயற்கையை ஒட்டியே வாழ்பவர்கள் ஆதலால் ஓர் திணை எனக் கொண்டு பெயரிடுவர்.*



source: https://upload.wikimedia.org/wikipedia/commons/d/d6/Naarthaamalai-13.jpg

*நரந்தம் ஓர் நறுமணப்பொருள். நரந்தம் என்றால் நாரத்தை (683 திவாகரம்) . நாம் ஊறுகாய்க்கு நார்த்தங்காய் பயன்கொள்கிறோம். நரந்தம் ஓர் நல்மணம் மிக்கு நாறும் புல்லாகும்; எலுமிச்சை வாசனை வீசும். ஆங்கிலத்தில் லெமன்கிராசு என்பார்கள் (https://en.wikipedia.org/wiki/Cymbopogon_citratus).*

***நார்த்தம்புல்:***

*நரந்தம் உலக நறுமணப்பொருள் வாணிப நிரலில் பெரும்பங்கு வகிக்கின்றமையை நாம் உணர வேண்டும். தமிழகத்தில் பரவலாக மொட்டைக்குன்றுகள் பாறைகள் உள்ள இடங்களில் இப்புல்லை இயற்கையாகக் காணலாம். பாறைகளின் இடுக்குகளில் குத்துக்குத்தாக வளரும். ஒசூர், வேலூர், வேட்டவலம், திண்டுக்கல் போன்ற பாறைக்குன்றுகள் உள்ள இடங்களில் மிக்கு*

*காண்பது தான் இப்புல்வகை. நேரடியாகக் கண்டும் உள்ளேன். நான் எப்போதும் இதனைக்கண்டவுடன் அக்கம்பக்கத்தில் உள்ளவர்களுக்கு வியப்பூட்டுவதற்கு இது புல்தானே எப்படி மணக்கின்றது எனக் கசக்கி முகர்ந்து பாருங்கள் எனக் காட்டுவது வழக்கம். தஞ்சையில் நடந்த கல்வெட்டு பயிற்சிப்பட்டறையில், பூலாங்குறிச்சி, திருமயம், சித்தன்னவாசல் முதலியவை சென்றபோதும் இதனை சித்தன்னவாசலில் கண்டவுடன் பலருக்கும் காட்டினேன். விவசாய மக்கள்/பல்கலைக்கழகங்களும் அவ்வப்போது ஓர் பணப்பயிராக வளர்க்க விளம்பரம் செய்துள்ளனர்.*



source: https://en.wikipedia.org/wiki/Cymbopogon_citratus#/media/File:Gardenology.org-IMG_2892_rbgs11jan.jpg

*இஃது சங்க நூல்களில் மிக்கு பரவலாக பேசப்படும் பொருளாவதும் காண்க. இந்தப் புல்லினை மேய்ந்த கவரிமானைக் காட்டும் புறம் 136 வரியினைக் காண்க. மற்ற 17 வரிகளிலும் நரந்தம் நறுமணப் பொருள்களுடன் தனித்தோ உடனோ வருவது காணலாம். இதனை மக்கள் முதல் அரசர் வரை ஓர் நறுமணப் பொருளாகவே பயன்கொண்டுள்ளமை காண்க.*

***நரந்தம்*** *நாகம் நள்ளிருள்நாறி - 94 குறிஞ்சிப்பாட்டு*

***நரந்த*** *மரைப்ப நறுஞ்சாந்து மறுக - 553 மதுரைக் காஞ்சி*

*நறையும்* ***நரந்தமும்*** *அகிலும் மாரமும - 237 பொருநர் ஆற்றுப்படை*

***நரந்த*** *நறும்பூ நாள்மலர் உதிர - 141 அகநானுறு*

**நரந்தம்** *நாறும் குவைஇருங் கூந்தல் - 266 அகநானூறு*

**நரந்த** *நறும்புல் மேய்ந்த கவரி - 132 புறநானூறு*

**நரந்தம்** *நாறும் தன் கையால் - 236 புறநானூறு*

**நரந்தப்** *பல்காழ்க் கோதை சுற்றிய - 302 புறநானூறு*

**நரந்தம்** *நாறு இரும் கூந்தல் எஞ்சாது - 54 கலித்தொகை*

**நரந்த** *நாறுங் குவையிருங் கூந்தல் - 52 குறுந்தொகை*

*நளி இருஞ் சோலை* **நரந்தம்** *தாஅய் - 7 பரிபாடல் வையை*

**நரந்த** *நறு மலர் நன்கு அளிக்கும்மே - 16 பரிபாடல் வையை*

*பரந்திலங் கருவியொடு* **நரந்தம்** *- 11 பதிற்றுபத்து*

*நாகம் நாறு* **நரந்தம்** *நிரந்தன - 12 வேட்டுவ வரி, உரைப்பாட்டுமடை, சிலப்பதிகாரம் புகார்க் காண்டம்*

**நரந்தமும்** *நாகமும் பரந்து அலர்- மலர்வனம் புக்க காதை, மணிமேகலை*

**நரந்தம்** *என்பது நாரத்தை நாறும் - சூடாமணி நிகண்டு*

*நாளிகேரஞ் செருந்தி நறுமலர்* **நரந்தம்** *- 12.78*

*நாகம் சூதம் வகுளம் சரளம்சூழ் நாளிகேரம் இலவங்கம்* **நரந்தம் -** *12.239*

*தொடர்பு: மயிலை நூ த லோ சு / நூ.த.லோக சுந்தரம் (selvindls61@gmail.com)*

## 26. இசையாய், இசை தரும் பொருளாய் …
## — தேமொழி

*மொழியின் சொற்களால் இருபொருள்பட சொல்லி மொழிநயம் கூட்டுவது போல, இசையின் சுவரங்களால் இருபொருள்பட சொல்லி இசைநயம் கூட்டுவதும் உண்டு. இதற்கு மொழியறிவும் இசையறிவும் தேவை.*

***மொழியின் சொற்களால் இருபொருள்பட சொல்லி மொழிநயம் கூட்டுவது:***
*ஒரு பாடலில் ஒரு சொல்லோ, சொற்றொடரோ இரு பொருள் பட வருவது இரட்டுறமொழிதல் அணி எனப்படும். இரட்டுற மொழிதல் (சிலேடை); இரண்டு +உற +மொழிதல் = இரட்டுற மொழிதல், அதாவது இரண்டு பொருள்படப்பாடுவது.*

*நீ வரவேண்டும் ஏன் வரவில்லை*
*நான் வரலாமா ஒருக்காலும் இல்லை*
*ஒருகாலும் இல்லை … ஒருக்காலும் இல்லை*
*(- கண்ணதாசன்)*

*என்று ஒரு காலிழந்து ஊனமுற்ற பெண் தன்னைக் காணவராத காதலனிடம் தான் அவனைத் தேடிச் செல்லமுடியாத தனது நிலைமையை விளக்குவாள். ஆணைத் தேடிச் செல்ல அவள் பெண்மை இடம் கொடுக்கவில்லை, அதனால் அது ஒருக்காலும் நடவாது. மேலும், அவள் ஒரு கால் இழந்தவள் என்பதால் அவளால் நினைத்தாலும் முடியாது. ஒருக்கால் என்பதை வைத்து இதுபோல நயமுள்ள வகையில் எத்தனைப் பேரால் பாடல் தர இயலும்.*

*மற்றொன்று பலரும் அறிந்தது.*
*எனக்கு "மதம்" பிடிக்கவில்லை .. எனக்கு "மதம்" பிடிக்கவில்லை …*
*என்று இருபொருள்பட (சமயம்/ வெறி) சொல்வது மொழி நயத்துடன் அமைகிறது.*

***இசையின் சுவரங்களால் இருபொருள்பட சொல்லி இசைநயம் கூட்டுவது:***
*அவ்வாறே, இசையில் சுவரங்கள் வழி மொழித்திறமையைக் கையாளுவதும் உண்டு, அது ஸ்வராட்சரம் எனப்படும்.*

*ஸ்வரம் + அக்ஷரம் = ஸ்வராக்ஷரம் / 'ஸ்வராட்சரம் (swaraksharam)'*
*ஸ்வரம் = ச ரி க ம ப த நி என்ற இசையின் அடிப்படையான ஏழு சுவரங்கள்*
*அக்ஷரம் = எழுத்து (எ.கா.: அக்ஷர அப்யாசம் – எழுத்துப் பயிற்சி; பஞ்சாக்ஷரம் - ந ம சி வா ய என்னும் ஐந்து எழுத்தான பஞ்சாட்சரம்)*

*இசையின் சுவரங்களையே மொழியின் எழுத்துக்கள் போல பாவித்து, அந்த எழுத்துக்களை இணைத்து ஒரு பொருளுள்ள சொல்லும் வருவது போல அமைப்பது.*

*'ச' என்ற சுவரத்தையும், 'ரி' என்ற சுவரத்தையும் ஒரு பண்ணில் இணைத்து 'சரி' என்று சுவரங்களாகவும் பாடுவதும், அதே நேரத்தில் அவ்வாறே 'சரி' என்று ஒப்புக்கொள்ளும் பொருளிலும் குறிப்பது. பாடலின் வரி சாகித்தியம் என்று சொல்லப்படும்.*

*இங்கு ச என்பதும் ரி என்பதும் இசையின் சுவரமாகவும் இருக்கிறது அவ்வாறே மொழியின் எழுத்தாகவும் அமைகிறது, அதனால் பொருள் கொண்ட செய்தியாக மாறுகிறது. சுருக்கமாக, வரியின் அக்ஷரமும் அது இசைக்கப்படும் ஸ்வரமும் ஒன்றாக அமைவது ஸ்வராக்ஷரம். ஆகவே 'சரி' என்பது பாடலில் ஸ்வராக்ஷரம் என்ற தகுதியைப் பெறுகிறது.*

*இதற்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமையும் பாடல் அகத்தியர் படத்தில் 'வென்றிடுவேன் உன்னை வென்றிடுவேன்' என்று இராவணனுக்கும் அகத்தியருக்கும் இடையில் நடக்கும் ஒரு போட்டிப்பாடலின் இறுதியில் வருகிறது (https://www.youtube.com/watch?v=z5wZVG_oJiI&feature=youtu.be&t=352) பாடலில் சுவரங்கள் பாடும் இறுதிப் பகுதியில், பாடும் சுவரவரிசையின் இறுதியில் வரும் சுவரங்கள் ஒரு பொருளைக் குறிப்பதாக அமையும்.*

*இராவணன்: .......................... சமமா (அகத்தியரே நீ எனக்கு சமமா?)*
*அகத்தியர்: .......................... சமமா நீ சமமா (இராவணனே சமமா நீ எனக்கு சமமா?)*
*இராவணன்: .......................... நீ சரிசமமா (நீ எனக்கு சரி சமமா?)*
*அகத்தியர்: .......................... நிதாநி மதமா நீ சதமா (நிதானம் தேவை, உனக்கு மதமா? நீ நிலையா?)*
*இராவணன்: .......................... மநிதா நீ பாதக மநிதா (மனிதனே நீ பாதகம் செய்யும் மனிதன்)*
*அகத்தியர்: .......................... பரிகாசமா சாகசமா (என்னை பரிகாசம் செய்கிறாயா? சாகசம் செய்கிறாயா?)*

*இங்கு மேலே கூறப்படும் இசையின் சுவரங்கள் அதன் குறிப்பிட்ட இசைநிலையைத் தாண்டி மொழியின் எழுத்தாக மாறி ஒரு பொருளைக் குறிப்பதால் இவை ஸ்வராக்ஷரம் ஆகிறது.*

*மேலும் இது போன்ற சில திரையிசைப் பாடல்களிலும் வரும், மற்றொன்று...*
*நீயே உனக்கு என்றும் நிகரானவன் (பலே பாண்டியா - https://youtu.be/b3ku7VgUi30?t=292)*
*மா... மா.... (என்ற சுவரங்கள் இணைந்து 'மாமா' என்ற உறவைக் குறிக்கும்)*
*ப நி மா மா (பணிந்து போ மாமாவே என்ற பொருள்)*
*நீ மாமா (நீ மாமன் என்ற பொருள்)*

சரி = சரி
மநிதா = மனிதா
மாமா = மாமன்
சநி = சனியன்
மகா = மகா(பெரிய)
கநி = கனி

என்பது போன்று இசையின் சுவரங்களை பொருள் பொதிந்த எழுத்துக்கள் கொண்ட சொற்களாக ஸ்வராக்ஷரம் என்ற வகையில் மாற்றலாம். இசை விற்பன்னரின் கற்பனைக்கு எல்லை இல்லை.

தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)

## 27. தமிழ் நிறங்கள்

**— தாமரைச்செல்வன்**



*தமிழில் நிறங்கள் எவையெவை? இங்கு கீழே நான் அடுக்கியிருக்கும் நிறங்களுடன் சிபநீ (சிவப்பு-பச்சை-நீலம் சேர்வு) மதிப்பும் தெரிவித்துள்ளேன். இதில் சிவப்பு/பச்சை/நீலம் ஒவ்வொன்றும் 0 - 255 என்ற மதிப்பு வரையறையில் குறிப்பிட்டுள்ளேன். நாம் அன்றாடம் பயன்படுத்தும் சில நிற வகைகளை இங்கு அடுக்கியுள்ளேன். இவற்றுள் பல நிறங்களுக்கு வேறுபல சிபநீ மதிப்புகளும் இருக்கக்கூடும் என்றாலும் இங்கு கொடுக்கப்பட்ட சிபநீ மதிப்புக்கள் சராசரியான / கிட்டத்தட்டமான மதிப்புக்களே.*

*இங்கு கொடுக்கப்பட்டுள்ளவை போக தமிழர்கள் பன்னெடுங்காலமாகப் பயன்படுத்தும் வேறு நிறப்பெயர்கள் என்னென்ன? உங்கள் எண்ணங்களுக்கு எட்டிய நிறப்பெயர்களை இங்கு பகிர்ந்திடுமாறு வேண்டிக்கொள்கிறேன். அவற்றிற்கு சிபநீ மதிப்பும் தெரிந்தால் அளித்திடுங்கள்.*

***நிறமின்மை:-***

*கறுப்பு - கார் - கரி - கருமை (0, 0, 0)*

***ஓர்நிறம்:-***

*1) கடற்படைநீலம் (0, 0, 127)*
*2) நீலம் (0, 0, 255)*
*3) பச்சை - பசுமை (0, 127, 0)*
*4) வெளிர்பச்சை (0, 255, 0)*
*5) அரக்கு (127, 0, 0)*
*6) சிவப்பு - செம்மை (255, 0, 0)*

**ஈர்நிறக்கலவை:-**

*1)* இளமயில்நீலம் *(0, 127, 127)*
*2)* இளநீலம் *(0, 127, 255)*
*3)* வெளிர்பச்சை *(0, 255, 127)*
*4)* மயில்நீலம் *(0, 255, 255)*
*5)* அவுரி(வைலட்) *(63, 0, 255)*
*6)* செவ்வூதா - கத்தரிப்பூ(பர்பிள்) *(127, 0, 127)*
*7)* ஊதா *(127, 0, 255)*
*8)* வாடாமல்லி *(200, 0, 200)*
*9)* ரோசா *(255, 0, 127)*
*10)* செந்நீலம் *(255, 0, 255)*
*11)* கொக்கோ *(123, 63, 0)*
*12)* பழுப்பு *(127, 63, 0)*
*13)* இடலை(ஆலிவ்) *(127, 127, 0)*
*14)* கிளிப்பச்சை *(127, 255, 0)*
*15)* எலுமிச்சை *(192, 255, 0)*
*16)* செம்மஞ்சள் - இனிமிச்சை(ஆரஞ்சு) *(255, 127, 0)*
*17)* மா *(255, 200, 0)*
*18)* பொன் *(255, 215, 0)*
*19)* மஞ்சள் *(255, 255, 0)*

**மூநிறக்கலவை:-**

*1)* குங்குமப்பூ *(103, 38, 6)*
*2)* மூக்குப்பொடி *(109, 88, 67)*
*3)* காப்பிப்பொடி *(111, 78, 55)*
*4)* சிலேட் *(112, 128, 144)*
*5)* சாம்பல் *(127, 127, 127)*
*6)* குறிஞ்சி *(173, 149, 223)*
*7)* மருதாணி *(175, 127, 41)*
*8)* மரூண் *(176, 48, 96)*
*9)* வெண்சாம்பல் *(190, 190, 190)*
*10)* கடல்நீலம் *(128, 255, 212)*
*11)* வான்நீலம் *(135, 206, 235)*
*12)* செம்பு *(184, 115, 51)*
*13)* காக்கி *(189, 183, 107)*
*14)* கத்தரிநீலம் *(204, 204, 255)*
*15)* செம்மண் *(205, 92, 92)*
*16)* வெண்கலம் *(205, 127, 50)*
*17)* இலவங்கப்பட்டை *(210, 105, 30)*
*18)* சுட்டமண் *(226, 114, 91)*

*19) குங்குமச்சிவப்பு (227, 66, 52)*
*20) இளவூதா(லாவெண்டர்) (230, 230, 250)*
*21) வெளிர்காக்கி (240, 230, 140)*
*22) பனிநீலம் (240, 248, 255)*
*23) காவி (244, 196, 48)*
*24) கோதுமை (245, 222, 179)*
*25) தக்காளி (255, 99, 71)*
*26) பவழம் (255, 127, 80)*
*27) ஒண்ணிளஞ்சிவப்பு (பிங்க்) (255, 20, 147)*
*28) இளஞ்சிவப்பு(பிங்க்) (255, 192, 203)*
*29) தயிர்வெள்ளை (255, 253, 208)*
*30) பனிவெள்ளை (255, 250, 250)*
*31) தந்தவெள்ளை (255, 255, 240)*
*32) வெள்ளை - வெளுப்பு - வெண்மை (255, 255, 255)*

*பல நிறங்கள் கொண்ட பூக்களுக்கும் காய்கனிகளுக்கும் பட்டை மற்றும் வேர்களுக்கும் உண்டான தமிழ்ப்பெயர்களையும் பயன்படுத்தலாம். இச்சிறப்பு நிறங்களுக்கான பெயர்கள் வேறு மொழிகளில் இல்லாமல் இருக்க வாய்ப்புள்ளது. காட்டாக:*

*1) குறிஞ்சியூதா*
*2) எருக்கூதா*
*3) கருவிளையூதா*
*4) காந்தள்செம்மை*
*5) காயாநீலம்*
*6) நாகலிங்கசிவப்பு*
*7) மருதச்சிவப்பு*
*8) பலாசம்செம்மஞ்சள்*
*9) சண்பகமஞ்சள்*

## 28. கலைச்சொல்லாக்க உத்திகள்

***— திருத்தம் பொன். சரவணன்***

***1. சங்கச்சொல் உத்தி:***

*கலைச்சொல் என்பது சொற்செறிவும் பொருட்செறிவும் கொண்டதாக இருத்தலே முதல் விதி என்பதால் சங்க இலக்கியச் சொற்களை அடிப்படையாகக் கொண்டு கலைச்சொற்களைப் படைக்கலாம். இதன்மூலம் தற்போது வழக்கில் இல்லாத சங்ககாலத் தமிழ்ச் சொற்கள் அழிந்துபோகாமல் மீண்டும் மக்கள் வழக்கிற்கு வரும். சான்றாக, WATCH TOWER, SLAUGHTER HOUSE ஆகிய சொற்களுக்குப் புதிய பெயர்களைப் படைக்காமல், அதே பொருளைத் தருகின்ற இதணம், நூழில் போன்ற சங்கச் சொற்களைப் புழக்கத்திற்குக் கொண்டுவரலாம்.*

***2. ஒருபொருட் பன்மொழி உத்தி:***

*கலைச்சொற்களைப் படைக்கும்போது அவற்றில் உள்ள எழுத்துக்களின் எண்ணிக்கை ஐந்துக்கு மிகாமல் இருப்பது சிறப்பானது. காரணம், நீண்ட சொற்களைப் பயன்படுத்துவதற்கு மக்கள் தயக்கம் காட்டுவர். சுருக்கமான கலைச்சொல் அமைக்கப் பெரிதும் உதவுவது ஒருபொருட் பன்மொழிகள் ஆகும். சான்றாக, அறிவு என்னும் பொருளைக் குறிப்பதற்கு மதி, மருங்கு, புலமை, காட்சி, நூல் போன்ற பல சொற்கள் உண்டு. இந்த அடிப்படையில், ARTIFICIAL INTELLIGENCE என்னும் சொல்லுக்குச் செயற்கை நுண்ணறிவு என்றோ செயற்கை அறிவு என்றோ நீளமான சொற்களைப் படைக்காமல் சுருக்கமாக, செய்மதி என்று கலைச்சொல் படைக்கலாம்.*

***3. தலைக்கூட்டு உத்தி:***

*தகுதியான சுருக்கமான கலைச்சொற்களை அமைக்க இயலாதபோது, தலைக்கூட்டு ( ACRONYM ) முறைப்படிக் கலைச்சொற்களைப் படைக்கலாம், சான்றாக, AIR CONDITIONER என்பதற்குக் குளிர் காற்றுப் பெட்டி என்பதைப் போல நீளமான பெயர் வைக்காமல் தபனி என்று சுருக்கமாகப் பெயர் வைக்கலாம். தபனி என்பது 'தண் பத நிறுவி' என்ற பெயரின் முதல் (தலை) எழுத்துக்களைக் கூட்டிப் பெறப்பட்டதாகும். இதேமுறைப்படி, AIR COOLER க்குப் புபனி (புனல் பத நிறுவி) என்று அமைக்கலாம்.*

***4. மூலச்சொல் உத்தி:***

*ஒரு ஆங்கிலச்சொல்லுக்குத் தமிழில் கலைச்சொல் அமைக்கும்போது அந்த ஆங்கிலச் சொல்லுடன் தொடர்புடைய பிற ஆங்கில சொற்களுக்கும் தமிழ் மூலச்சொல்லை ஒட்டினாற்போல கலைச்சொற்களைப் படைக்கமுடியுமா என்று பார்க்கவேண்டும். சான்றாக, AMPLIFIER என்னும் சொல்லுக்கு ஒலிபெருக்கி என்று பெயர் வைத்தால், AMPLE, AMPLIFY, AMPLIFICATION ஆகிய சொற்களுக்கு ஒலிபெருக்கி*

என்னும் சொல்லின் அடிப்படையில் கலைச்சொல் படைக்க இயலாது. மேலும் *AMPLIFY* என்பது ஒலியுடன் மட்டும் தொடர்புடையதன்று. எனவே, இவற்றிற்குக் கீழ்க்காணும் மூலச்சொல் முறைப்படிக் கலைச்சொல் படைக்கலாம்.

மூலச்சொல்:

*AMPLE* = மலிர்
*AMPLIFY* = மலிர்த்து
*AMPLIFICATION* = மலிர்ப்பு
*AMPLIFIER* = மலிர்த்தி / மலித்தி
*AMPLIFIED* = மலிர்த்திய

**5. கிளைப்பெயர் உத்தி:**

ஒரே பொருளைக் குறிக்கும் பல்வேறு ஆங்கிலக் கிளைப் பெயர்களுக்கு ஒரே பொருளைக் குறிக்கும் பல்வேறு தமிழ்க் கிளைப்பெயர்களை இடமறிந்து கலைச்சொல்லாகப் படைக்கலாம். சான்றாக,

*SKIN* = உரி
*LEATHER* = தோல்
*HIDE* = சொலி
*DERMIS* = அதள்
*EPIDERMIS* = மீயதள்
*HYPODERMIS* = கீழதள்

**6. வகைப்பெயர் உத்தி:**

மேற்கண்டதைப் போல, ஒரே வகையினைச் சேர்ந்த பல பொருட்களுக்குத் தமிழில் இணையான பெயர்கள் இல்லாதபோது புதிய பெயர்களை மிகச்சிறிய வேறுபாட்டுடன் கூட்டாகச் சமைக்கலாம். சான்றாக,

*VIDEO* = நுது
*CINEMA* = இனுது (இன் + நுது)
*BIOSCOPE* = காணுது (காண் + நுது)

**7. புத்தாக்க உத்தி:**

வழக்கில் இல்லாத சங்கத் தமிழ்ப் பெயர்ச்சொற்களின் ஈற்றில் சிறிய மாற்றங்களை உண்டாக்கிப் பல வினை மற்றும் பெயர்ச்சொற்களைப் புதிதாக உருவாக்கிப் பயன்படுத்தலாம். சான்றாக, உலவை என்பது காற்றைக் குறிக்கும் சொல்லாக இருக்கும்நிலையில், இதிலிருந்து கீழ்க்கண்டவாறு புதிய வினை / பெயர்ச்சொற்களைப் படைக்கலாம்.

*AIR* = உலவை
*AERO* = உல
*AERATE* = உலப்பு
*AERATION* = உலப்பம்
*AERATOR* = உலப்பர்

*AERATED WATER = உலப்பறல்*

***8. உருவொப்பு உத்தி:***

*சில ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் கலைச்சொல் படைக்கும்போது உருவொப்பு முறையினைப் பயன்படுத்தலாம். சான்றாக, உருவ / வடிவ ஒப்புமையின் அடிப்படையில் கீழ்க்காணும் சொற்களைப் படைக்கலாம்.*

*GEAR (NOUN) = துத்தி (காய்) >>> GEAR (VERB) = துத்து*

*NUCLEUS = பொகுட்டு >>> NUCLEAR = பொகுட்ட, NUCLEON = பொகுடி*

***9. வினையுவமை உத்தி:***

*சில ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் கலைச்சொல் படைக்கும்போது செயல் / வினையுவமை முறையினையும் பயன்படுத்தலாம். சான்றாக, வயலில் நுகம்கொண்டு கீழ்மேலாக உழுகின்ற செயலைக் கீழ்க்காணும் வகையில் ஒப்பிட்டுக் கலைச்சொற்களைப் படைக்கலாம்.*

*GRAPH (VERB) = நுகு*

*GRAPH (NOUN) = நுகி*

*GRAPHY = நுகுதி*

*GRAPHER = நுகுதர்*

*GRAPHICS = நுகியம்*

*GRAPHOLOGY = நுகியல்*

***10. பண்புவமை உத்தி:***

*சில ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழில் கலைச்சொல் படைக்கும்போது பண்புவமை முறையினையும் பயன்படுத்தலாம். ஒரு பண்பினைக் கொண்ட ஒரு பொருளின் பெயரை அதே பண்பைக் கொண்ட இன்னொரு பொருளுக்குப் பெயராக அமைக்கலாம். சான்றாக,*

*PHOTON = புகர்*

*PHOTONICS = புகரியம்*

*PHOTO = புகரி*

***11. தொழிலடைவு உத்தி:***

*பல பயன்பாட்டுப் பொருட்களுக்கான பெயர்களை அவற்றின் பயன்பாடு அல்லது தொழிலின் அடிப்படையில் வைக்கும்போது, அதன் நீளம் மிகாதவண்ணம் கீழ்க்காணுமாறு அமைக்கலாம். சான்றாக,*

*SCAN = தோயல்*

*XEROX = சாயல்*

*FAX = ஓச்சல்*

*PRINT = பொருநல்*

*PIZZA = மிசி (மிசைதல்)*

*BURGER = கதூ (கதுவுதல்)*

***12. துறைசார் உத்தி:***

*இதுவரை மேலே கண்டவை அனைத்துத் துறைகளுக்கும் பொதுவான உத்திகள் ஆகும். இவைதவிர, ஒவ்வொரு துறைக்கும் துறைசார்ந்த சிறப்பு உத்திகளும் உண்டு. அவை தனித்தனியே வடிவமைக்கப் படவேண்டும். சான்றாக, வேதியியல் துறைக்கான உத்திகள் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.*

*CARBON = கரி*
*CARBONACEOUS = கரிச*
*CARBONIC = கரிம*
*CARBO = கார்*

*OXYGEN = உயிர்வளி*
*OXY / OXYL = உய் / உஞ்ச்*
*OXIDE = உஞ்சை*

*HYDROGEN = உறைவளி*
*HYDRO = உறு*
*HYDRIDE = உறடு*
*HYDRATE = உறேடு*

தொடர்பு: திருத்தம் பொன். சரவணன்
*vaendhan@gmail.com*
*http://thiruththam.blogspot.com/*

## 29. காதல் ...

***— கவின்மொழிவர்மன்***

*உலகத்தில் எல்லா உயிர்களிடத்தும் காதல் இருக்கிறது. பூமி முதலான கோள்கள் சூரியனைச் சுற்றுவதும் காதல்தான். தாமரை, சூரியகாந்தி போன்றவை சூரியனைக்கண்டு மலர்வதும், மல்லிகை,முல்லை போன்றவை வெண்ணிலவைக் கண்டு மலர்வதும், தென்றலின் தீண்டலில் கார்முகில் பொழிவதும், திங்களின் வரவில் செங்கதிர் மறைவதும் காதலே. விலங்கினத்தும் காதல் உண்டு. தன் இனத்து உயிர்களுக்குப் பிறவற்றால் தீங்குநேர துடிக்கும் பறவைகளும் விலங்குகளும். தன் இணையைப் பிரிந்துவிட்டால் உணவின்றி சாகும் உயிர்களும் உண்டு.*

*காதல் யாருக்கும் யாவற்றுக்கும் சொல்லி வருவதில்லை, சொன்னாலும் போவதில்லை. இவர்மீதுதான் இப்போதுதான் வரவேண்டும் என்பதில்லை. எந்த வயதிலும் வரலாம். யார்மீதும் வரலாம். காதல் கண்ணுக்குத் தெரிவதில்லை. காற்றைப்போலத் தேகம் தீண்டுவதும் இல்லை. வானவில் போல வண்ணம் நிறைந்ததும் இல்லை. நிறமற்று,உருவற்று உணர்வுள்ள ஒன்றுதான் காதல்.* ***ஆதலால் கடவுள் எனச் சொல்லலாமா? ஆம்.சொல்லலாம்.***

*கடவுளைப் போலத்தான் காதலும். வெகுவாக சிலிர்க்க வைக்கும், சிரிக்க வைக்கும், சிறக்க வைக்கும். ஏன் இறக்கவும் வைக்கும். பெற்ற தாய்க்காகவோ உடன் பிறந்த பிறப்புக்காகவோ யாரும் உயிர் விடுவதில்லை. பெற்றோர்மேல் அன்பு தன்னை ஈன்றதால். பிள்ளைகள்மேல் அன்பு தன்னால் ஈன்றதால். உடன்பிறந்ததால் சகோதர அன்பு.*

*முன்பின் பார்த்தறியாது, முழுவதும் கேட்டறியாது, கண்ணோடுகண்பேசி கலந்துவிட்ட நொடிப்பொழுதில் உன்னோடுதான் வாழ்வெனக்கு என்று உயிரோடு பிணைவதுதான் காதல்.*

*வேறு எந்த உயிர்களிலும் இல்லை இதுபோன்ற ஒரு உணர்வு. உண்மை காதலில் தனது இணை தன்னை விட்டுச்சென்றாலும், தன்னையே வெறுத்தாலும், தான் நேசித்த இதயத்தால் தனக்கு வேதனை அவமானம் ஏன் உயிரே போகும் நிலை வந்தாலும், தன் காதலுக்காக அனைத்தையும் மகிழ்வோடு ஏற்கும் ஒரு உயிர்தான் மானுடப்பிறப்பு.*

*இந்தக் காதல் நிறைய பேரை சாதிக்க வைத்திருக்கிறது.*
*இந்தக் காதல் நிறைய பேரை சோதிக்கச் செய்கிறது.*
*இந்தக் காதல் நிறைய பேரை சிரிக்கவும் அழவும் வைத்திருக்கிறது.*
*காதலிக்காகவும் காதலனுக்காவும் உயிர்பிரிந்தவர்கள் ஏராளம் ஏராளம்.*

இதே காதலுக்காக கொலை செய்தவர்களும் உண்டு.  மிருகத்தை மனிதமாக்குவதும் மனிதத்தை இறைவனாக்குவதும் இந்தக் காதல்தான்.  இதேக் காதல்தான் ஒருவனைப் பைத்தியமாகவும் அறிவாளியாகவும் மாற்றுகிறது.

காதலின் சுகமானது காதலை வென்றவர்களுக்கு பெரும்பாலும் தெரிவதில்லை. காதல் முடிந்து கல்யாணமானபிறகு அவர்கள் காதலை கொன்றுவிட்டு கணவன் மனைவியாக மட்டுமே வாழ்கின்றனர்.
காதலில் தோற்றவர்கள் பெரும்பாலும் காதலுக்காகவே நினைந்து உருகி மருகி அழுது புலம்பி இறுதியில் இறந்தும் போகின்றனர்.  இங்கே மரிப்பது உடல் மட்டுந்தான்.

காதல் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. யாரையும் பொய்யாக நேசிக்காதீர். யாருடைய உணர்வுகளையும் குத்திக் கிழிக்காதீர்.  உணர்வைக் கொல்வதும் ஒரு கொலையே.  இவர்கள் தண்டனையில்லா மறைமுக கொலைகாரர்கள்.  இவர்களில் காதல் என்ற பெயரில் ஏமாற்றுபவர்களும்,காதலித்து ஏமாற்றுபவர்களும் அடக்கம்.

நேசிப்பதிலும் நேசிக்கப்படுவதிலும் ஒரு உயர்ந்த சுகம் இருக்கத்தான் செய்கிறது.  இதை எவ்வளவு விலை கொடுப்பினும் வாங்க இயலுவதில்லை.  எந்தக் கடையிலும் கிடைப்பதில்லை.  உண்மையான அன்பு உலகம் உள்ளளவும் அழிவதில்லை.    **ஆதலால் காதல் செய்வீர்...**

உன்மீது நான்
கொண்ட நேசம்
உலகிலே இல்லாத
மகரந்த வாசம்
காற்றோடும் மழையோடும்
கரைந்திடா பாசம்
கடலையும் வானையும்
தாண்டியே வீசும்,

விண்ணோடும் முகிலோடும்
உன்னுருவத் தோற்றம்
கண்ணோடு இணைந்த
கண்மணியாய் ஒளிவீசும்
இன்றல்ல நேற்றல்ல
இதுபோலே பாசம்
இறந்தாலும் இறவாது
நான்கொண்ட நேசம்.

தொடர்பு:  கவின்மொழிவர்மன் (kavinmozhitamil@gmail.com)

## 30. தண்ணீர்ப்பந்தல்?

***— முனைவர். ப.பாண்டியராஜா***

*கோடைக்காலம் விரைவாக நெருங்கிவந்துகொண்டிருக்கிறது. பருவ மழை பொய்த்துப்போன நிலையில், தண்ணீர்ப்பஞ்சம் தலைவிரித்தாடும் என்ற அச்சம் இப்போதே அனைவருக்கும் தோன்ற ஆரம்பித்துவிட்டது.*

*மிகுதியான தண்ணீர்ப்பஞ்சம் இருக்கும் இடங்களில் அரசியல் கட்சிகள் போட்டி போட்டுக்கொண்டு மக்களுக்குக் குடிநீர் வழங்க ஏற்பாடுகள் செய்யும். இவற்றைத் தண்ணீர்ப் பந்தல் என்று அழைப்பார்கள். இதுதவிர திருவிழாக் காலங்களில் கொடையுள்ளம் படைத்த சில செல்வர்கள் தெருவோரங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்திருப்பர்.*

*இந்த ஏற்பாட்டுக்குத் தண்ணீர்ப் பந்தல் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது?*
*நிழலுக்காக ஒரு பந்தல் அமைத்து, அதன் கீழே நீருள்ள பாத்திரங்களை வைத்திருப்பதால் இது தண்ணீர்ப் பந்தல் என்று அழைக்கப்படுகிறதோ? அவ்வாறு பந்தல்கள் அமைக்காமல் வீட்டு முற்றங்களில் சிலர் இதுபோல் செய்வார்கள். அங்கு பந்தலே இல்லாவிட்டாலும், அதுவும் தண்ணீர்ப் பந்தல்தான். தண்ணீர்ப் பந்தலில் தண்ணீர் முக்கியமா? பந்தல் முக்கியமா? தண்ணீர்தான்! எனவே இதனைப் பந்தல் தண்ணீர் என்று அழைப்பதுதானே சரியாகும்?*

*தமிழ் இலக்கியங்களை ஆயும்போது, இந்தத் தண்ணீர்ப் பந்தல் பெயருக்கான உண்மைக் காரணம் புலப்படுகிறது.*

*இந்தப் பாடலைப் பாருங்கள். மாடுகளை மேய்ப்பவர்கள் கோவலர்கள் எனப்படுவர். அவர்கள் பெரும்பாலும் கல்வியறிவில்லாதவராய் இருப்பர். மாடு மேய்க்கும்போது அவர்கள் கையில் எப்போதும் ஒரு கோலினை வைத்திருப்பார்கள். இவர்கள் மாடுகளை மேய்த்துக்கொண்டிருக்கும்போது ஒரு காட்டாறு தெரிகிறது. அண்மையில் மழை பெய்து மணல் சற்று ஈரமாகக் காணப்படுகிறது. இந்தக் கோவலர்கள் அங்குச் சென்று தம் கையிலுள்ள கோலால் மணலில் குழிபறிக்கிறார்கள். நிறைய மாடுகள் இருப்பதால் ஒரு பெரிய அகலமான குழியையே தோண்டுகிறார்கள். அண்மையில் மழை பெய்திருந்ததால் அங்கு மளமளவென்று நீர் ஊறுகிறது. மகிழ்ச்சியுடன் நிமிர்ந்துபார்த்த அவர்கள் திடுக்கிடுகிறார்கள். அவர்கள் எதிரே சற்றுத் தள்ளி ஒரு பெரிய யானை நின்றுகொண்டிருக்கிறது. பயந்துபோய் எழுந்து அவர்கள் ஓடிப்போய்த் திரும்பிப்பார்க்கிறார்கள். அந்த யானை சாவதானமாக அந்தக் குழியருகே வந்து ஊறியிருக்கிற நீரையெல்லாம் உறிஞ்சிக் குடித்துவிட்டுப் போகிறது. இந்தக் காட்சியை வருணிக்க வந்த சங்கப் புலவர் கூறுகிறார்:*

***கல்லாக் கோவலர் கோலில் தொடுத்த***
***ஆன் நீர்ப் பத்தல் யானை வெளவும்*** *– ஐங்குறுநூறு 304/1,2*

*தொடுத்த என்றால் தோண்டிய. ஆன் என்பது பசுக்கள். வெளவும் என்பது கவர்ந்துகொள்ளும். இங்கு புலவர் அந்த நீருள்ள பள்ளத்தைக் குறிப்பிடும் சொல்லைப் பார்த்தீர்களா? நீர்ப் பத்தல் என்கிறார் அவர். பத்தல் என்பதற்குத் தொட்டி, பள்ளம், குழி என்று பொருள்.*

*இந்த ஓரிடத்தில் மட்டுமன்றி இன்னும் பல இடங்களில் இந்தப் பத்தல்/பத்தர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் காணக்கிடக்கின்றன.*
*1.*
*வெயில் வெய்து உற்ற அவல் ஒதுக்கில்*
*கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி*
*ஆன் வழிப்படுநர் தோண்டிய பத்தல்*
*யானை இன நிரை வெளவும் - நற் 240/6-9*
*2.*
*சிரறு சில ஊறிய நீர் வாய் பத்தல்*
*கயிறு குறு முகவை மூயின மொய்க்கும்*
*ஆ கெழு கொங்கர் - பதிற் 22/13-15*
*3.*
*பய நிரை சேர்ந்த பாழ் நாட்டு ஆங்கண்*
*நெடு விளி கோவலர் கூவல் தோண்டிய*
*கொடு வாய் பத்தல் வார்ந்து உகு சிறு குழி - அகம் 155/7-9*
*4.*
*வேட்ட சீறூர் அகன் கண் கேணி*
*பய நிரைக்கு எடுத்த மணி நீர் பத்தர்*
*புன் தலை மட பிடி கன்றோடு ஆர - நற் 92/5-7*

*எனவே, இன்று நீருள்ள, வாயகன்ற ஒரு பெரிய பாத்திரத்தை அல்லது பள்ளத்தைச் சங்க வழக்கில் நீர்ப்பத்தல் என்றார்கள். இந்தப் பத்தல் பத்தர் என்றும் அழைக்கப்படும். இந்தப் பத்தல் என்ற சொல்லே, இப்போது பந்தல் என்று ஆகி, நீர்ப்பத்தல் என்பது தண்ணீர்ப் பந்தல் என்று மருவி வழங்குகிறது. எனவே தண்ணீர்ப் பந்தலில் உள்ள பந்தல் என்பது உண்மையில் பத்தல் என்ற சொல்லே. எனவே தண்ணீர்ப் பந்தல் என்பது தண்ணீருள்ள பாத்திரத்தைக் குறிக்கும்.*

*நன்றி: தினமணி செய்தித்தாளின் - தமிழ்மணி (10/3/2019)*

*தொடர்பு: முனைவர்.ப.பாண்டியராஜா (pipiraja@gmail.com)*
*http://sangacholai.in*
*tamilconcordance.in/*

## 31. ஆற்றுப்படையும் ஆறுபடையும்

*— முனைவர் ச.கண்மணி கணேசன்*

***முன்னுரை:***

*முருகக் கடவுளுக்கு உரிய படைவீடுகள் ஆறு என்னும் கொள்கை தமிழ்ச் சமுதாயத்தில் இன்றும் நிலவுகிறது. இக்கொள்கையை அடியொட்டியே ‘ஆண்டவன் கட்டளை’ என்னும் திரைப்படத்தில் ‘ஆறு மனமே ஆறு’ என்னும் பாடல் அமைந்தது. பழனிமலை, சுவாமிமலை, திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருத்தணிகைமலை, பழமுதிர்சோலைமலை என்ற ஆறு தலங்களும் முருகனுக்குரிய ஆறுபடைவீடுகள் என்னும் கருத்து அப்பாடலில் இடம் பெறுகிறது. ஏ.பி.நாகராஜன் இயக்கிய ‘கந்தன் கருணை’ என்னும் திரைப்படத்தில் பொதுமக்களின் அதே கருத்தை அடியொட்டி ‘அறுபடைவீடுகொண்ட திருமுருகா’ என்ற பாடல் இடம்பெற்றது. இப்பட்டியலில் உள்ள திருத்தணி என்ற தலத்தைச் செவ்வியல் இலக்கியங்கள் எதிலும் காண இயலவில்லை. பின்னர் தேவர் பிலிம்ஸ் தயாரித்த ‘தெய்வம்’ என்னும் திரைப்படம் ஏழாவது படைவீடாக கோயம்புத்தூர் அருகில் உள்ள மருதமலையைக் கூறலாம் என்று கருத்து உரைத்தது.*

***சிலப்பதிகாரம் சுட்டும் முருகத்தலங்கள்:***

*“சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே”-(பா - 8)*
*என்னும் குன்றக்குரவை நான்கு முருகத்தலங்களை வரிசைப்படுத்துகின்றது. இத்தலங்கள் எவை என்று அடையாளப்படுத்துவதில் அறிஞரிடையே காலந்தோறும் கருத்து வேறுபாடுகள் நிலவி வந்துள்ளன.*

*'செந்தில்' என்பது திருச்செந்தூர் என்பதில் இன்றுவரை கருத்து வேறுபாடு ஏதும் இல்லை.*

*'செங்கோடு' என்பது மேற்குமலைத் தொடரில் உள்ள சுருளி மலையின் ஒரு பகுதி ஆகும். இப்பதியை இளங்கோவடிகள் தன் நூலில் ஆங்காங்கு நெடுவேள் குன்றம் என்றும், மஞ்சுசூழ் சோலைமலை என்றும், வெண்வெலான் குன்று என்றும், செங்கோட்டு உயர்வரை என்றும் தொடர்புடைய பல பெயர்களால் அழைக்கிறார். இம்மலைத் தொடரில் உள்ள செங்குன்று ஒன்றின் தலைப்பாக அமைந்த உயர்மட்டத் தாழ்வரையில் அடர்ந்த காடுகளிடையே பழைமையான முருகன் கோயில் உள்ளது என்று சி.கோவிந்தராஜன் கூறுகிறார்.1 அரும்பதஉரைகாரர் சேலம் மாவட்டத்துத் திருச்செங்கோடு என்று குறிப்பிடுவதை உ.வே.சாமிநாதையர் ஏற்கிறார்; அடியார்க்கு நல்லார் மறுக்கிறார்2.*

*அரும்பதவுரைகாரரும், புலவர் மு.சுப்பிரமணியனும்; குறமகளிர் பாடும் 'வெண்குன்று' இன்றைய சுவாமிமலை என்கின்றனர்.3 இன்றைய சென்னைக்கு 80கி.மீ. மேற்கில் உள்ள தவளகிரி என்னும் குன்றையும், அதன் அடிவாரத்தில் உள்ள வெண்குன்று என்னும் சிற்றூரையும், குன்றின் மேலுள்ள இரண்டு குகைக் கோயில்களையும், கார்த்திகையன்று வெகுவிமரிசையாகக் கொண்டாட்டம் நிகழ்வதையும், கன்னோசி மன்னன் தன் தாயோடு வந்து வழிபட்டமைக்குக் கல்வெட்டுச் சான்று இருப்பதாக பிலோ இருதயநாத் கூறுவதையும்4 கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.*

*பின்வந்த அருணகிரிநாதரோ சுவாமிமலையைத் 'திருவேரகம்' என்கிறார் (திருப்புகழ்- 217). திருவேரகம் என்பது மலைநாட்டகத்தே ஓர் பதி என்பார் நச்சினார்க்கினியர்.5 தென்கன்னட மாவட்டம் புத்தூர் வட்டத்திலுள்ள குமார பர்வதமே திருவேரகம் என்பார் மா.இராசமாணிக்கனார்.6 குமரி மாவட்டத்தில் தக்கலைக்கு அருகில் உள்ள குமாரபுரமே திருவேரகம் என்றும், நெல்லை மாவட்டத்தில் உள்ள வள்ளியூர் தான் திருவேரகம் என்றும் பொதுமக்களிடம் பல கருத்துக்கள் நிலவுகின்றன.7*

*வெண்குன்று எதுவாக இருப்பினும்; திருவேரகம் எதுவாக இருப்பினும்; செங்கோடு எதுவாக இருப்பினும்; இவ்வரிசையிலுள்ள முருகத்தலங்கள் நான்கு என்பதை மறுக்க இயலாது. பொதுமக்கள் தாமறிந்த முருகத்தலங்களை எல்லாம் முருகனின் படைவீட்டில் ஒன்று என்று கூறும் ஆர்வமுள்ளவர்கள் என்பதையும் மறுக்க இயலாது.*

***நக்கீரர் சுட்டும் முருகத்தலங்கள்:***

*திருமுருகாற்றுப்படையில் முருகவழிபாட்டிடங்களை அவ்விடத்தே பின்பற்றும் வழிபாட்டு முறைகளை அடியொட்டி நக்கீரர் வகைப்படுத்துகிறார். பாட்டின் முதற்பகுதியில் சில தலங்கள் பெயர் சுட்டிப் பட்டியலிடப்பட்டுள்ளன.*

*பட்டியலில் முதலில் இடம் பெறுவது 'திருப்பரங்குன்றம்' (அடி-12-77). இத்தலத்து முருகன் கடம்பமலர் அணிந்த தோற்றத்துடன் புடைப்புச்சிற்பமாகக் காட்சியளிப்பதும், அதையே நக்கீரரும் விதந்தோதுவதும்; பல நூற்றாண்டுகளின் அழியாத வரலாறு. இக்குன்றின் குகைக்கோயிலில் உள்ள முருகனைக் குன்றம்பூதனார் பரிபாடலில் போற்றுகிறார்(பா-18). அதே தொகைநூலில் நப்பண்ணனார் பாண்டியமன்னன் தன் தேவியரோடும், அமைச்சரோடும், பொதுமக்களோடும் இக்குன்றை வலம்வந்து வணங்கினான் என்கிறார்(பா-19). மன்னனால் நிறுவப்பட்டுப் பராமரிக்கப்பட்ட இத்தலம் மக்களாலும் வழிபடப்பட்டமையால் இது நகர் என்னும் வகையைச் சேரும் தலமாகும்8. கேசவனார், நல்லழிசியார், நல்லந்துவனார், நல்லச்சுதனார் போன்ற பலரும் திருப்பரங்குன்றத்து முருகனைப் போற்றி உள்ளனர் (மேற்.-6,8,9,14,17,21& பரிபாடல் திரட்டு 11).*

'அலைவாய்',' ஆவிநன்குடி', 'ஏரக'ம் ஆகிய மூன்று தலங்களிலும் வைதீக நெறிப்படி வழிபாடு நடந்தது என்று வருணிக்கிறார்.

'அலைவாய்' இன்றைய திருச்செந்தூர் ஆகும். வங்காள விரிகுடாவின் கரையில் ஆறுமுகங்களுடன், பன்னிரு கரங்களுடன் எழுந்தருளிக் கிழக்கு நோக்கி இருக்கும் சண்முகப்பெருமானின் ஒரு முகம் தீமுறை வழிபாட்டை நோக்கிக் கொண்டிருந்தது என்பது நீண்ட வருணனையில் இடம்பெறும் கூறு (திருமுருகு.-அடி-77-124). அகநானூறு (பா-266), புறநானூறு(பா-55), பரிபாடல்(பா-5), சிலப்பதிகாரம் (குன்றக்குரவை-பா-8), இறையனார் அகப்பொருள் ஏழாம் சூத்திரஉரை9, தொல்காப்பியக் களவியலின் 23ம் சூத்திர உரை10 அனைத்தும் இத்தலத்தைச் செந்தில் என்று சுட்டுகின்றன. இன்றும் இங்கு எழுந்தருளி இருக்கும் முருகனுக்கு செந்திலாண்டவர் என்று பெயர்.

'ஆவிநன்குடி' இன்றைய பழனித்தலம் ஆகும். முருகன் சிறையிட்ட பிரம்மனைச் (வேத மந்திரங்கள் ஓதும் தகுதி பெற்றவன்) சிறையிலிருந்து விடுவிக்க திருமால் வந்து முருகனை வழிபடும் தலம் இது என்றும், நூறு வேள்விகளைச் செய்து பதவி பெற்ற இந்திரனும் இங்கு வந்து வழிபடுகிறான் என்றும் பெருமைப்படுத்துகிறார். இது வைதீகம் போற்றப்படும் தலம் என்பதைக் குறிப்பாகச் சுட்டுகிறார்(திருமுருகு.-அடி.-126-176). குன்றின் மேல் குமரன் கோயிலுடன்; அடிவாரத்தில் ஆவிக்குடி என்னும் ஊரும் இத்தலமே ஆவிநன்குடி என்று நிறுவத் துணை செய்கின்றன.

இருபிறப்புடன் முத்தீப்பேணி பிரம்மச்சரியத்தை மேற்கொண்ட அந்தணர் ஈர ஆடையுடன் தலைமேல் கூப்பிய கைகளை உடையவராய் ஆறெழுத்து மந்திரத்தை ஓதித் திருவேரகத்தில் வழிபட்டனர் (திருமுருகு.-அடி.-176-189).

மேற்சுட்டிய நான்கு தலங்களை அடுத்து; மக்கள் கள்ளருந்திக் குரவை அயர்ந்து; வேலன் தெய்வமேறி ஆடும் வெறியாட்டு நிகழும் மலைப்புறங்களில் எல்லாம் முருகன் எழுந்தருளுகிறான்(திருமுருகு.- அடி.- 190- 217) என்கிறார்.

அடுத்து இடம்பெறுவது முருகன் அருள் வழங்கும் இடங்களின் நீண்ட பட்டியல் ஆகும். முச்சந்திகள், நாற்சந்திகள், ஆற்றங்கரைகள், குளத்தங்கரைகள், காடுகள், சோலைகள், ஊர்மன்றங்கள், பொதியில்கள், புதிதாகப் பூத்த கடம்ப மரங்கள், நீர்த்துருத்திகள், வழிபாட்டிற்குரிய தூண்கள் என எங்கெல்லாம் முருகனுக்கு விழா எடுக்கிறார்களோ; அங்கெல்லாம் முரசு அறைய, கொம்பு ஊத, விழாக்கால் நாட்ட, சேவற்கொடி உயர, மணிகள் ஒலிக்க, மணப்புகை கமழ, மலரலங்காரம் விளங்க; ஆடு, தினை, பூக்கள் முதலிய பலிப்பொருள்களைப் படைக்க; அவன் எழுந்தருளுகிறான்; வேலன் தெய்வமேறி ஆடுகிறான் (திருமுருகு.- அடி.- 218- 249) என்கிறார்.

முடிவாகப் 'பழமுதிர்சோலை'மலையின் வளத்தை வருணித்து முருகன் அத்தலத்திற்கும் உரியவன் (திருமுருகு.-அடி.-295-317) என்கிறார்.

*எவ்வாறு நோக்கினும் திருமுருகாற்றுப்படை ஐந்து தலங்களின் பெயரை மட்டுமே சுட்டுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை.*

***ஆறுபடைவீடு என்ற கொள்கை:***

*ஆறுபடைவீடு என்ற கொள்கை தோன்றியது எங்ஙனம் என்ற கேள்வி எழுகிறது. தமிழ்ச் சொற்றொடர்களைப் பிரித்து எழுதுங்கால்;*

*சோற்றுத்திரள் ---> சோறு + திரள்*
*வேற்று மனிதன் ---> வேறு + மனிதன்*
*நூற்றுக்கால்(மண்டபம்) ---> நூறு+கால்(மண்டபம்)*
*என்றாவது போல;*

*ஆற்றுப்படை --->ஆறு+படை*
*ஆற்றுப்படுகை --->ஆறு+படுகை*
*ஆற்றுக்கால் (பகவதி அம்மன்)--->ஆறு+கால்(பகவதி அம்மன்)*
*என்றாகிறது.*

*ஆறு என்னும் சொல் வழி என்னும் பொருள் தரும்போது ஒருஉருபன்; நதியைக் குறிக்கும் போது இன்னொரு உருபன். ஆறு என்னும் எண்ணுப்பெயரைக் குறிக்கும் போது வேறு ஒரு உருபன். மக்கள் ஆறு என்னும் சொல்லை நெறி/வழி என்று புரிந்து கொள்ளாமல்; எண்ணுப்பெயராகத் தவறாகப் புரிந்து கொண்டதால் முருகனுக்கு ஆறு படைவீடுகள் உண்டு என்று சொல்லத் தலைப்பட்டனர் எனலாம்.*

*அரசன் மக்களுக்காகக் கட்டிய தலத்திலாயினும், வேத மந்திரங்கள் ஒலிக்கும் கோயில்களிலாயினும், குன்றுதோறும் குறிஞ்சிக் குறவர் ஆடும் வெறியாட்டயர் களங்களிலாயினும், விழா எடுக்கும் எவ்விடமாயினும்; மனதார முருகனை வழிபட்டால் அவனருள் கிடைக்கும் என்று ஆற்றுப்படுத்துகிறார் (திருமுருகு.- அடி.- 250- 294) நக்கீரர். இந்த நோக்கம் மறக்கப்பட்ட போது ஆற்றுப்படை; ஆறு படை ஆனது என்பதே பொருந்தும்.*

***குறிப்புகள்:***

*1) சி.கோவிந்தராசன் - 'கண்ணகி கோட்டம்'- தமிழரசு -ஆகஸ்டு 1-1972-ப.-45-49*
*2) சிலப்பதிகாரம் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும்- உ.வே.சா (ப.ஆ.)- ப.- 51*
*3) மேலது& மு.சுப்பிரமணியன்- சிலம்புச் செல்வம்- ப.- 45*
*4) பிலோ இருதயநாத்-மக்கள் வணங்கும் ஆலயம்- ப.-ii -34*
*5) பத்துப்பாட்டு- முதற்பகுதி-திருமுருகு.- ப.- 77*

6) மா.இராசமாணிக்கனார்- பத்துப்பாட்டாராய்ச்சி-ப.- 130
7) தொ.பரமசிவன்- அழகர் கோயில்- மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பட ஆய்வேடு- 1980- பின்னிணைப்பு.
8) பார்க்க- சிலப்பதிகாரம் காட்டும் வழிபாட்டிடங்கள்- மின்தமிழ் மேடை- காட்சி 14- ஜூலை 2018
9) களவியல் என்ற இறையனார் அகப்பொருள்- நக்கீரர்(உ.ஆ.)- ப.-70
10) தொல்காப்பியம்- நச்சினார்க்கினியர்(உ.ஆ)- ப.-19

**துணைநூற் பட்டியல்:**


1. இறையனார் அகப்பொருள்- நக்கீரர் (உ.ஆ.)- கழக வெளியீடு-1976
2. இராசமாணிக்கனார்,மா.- பத்துப்பாட்டாராய்ச்சி- முதல் பாதிப்பு- 1970
3. கோவிந்தராசன்,சி.- ‘கண்ணகி கோட்டம்’- தமிழரசு-ஆகஸ்டு1972
4. சிலப்பதிகாரம் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார் உரையும்-உ.வே.சா. (ப.ஆ.)8ம் பதிப்பு- 1968
5. சுப்பிரமணியன்,மு.- சிலம்புச் செல்வம்- முதற்பதிப்பு-1973
6. தொல்காப்பியம்- நச்சினார்க்கினியர் (உ.ஆ.)- கழக வெளியீடு- 1972
7. பத்துப்பாட்டு- முதற்பகுதி- கழக வெளியீடு- 1973
8. பரமசிவன்,தொ.- அழகர் கோயில்- ம.கா.ப. முனைவர் பட்ட ஆய்வேடு-1980
9. பிலோ இருதயநாத்- மக்கள் வணங்கும் ஆலயம்- முதல் பதிப்பு- 1965
10. மின்தமிழ் மேடை- காட்சி 14- ஜூலை 2018



தொடர்பு: முனைவர் ச. கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)

## 32. கூத்தராற்றுப்படையில் உணவும் உருக்காட்சியும்

***— முனைவர் ச.கண்மணி கணேசன்***

***முன்னுரை:***

*இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் இயற்றிய 'மலைபடுகடாம்' என்ற பாடலே கூத்தராற்றுப்படை என்றும் பெயர் பெறுகிறது. கூத்தராற்றுப்படையில் குறமகள், கானவர், சிலம்படைந்திருந்த பாக்கத்தில் உள்ளோர், ஆட்டிடையர், வேடர், பழையர், மருதநில மக்கள், நன்னன் வேள் ஆகியோர் விருந்தோம்பிய சிறப்பு பேசப்பட்டுள்ளது. விருந்தயர்ந்த உணவின் வண்ணம், வடிவம், ஒட்டுமொத்தத் தோற்றம், மணம், சுவை, எவ்வாறு சமைத்தனர் என்ற குறிப்புகள் ஆங்காங்கு விரவிக் கிடக்கின்றன.*

*மனக்கண்ணில் வண்ணம் தோன்றுமாறு அமையும் புனைந்துரை வண்ணப்புல உருக்காட்சியாகும். மனதில் வடிவம் தோன்றுமாறு அமையும் வருணனை வடிவப்புல உருக்காட்சியாகும். ஒட்டுமொத்தத் தோற்றத்தை மனதில் எழுப்பினால் அது கட்புல உருக்காட்சியாகும். சமைக்கும் முறையையும், உணவையும் வருணிக்குங்கால் நம் மனதில் மணம் பரவினால் அது நுகர்புல உருக்காட்சி ஆகும். பாடற்பகுதி வலியுறுத்தும் செய்தியால் நம் நாவில் நீர் ஊறினால் அது சுவைப்புல உருக்காட்சி ஆகும். தொட்டுணர்வது போல் வருணனை அமையின் அது தொடுபுல உருக்காட்சி எனப்படும்.*

*இச்சமையல் கலைக் குறிப்புகளை நுண்ணிதாக ஆராயும் போது தமிழ்ச் சமூகத்தின் இக்கலை; இன்றும் நடைமுறையிலிருக்கும் பிற நாடுகளை இனம் காண இயல்கிறது. அத்துடன் இன்றுவரை நம்மிடம் நிலைத்திருக்கும் சங்க காலச் சமையல் முறைகள் என்னென்ன? நாம் மறந்துவிட்ட சமையல் முறைகள் என்னென்ன? என்பவற்றை வரிசைப்படுத்த முடிகிறது.*

*கூத்தராற்றுப்படையே இக்கட்டுரைக்கு முதல்நிலைத் தரவாக அமைகிறது. பிற சங்கஇலக்கியக் குறிப்புகளும், வலைத்தளத்தில் பெற்ற உணவுவகைகள், சமையல் முறைகள் முதலியனவும் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.*

***சோறும் குழம்பும்:***

*சோறு ஆக்கிக் குழம்பு ஊற்றிச் சாப்பிடும் முறை பற்றிய குறிப்புகள் கூத்தராற்றுப்படையில் உள்ளன. நெல்லரிசிச்சோறு, மூங்கிலரிசிச்சோறு, தினைச்சோறு, என மூன்றுவகைச் சோறுகள் ஆக்கப்பட்டன.*

*“குரூஉக்கண் இறடிப் பொம்மல் “-(மலை.-அடி-169)*
*எனத் தினைச்சோறும்,*

*“கழைவளர் நெல்லின் அரிஉலை ஊழ்த்து“-(மலை.-அடி-180)*
*என மூங்கிலரிசிச்சோறும்,*

*“பகர்விரவு நெல்லின் பல்வரி அன்ன*
*தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்*
*…………………………………………………………………..*
*பாலு மிதவையும் ………………………..”  -(மலை.-அடி.-413-417)*
*எனப் பால்சோறும், சமைத்து உண்ணப்பட்டமை பற்றிக் குறிப்புகள் உள்ளன.*

*தினை அரிசியிலிருந்து சோறாக்கும் வழக்கம் வடசீனாவில் இன்றும் உள்ளது.1 இத்தினைச்சோறு சிவந்த வண்ணத்தை உடையது என்பது ‘குரூஉ‘ எனும் பெயரடை மூலம் புலனாகிறது. இது வண்ணப்புல உருக்காட்சியாக அமைந்து நம் மனக்கண்ணில் சிவப்பு வண்ணத்தைத் தோற்றுவிக்கிறது.*

*நெல்லரிசியில் இரண்டு வகையினைக் கூத்தராற்றுப்படை குறிப்பிடுகிறது. அளவில் சிறிய அரிசி,*

*“நுண்ணேர் அரிசி”-(மலை.-அடி-440) என்றும்; நீண்ட அரிசி,*
*“நெடுவெண்நெல்லின் அரிசி”-(மலை.-அடி-564) என்றும்*
*வேறுபிரித்துச் சுட்டப்பட்டுள்ளது. இப்புனைவுகள் வடிவப்புல உருக்காட்சிகளாய் அமைகின்றன.*

*சோறு ஆக்கும் அரிசிகளின் வண்ணமும் வேறுபட்டு இருந்தது. மேற்சுட்டிய பால்சோறு பற்றிய மேற்கோள், பண்டமாற்றாகப் பெற்ற கலவை நெல்லின் பன்னிற அரிசி போன்று பல கிடாய் விரவிய செம்மறியும் வெள்ளாடும் உள்ள முல்லை நிலம் என்று பொருள்படுகிறது. இங்கு அரிசியின் வண்ணப்புல உருக்காட்சி விரிகிறது.*

*குழம்பு ஊற்றிய சோறு மிதவை என்று அழைக்கப்பட்டது. இரவுப்பொழுதில் இடையர் தமக்காகச் சமைத்து வைத்திருக்கும் ‘பாலு மிதவையும்’ என்றதனால் பாலூற்றிய நெல்லரிசிச் சோறு என்பது தெளிவாகப் பெறப்பட்டது.*

*அவரைப் புளிக்குழம்பு,*
*“செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன*
*வேய்கொள் அரிசி மிதவை சொரிந்த*
*சுவல்விளை நெல்லின் அவரையம் புளிங்கூழ்“-(மலை.-அடி.-434-436)*

*என வருணிக்கப்படுகிறது. அவரைப்புளிக்குழம்பு ஊற்றிய மூங்கிலரிசிச்சோறு சிவந்து விரிந்த வேங்கைப்பூப் போன்று இருந்தது என்பதால் இங்கும் அவ்வுணவின் வண்ணம் மனக்கண்ணில் விரிந்து வண்ணப்புல உருக்காட்சி ஆகிறது.*

*அவரைப் புளிங்கூழ் சமைக்கும் போது அக்குழம்பைக் கெட்டியாக்க மேட்டுநிலத்தில் விளைந்த நெல்லினின்று பெற்ற மாவைப் பயன்படுத்தினர். அரிசிமாவு சேர்த்து ஆக்கியமையாலேயே அது புளிங்கூழ் என்று அழைக்கப் பட்டுள்ளது. இன்றும் பச்சரிசி மாவு சேர்த்து மோர்க்குழம்பைக் கெட்டி ஆக்குகிறோம். பச்சை மொச்சைப் பொரியல், பீர்க்கங்காய்ப் பொரியல் முதலியவற்றுக்கு அரிசிமாவு சேர்க்கும் வழக்கம் உள்ளது. கம்பை இடித்து வேகவைத்து கம்மங்கூழ் என்றும், கேப்பையைத் திரித்து வேகவைத்து கேப்பைக்கூழ் என்றும் அழைப்பதால்; அரிசிமாவைச் சேர்த்துச் செய்த அவரைப் புளிக்குழம்பு 'அவரையம்புளிங்கூழ்' என்று பெயர் பெற்று இருப்பது பொருத்தமே. பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தரனார் 'அவரையம் புளிங்கூழ்' எனும் தொடருக்கு உரை எழுதுங்கால் 'அவரை விதையை இட்டுச் செய்த' என்கிறார்.2*

*முற்றிய அவரையின் விதைகளை மட்டும் வைத்துப் புளிக்குழம்பு செய்வதும் உண்டு. அவரைவிதைப் புளிக்குழம்பு, பிஞ்சாக இருக்கும் அவரைக் காய்களை வைத்துச் செய்யும் அவரைக்காய்ப் புளிக்குழம்பு இரண்டுமே வழக்கில் உள்ள உணவு முறை ஆகும்.*

*அவரையம் புளிங்கூழ் என்பது; சுவைத்துப் பழகிய நாவுடையோர்க்கு மனத்தால் அப்புளிப்புச் சுவையை உணரவைப்பது சுவைப்புல உருக்காட்சியாம்.*

***ஊன் கலந்து சமைத்த சோறு:***

*சோறு சமைக்கும் போது அத்துடன் மான்கறி, பன்றிக்கறி, ஆட்டிறைச்சி, மீனிறைச்சி போன்றவற்றைச் சேர்த்துச் சமைத்து உண்ணும் வழக்கம் பண்டு தமிழகத்தில் இருந்தது.*

*"பொன்னறைந்து அன்ன நுண்ணேர் அரிசி*
*வெண்ணெறிந்து இயற்றிய மாக்கண் அமலை "(மலை.-அடி.-440-442)*

*எனும் பகுதி வெள்ளி போன்ற வெண்மையான சோற்றுக்கட்டியின் இடையிடையே வெள்ளாட்டை வெட்டிச் சமைத்த கறித் துண்டுகள் ஆங்காங்கு அடர்ந்த வண்ணத்துடன் தெரிந்த தோற்றத்தை கண்முன் கொண்டுவருகின்றன. இது கட்புல உருக்காட்சியாக அமைந்துள்ளது.*

*"முள்அரித்து இயற்றிய வெள்ளரி வெண்சோறு*
*…………………………………………………………..*
*திண்டோள் நன்னர்க்கும் அயினி சான்ம்"-(மலை.-அடி-465-468)*

*என்பதால் முள்ளைக் கழித்து வெள்ளிய மீன்தசையோடு கலந்து ஆக்கின வெண்சோறு நன்னன் முதலிய மன்னரும் உண்ணத் தகுந்த மேன்மையான உணவு என்னும் கருத்தைப் பெறுகிறோம். மீன்தசையின் வெண்மையும், சோற்றின் வெண்மையும் சேர்ந்து அதன் சிறப்பை மேம்படுத்துவதுடன் வண்ணப்புல உருக்காட்சியையும் தோற்றுவிக்கின்றன.*

*விலங்கிறைச்சியைச் சேர்த்துச் சோறு சமைத்து உண்டமை 'ஊன்துவை அடிசில்' என்ற தொடரால் பதிற்றுப்பத்தின்(பா-45) மூலமும் தெளிவாகிறது.*

*பல்வேறு நாடுகளிலும் இவ்வாறு விலங்குகளின் இறைச்சியோடு சேர்த்துச் சோறு சமைக்கும் வழக்கம் இன்றும் உள்ளது.3 அரிசிச்சோற்றுடன் பன்றிக்கறி சேர்த்துச் சமைக்கும் வழக்கம் வியட்நாமில் உள்ளது. அங்கு அது chaolong heo என்று அழைக்கப்படுகிறது. பர்மாவில் அரிசிச் சோற்றுடன் பன்றிக்கறி சேர்த்துச் சமைத்து நோயுற்றோருக்கு உண்ணத் தருகின்றனர். அங்கு அதன் பெயர் san byohk என்பதாகும். மீனிறைச்சியுடன் சோறு கலந்து சமைக்கும் வழக்கம் கம்போடியா தேசத்தில் இன்றும் உள்ளது. அங்கு பரவலாகக் கிடைக்கும் பலவகைக் கஞ்சிகளுள் 'sea food conjee' என்பதும் ஒன்று. பிலிப்பைன் தீவுகளில் மீனிறைச்சி மணத்தோடு கஞ்சி பரிமாறப் படுவதுண்டு. அங்கு அது lugaw என்று அழைக்கப் படுகிறது. சீன தேசத்தில் முள் நீக்கப்பட்ட மீனுடன் சேர்த்துச் சமைக்கும் கஞ்சியைக் குழந்தைகளுக்குரிய உணவாகக் கொடுக்கின்றனர்.*

**பல இறைச்சிகளின் கலவையுடன் ஆக்கும் சோறு:**

*பல விலங்குகளின் இறைச்சியையும் கலந்து, மரக்கறியுடன் சேர்த்துச் சோறாக்கும் முறையைக் குறமகள் செயலின் மூலம் அறிகிறோம்.*

*''அருவிதந்த பழஞ்சிதை வெண்காழ்*
*வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை*
*முழவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை*
*பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ*
*வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழநின்*
*இன்புளிக் கலந்து மாமோராகக்*
*கழைவளர் நெல்லின் அரியுலை ஊழ்த்து*
*வழையமை சாரல் கமழத் துழைஇ*
*குறமகள் ஆக்கிய வாலவிழ் வல்சி ''-(மலை.-174-183)*

*என்ற பாடற்பகுதி பலாக்கொட்டைகள், கடமானின் கொழுத்த தசை, எய்ப்பன்றியின் நிணமிக்க தசை, பெண்நாய் கவ்விக் கொண்டுவந்த ஊன்தடி அனைத்தையும் கலந்து குறமகள் மூங்கிலரிசிச்சோறு ஆக்கியமையை விவரிக்கிறது. இச்சோற்றிற்கு அவள் மோரை உலையாக ஊற்றுகிறாள். அத்துடன் இனிய புளியும் சேர்க்கிறான். அவள் சமைத்த உணவு வெண்மையாகக் காட்சியளித்து மலைச்சாரல் முழுதும் மணத்தது*

*என்பதால் அசைவப் பிரியர்களின் மூக்கைத் துளைக்கும் நுகர்புல உருக்காட்சி அமைந்துள்ளமை வெளிப்படை.*

*'இன்புளிக் கலந்து' என்னும் தொடர் சிறப்பான சுவைப்புல உருக்காட்சி ஆகும். புளியின் பெயர்க்காரணமே அதன் புளிப்புச்சுவை என்று இருக்க இங்கு இனியபுளி என்று விரியும் தொடரின் நோக்கம் அறிந்து வியக்கத்தக்கது. இங்கு இடம்பெறும் இடப்பின்புலம் தென்கன்னடமாகிய கொண்கானமாகும். அங்குள்ள டும்கூர்புளி வணிகர்கள் இன்றும் போற்றும் விலைமிகுந்த நயம்சரக்கு என்பது நோக்கற்குரியது. அப்புளியின் சுவை தமிழகத்து நாட்டுப்புளி, கேரளத்தின் கொடம்புளி இரண்டினின்றும் மாறுபட்டு இன்றுவரை மக்கள் தேடிப்பெறும் சுவை மிகுந்த உணவுப்பொருளாகும். சுவைப்புல உருக்காட்சி விரிந்து இன்பம் தரும் பகுதி இது.*

*சமைக்கும் முறையைப் பார்க்குங்கால்; குறமகள் மோரை உலையாக ஊற்றுவது இன்றுவரை உள்ள வழக்கமே. கோடைக்காலத்தில் ஆக்கும் சோறு விரைவில் கெட்டுப் போகாமல் இருக்க இன்றும் மோர் சேர்த்துச் சமைப்பதுண்டு. கம்மஞ்சோறு,கேப்பைக்களி முதலியவற்றுக்கு உலையாக மோர் விடும் வழக்கம் தமிழகத்தில் இன்றுவரை நிலைத்திருக்கும் வழக்கமே ஆகும்.*

*அரிசியுடன் ஊன்கலந்து ஆக்கும் உணவில் புளிச்சுவை சேர்க்கும் வழக்கம் இன்றும் தொடரும் சமையல்முறை ஆகும். எந்த பிரியாணியாக இருப்பினும் இறுதியில் புளிப்பான எலுமிச்சைச் சாறு விட்டுக் கிளறி முடிக்கும் போக்கு இன்றளவும் உள்ள நடைமுறையே. குறவர் சமூகத்தினர் அசைவக் குழம்புக்கு அரைக்கும் மசாலில் புளியஇலை சேர்த்து அரைப்பர் என்பது களஆய்வில் திரட்டிய செய்தி. பிலிப்பைன் தீவுகளில் இறைச்சியுடன் புளி சேர்க்கும் வழக்கம் இன்றும் உள்ளது. Sabaw என்று அழைக்கப்படும் உணவில் பெரிய பெரிய காய்கறித்துண்டுகளும்,இறைச்சித் துண்டுகளும் கலந்திருக்கும். இது பசியைத் தூண்டக்கூடிய முதலுணவாக இல்லாமல் பசியைத் தீர்க்கக்கூடிய முழு உணவாகவும், அரிசிச்சோறுடனும் உண்ணப்படுகிறது. இதன் ஒரு வகையான Sinigang என்னும் உணவில் இறைச்சியுடன் புளியைக் கலக்கும் வழக்கமும் உள்ளமையை வலைத்தளம் காட்டுகிறது.4*

*இறைச்சியுடன் மரக்கறி சேர்த்துச் சமைக்கும் வழக்கம் இன்றும் நம்மிடம் உண்டெனினும்; பல்வேறு இறைச்சிகளைச் சேர்த்துச் சமைக்கும் வழக்கம் காணக் கிடைக்கவில்லை. இத்தாலியில் திருமணத்திற்காகச் செய்யும் சூப்பில் சேர்க்கப்படும் இறைச்சி உருண்டைகளைப் பன்றியிறைச்சியுடன் மீனிறைச்சியும் சேர்த்துச் செய்கின்றனர்.5*

*பலாக்கொட்டையையும் பன்றி இறைச்சியையும் சேர்த்துச் சமைக்கும் வழக்கம் மங்களூரிலுள்ள கத்தோலிக்கர்களிடம் இன்றும் உள்ளது. Dukramass என்று பெயர்பெறும் அவ்வுணவில் அவர்கள் தினையைக் கலந்தும் சமைப்பர்.*

**பொரித்து உண்ணும் பக்கஉணவு:**

*இறைச்சியை நெய்யில் பொரித்து அதைச் சோற்றுடன் கூட்டிச் சாப்பிட்டனர் பண்டைத்தமிழர். இங்கு சோறு முதன்மை உணவாகவும், தசைப் பொரியல் பக்க உணவாகவும் அமைகிறது.*

*“பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு*
*குரூஉக்கண் இறடிப் பொம்மல் …”-(மலை.-அடி-168-169)*
*என்னுங்கால் பெரிய தசைத்துண்டுகளை நெய்யில் பொரித்தெடுத்துத் தினைச்சோற்றுடன் தருவர் எனும் பொருளைப் பெறுகிறோம். இன்று பரவலாக உலகெங்கும் main dish, side dish என்று உண்ணும் முறை தமிழகத்தைப் பொறுத்தவரை 2000 ஆண்டு காலப் பழமை வாய்ந்தது என்பது தெளிவு.*

*மது அருந்தும் மக்களுக்குப் பக்க உணவாக மீனுணவு அமைந்தது. பெரிய கழுத்தமைந்த வாளைமீனின் தடியையும், யானையின் துதிக்கை போலிருக்கும், வரால்மீனின் துடிக்கண் போன்ற தடியையும் சேர்த்து பசிய முளைகளால் ஆக்கிய கள்ளைப் பருகலாம் என்று பழையர் மகளிர் விருந்தோம்பல் பண்பு பற்றிப் பேசுகிறது கூத்தராற்றுப்படை.(அடி.-455-464)*

**சுட்டு உண்ணல்:**

*இறைச்சியை நேரடியாக நெருப்பில் சுட்டும் உண்டனர். அப்படிச் சுடுங்கால் புகைநெடி பண்டத்தில் ஏறாதபடி சுட்டனர். புனத்தைக் காக்கும் கானவரின் அம்பு பட்டுக் குருதி சோரக்கிடந்த பன்றியைப் பக்குவமாக மயிர்போகச் சீவி; உலர்ந்த மூங்கில் உரசிப் பிடித்த நெருப்பில் சுட்டுண்ண பரிசில் பெற்ற கூத்தன்; தான் ஆற்றுப்படுத்தும் கூத்தனை அறிவுறுத்துகிறான்.*

*“.......................................ஏனம் காணின்*
*முனிகழை இழைத்த காடுபடு தீயின்*
*நனிபுகை கமழாது இராயினிர் மிசைந்து “-(மலை.-அடி.-247-249).*
*இவ்வடிகளில் நடைமுறைச் சிக்கல் இடம்பெறும் பாங்கு நினைந்து இன்புறத்தக்கது. பன்றியைச் சுடும் மணம் நம் மூக்கையோ மனத்தையோ எட்டவில்லை; ஆனால் விறகடுப்பிலும், கரியடுப்பிலும் சமைத்த காலத்தில் என்றாவது தவறுதலாக அமையும் புகைநெடி ஏறிய உணவின் நுகர்புல உருக்காட்சி மனதில் எழுகிறது.*

*முழுப் பன்றியைச் சுட்டு உண்ணும் வழக்கம் இன்றும் பிலிப்பைன்ஸ் நாட்டில் உள்ளது. இது திருவிழாக்காலத்திற்குரிய தனிச்சிறப்பு வாய்ந்த உணவாக அங்கு கருதப்படுகிறது6.*

**சுவை மேம்பாடு:**

*கொழுப்புடன் சேர்ந்த கறி விதந்து சிறப்பிக்கப்படுகிறது. இது சுவை அடிப்படையில் அமைந்த வருணனை என்பதில் ஐயமில்லை.*

*"கடமான் கொழுங்குறை ..."-(மலை.-175) என்னுங்கால் கட்புல உருக்காட்சியும், சுவைப்புல உருக்காட்சியும் ஒருங்கு அமைந்து நமக்கு மனவிருந்து அளிக்கின்றன.*

**உணவின் இறுதியில் இனிப்பு:**

*உணவுக்குப் பின்னர் இனிப்பு சாப்பிடும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் இருந்தது. அதற்குச் சர்க்கரையுடன் கொழித்த தினைமாவில் நெய்யிட்டு உண்டனர். வெள்ளாட்டங்கறிச்சோறு உண்டபின் குளிர்ந்த நுண்ணிய நெய்யிழுதை இட்டு சர்க்கரை சேர்த்த தினைமாவை உண்டால் வேறெதுவும் உண்ணத் தோன்றாது என்கிறார் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்.*

*"தண்ணென் உண்ணிழுது உள்ளீடாக*
*………………………………………………………….*
*உண்ணுநர்த் தடுத்த நுண்ணிடி நுவணை"-(மலை.-அடி.-442-445)*
*என்று அவர் குறிப்பிடுவது இன்றைய தினைமாவுருண்டையே ஆகும். இம்மேற்கோள் பகுதியில் இடம்பெறும் நெய் பற்றிய புனைவு சிறப்பான தொடுபுல உருக்காட்சி ஆக அமைந்துள்ளது. 'இழுது' எனும் சொல் இன்று விழுது எனப் பயனில் உள்ளது நெய்யின் மென்மையையும் அதைப் பெரிதும் சேர்த்துச் செய்யும் மாவுருண்டையின் மென்மையையும் ஒருசேர உணர்த்தி நிற்கிறது.*

**முடிவுரை:**

*இதுகாறும் கண்டவற்றான்; நெல்லரிசிச் சோறு ஆக்கிப் பால் ஊற்றி உண்பதும், பக்கஉணவாக இறைச்சியைப் பொரித்து உண்பதும், சோறுடன் இறைச்சியைச் சேர்த்துச் சமைப்பதும், இறைச்சியுடன் மரக்கறியையும் சேர்த்துச் சமைப்பதும், அவரைப்புளிக்குழம்பு ஊற்றிச் சோறு உண்பதும், உணவைக் கெட்டியாக்க அரிசிமாவு சேர்ப்பதும், மீன் பொரியலைக் கள் அருந்துவதற்குரிய பக்கஉணவாகக் கொள்வதும், இறைச்சியைச் சுட்டு உண்பதும், உணவின் இறுதியில் இனிப்பு உண்பதும் தமிழரிடையே 2000 ஆண்டுக்கால வழக்கமாக இருந்துள்ளது எனத் தெரிகிறது.*

*நெல்லரிசியில் பல வகைகளைச் சங்க காலத்திலேயே தமிழர் அறிந்திருந்தனர். உண்ணும் உணவின் வண்ணம், வடிவம், ஒட்டுமொத்தத் தோற்றம், மணம், சுவை, தொடு உணர்வு அனைத்தும் தமிழர் உணவுப் பழக்கத்தில் பேரிடம் பெற்று இருந்தன*

*தினைச்சோறு, மூங்கிலரிசிச்சோறு முழுப்பன்றியைச் சுட்டு உண்ணல், பல வகை இறைச்சிகளைக் கலந்து சமைத்தல் முதலியன தமிழர் மறந்துவிட்ட உணவுமுறைகளாம்.*

***சுருக்கக் குறியீட்டு விளக்கம்:***

*மலை.= மலைபடுகடாம்*

***குறிப்புகள்:***

*1. https://en.wikipedia.org/wiki/Congee*
*2. பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.)-பத்துப்பாட்டு மூலமும் உரையும்- தொகுதிii -மலைபடுகடாம் -பக்.154*
*3,4,5. https://en.wikipedia.org/wiki/Congee*
*6. https://en.wikipedia.org/wiki/List_of_Philippine_dishes*

***துணைநூற்பட்டியல்:***

*1. பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தரனார்(உ.ஆ.)-பத்துப்பாட்டு மூலமும் உரையும்- தொகுதிii- கழக வெளியீடு-2008*
*2. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.)- பதிற்றுப்பத்து- கழக வெளியீடு-2007*
*3. தமிழண்ணல்- சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள்- 3ம் பதிப்பு-2011*

*தொடர்பு: முனைவர் ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

## 33. ஜெர்மன் தமிழியல் — நெடுந்தமிழ் வரலாற்றின் திருப்புமுனை

**— தேமொழி**

*சமயம் பரப்பும் நோக்கில் அமைந்திருந்த ஐரோப்பியரின் தமிழக வருகை, தொன்று தொட்டு காலந்தோறும் தமிழகத்தில் இருந்துவந்த தமிழின் நிலைக்கும், தமிழ்க்கல்வியின் நிலைக்கும் ஒரு திருப்புமுனையாக இருந்தது. ஐரோப்பியர் தங்களது சமயப்பணி வளர்ச்சிக்காக தமிழறிய எடுத்துக் கொண்ட அணுகுமுறையும், தொழிற்புரட்சியின் காரணமாக உருவாகிய அச்சுநூல் பதிப்பிக்கும் முறையும் ஒருங்கிணைந்ததில் தமிழின் வளர்ச்சியும் தமிழ்க்கற்பித்தலின் வளர்ச்சியும் ஐரோப்பியர் வருகையால் ஒரு புதிய பரிணாமத்தை எட்டியது. தமிழின் வரலாற்றில் அது ஒரு திருப்புமுனையாக அமைந்தது என்பதுவே முனைவர் க. சுபாஷிணியின் ஆய்வின் முடிவு.*



*ஜெர்மனியில் வாழும் நூலாசிரியர் தனது தமிழறிவையும், தமிழாய்வு ஆர்வத்தையும், ஜெர்மானிய மொழியறிவையும், ஜெர்மனி மற்றும் மற்றபிற ஐரோப்பிய நாடுகளின் நூலகங்கள், அருங்காட்சியகங்கள், அரசின் ஆவணச் சேமிப்புக் கருவூலங்கள் ஆகியனவற்றைத் தக்கபடி பயன்படுத்திக் கொள்ள அவருக்குக் கிடைத்த வாய்ப்பையும் நழுவவிடாததால், தமிழ் குறித்த இந்த ஆய்வுநூல் கூறும் கருத்துக்களை உலகம் அறிவதற்கு வாய்ப்பு கிடைத்துள்ளது.அயல்நாடுகளில் வாழும் தமிழர் எவ்வாறு தங்கள் சூழ்நிலையில் கிடைக்கும் வாய்ப்பை பயன்படுத்தி தமிழ் குறித்த புதிய பரிமாணங்களை வெளிப்படுத்தலாம் என்பதைச் செயலில் காட்டும் வழிகாட்டியாக இருப்பதற்கு க. சுபாஷிணியைப் பாராட்டலாம். நூலுக்கு இத்துறையின் ஆய்வறிஞர் ஆ.சிவசுப்பிரமணியன் முன்னுரை அளித்திருக்கின்றார். இந்த நூலால் நாம் அறியும் செய்திகள் என்ன?*

*நூலின் முதல்பகுதி, கிறித்துவ சமயத்தின் வரலாற்றில் புரட்சிகரமான சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்ட ஜெர்மன் பாதிரியார் மார்ட்டின் லூதரால் புராட்டஸ்டண்ட் சமயப்பிரிவு உருவானதை விளக்குகிறது. ஜெர்மானிய புராட்டஸ்டண்ட் பாதிரியார்களுக்கு டேனிஷ் அரசு அளித்த ஆதரவும் அடுத்து கிட்டியது. ஐரோப்பிய கிறித்துவ சமயத்தின் இப்புதிய சீர்திருத்த கிறித்துவப் பிரிவினரின் சமயம் பரப்பும் நோக்கமும், ஆர்வமும், தேவையும் அவர்களைக் கடல்வழிப் பயணமாக தமிழகத்தின் தரங்கம்பாடியில் கொண்டு வந்து சேர்க்கிறது. இவர்களுக்கும் முன்னரே போர்த்துக்கீசியர் ஆதரவில் கத்தோலிக்க கிறிதுவப் பிரிவினர் தமிழகத்தில் தங்கள் இறைப்பணியைத் துவக்கியிருந்த நிலையில், தரங்கம்பாடி நகரை ஒரு நுழை வாயிலாகக் கொண்டு இந்தியாவில் 1706 ஆம் ஆண்டு டென்மார்க்கின் ஆதரவுடன் ஜெர்மானிய லூதரன் புராட்டஸ்டண்ட் சமயம் காலூன்றிய வரலாற்றைச் சுருக்கமான ஆனால் செறிவுள்ள அறிமுகமாகத் தருகிறார் சுபாஷிணி. இப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள நீளமான பட்டியல் ஒன்று காலக்கோட்டில் வரிசைப்படுத்தும் தரவுகள் மூலம் இறைப்பணிக்காக 1706 இல் தொடங்கி, முதலில் தமிழகம் வந்த பாதிரிமார்களில் சீகன்பால்க் (Bartholomäus Ziegenbalg) முதற்கொண்டு, பாதிரிமார் பலரின் வாழ்க்கைக் குறிப்புகளையும் நம்மால் அறிய முடிகிறது. இக்குறிப்புகள் மூலம் அவர்களின் இறைப்பணி சிறிது சிறிதாகத் தமிழகத்தில் தரங்கம்பாடியில் இருந்து கடலூர், தஞ்சை, திருச்சி, நெல்லை, சென்னை எனப் பல்வேறு பகுதிகளுக்கும் விரிவடைந்ததையும் அறிந்து கொள்ள முடிகிறது.*

*இத்திருச்சபையினரின் சமயம் பரப்பும் பணி தமிழகத்தில் கல்வி கற்பிக்கும் போக்கில் ஏற்படுத்திய மாற்றத்தை விவரிக்கிறது அடுத்த பகுதி. மக்களைச் சென்றடைய மக்களின் மொழியினை அறிவதற்கு வேண்டிய இன்றியமையாமை உணர்ந்த கிறித்துவ இறைப்பணியாளர்களான சீகன்பால்க், கரூண்ட்லர், சூல்ட்ஷே, ரைனுஸ் போன்றவர் தமிழ்க் கல்வி கற்கத் துவங்கியதுடன், தாம் தெரிந்துகொண்டவற்றை அடுத்து வரப்போகும் இறைப்பணியாளர்களுக்கு உதவும் நோக்கில் தமிழ் அரிச்சுவடி, சொற்களஞ்சியங்கள், இலக்கணநூல்கள், மக்களின் சமூக வாழ்வியல் குறித்த செய்திகள் என நூல்களாகத் தொகுக்கத் துவங்கியதை*

விவரிக்கிறார் ஆய்வாளர். இவர்களின் நூலாக்கப்பணிகளும், தொழில் நுட்ப உதவியுடன் அச்சுநூலாக்கி அவற்றை வெளிக்கொணரும் முயற்சியே நெடுந்தமிழ் வரலாற்றின் திருப்புமுனையாக அமைந்துவிட்டதை நூலின் மூலம் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

இறைப்பணியின் தொடர்ச்சியான ஒரு பகுதியாக கல்விப்பணியையும் முன்னெடுத்திருந்தனர் கிறித்துவ திருச்சபையினர். அவர்கள் நடத்திய இலவச கிறித்துவ பள்ளிக்கூடங்கள், அவை இயங்கிய காலஅட்டவணை, அவை கொண்டிருந்த பாடத்திட்டங்கள், ஆண்களுக்கான பள்ளிகள், பெண்களுக்கான பள்ளிகள் என 18 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் திருச்சபையினர் மேற்கொண்ட கல்விப் பணிகளையும் விரிவாக அறிந்து கொள்ள முடிகிறது. இப்பள்ளிகளில் மாணவர்களுக்கு தமிழ்க்கல்வியுடன், சமயக்கல்வியும், டேனிஷ், போர்த்துக்கீசிய மொழியும் கூட கற்பிக்கப்பட்டுள்ளது. குறிப்பாகக் கல்வி மறுக்கப்பட்டிருந்த ஒடுக்கப்பட மக்களுக்கும் கல்வி வழங்குவதில் அக்கறை காட்டினர் ஐரோப்பிய பாதிரிமார்கள். ஆண்களும் பெண்களும் இணைந்து படிக்கக்கூடிய பள்ளிகளும், தங்கும் விடுதிகளுடன் கூடிய பள்ளிகளும், மாணவர்களுக்கு இலவச உணவு, உடை மருத்துவ உதவிகள் வழங்கும் வகையில் சீகன்பால்க் காலம் முதலே துவங்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவருக்கு இலக்கணப்பிழையின்றி உரையாடுவது வளர்ச்சியின் பகுதியாக இருக்கிறது. ஆனால், பிறமொழியைப் பயில விரும்புவோருக்கு மாற்றுமொழியின் இலக்கணப் பயன்பாடு ஒரு சவாலாக அமைந்துவிடுகிறது. மேலும் தமிழில் பேசும் மொழியும் இலக்கிய நடையும் வெவ்வேறாக இருப்பதும் அயல்மொழிக்காரர்களுக்கு தமிழைக் கற்பதில் தடங்கல்கள் அதிகம். ஆதலால் இவ்வாறு சமயப்பணி செய்யும் நோக்கில் தமிழகம் வரும் அயலார் எவருடைய முதல் முயற்சிகள் பெரும்பாலும் தங்களைப்போல தமிழைக் கற்கவிருப்போருக்கு தமிழைக் கற்றுத்தர உதவும் இலக்கண நூல்களாக, அகராதிகளாக, சொற்களஞ்சியங்களாக மொழிகற்றலுக்கு குறிப்புதவி தரும் நூல்களாக அமைந்துவிட்டிருக்கிறது. பொதுமக்களின் பேச்சுமொழிக்கேற்ப சமயப்பரப்புரை செய்ய பேச்சுத் தமிழைக் கற்பதும் தேவையாக இருந்துவிடவே, பேச்சுத்தமிழைக் கற்கும் முறைக்காகவும் நூல்களையும் அகராதிகளையும் உருவாக்கியுள்ளார்கள். ஆகவே ஐரோப்பியர் விவிலியத்தையும், இறைநெறி நூல்களையும் மட்டுமே தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார்கள் என்ற எண்ணம் நமது மேம்போக்கான புரிதலாக அமைந்துவிடுகிறது.

திருச்சபையினரின் பணிகளை ஆவணப்படுத்தப்பட வேண்டிய தேவையும் பணிக்கடமையாக பாதிரிமார்களுக்கு இருந்துள்ளது. இது இறைப்பணிக்கு ஆதரவு தந்த டென்மார்க் அரசரின் கட்டளை. அவ்வாறு அவர்கள் நிகழ்வுகளை ஆவணப்படுத்தியதன் வாய்ப்பாக நம்மால் 300 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழக மக்களின் வாழ்க்கைமுறை என்னவென்று சமூகவியல் கோணத்தில் அறியவும்

முடிகிறது. சமயம் என்ற அடிப்படையில் வசதியான வாழ்க்கைமுறையைக் கொண்டிருந்தவராக பிராமணர்கள் இருக்க, அவர்கள் உருவாக்கும் பொய்கள் மூலம் தமிழர் ஏமாற்றப்படுவதாக தமது கருத்தை சீகன்பால்க் (1714 ஆம் ஆண்டின் நாட்குறிப்பு) ஆவணப்படுத்தியுள்ளார். மூடநம்பிக்கைகளை எதிர்க்கும் பரப்புரையை இவர் மேற்கொண்ட பொழுது, அதற்காக இவரைக் கொல்ல தீட்டப்பட்ட சூழ்ச்சியில் இருந்தும் உயிர் தப்பியுள்ளார் என்பதையும் அறிகிறோம். ஆசாரக்கோவை நூல் அக்கால மக்கள் வாழ்வில் முக்கிய இடம்பெற்றிருந்ததும் அவரது குறிப்பால் தெரிகிறது. சமயம், சமூகவியல், மக்களின் பண்பாடு, வாழ்வியல் முறைகள் ஆகியவற்றைத் தமிழ் இலக்கியங்கள், இலக்கியம் என்ற கோணத்திலோ வரலாறு என்ற கோணத்திலோ பதிவு செய்ததே இல்லை. நமக்கு சராசரி வெகுமக்கள் வாழ்வின் நிலை, அவர்கள் வாழ்ந்த சூழ்நிலை அறிவதற்கு வாய்ப்பிருந்ததில்லை. இறைவன் அல்லது அரசன் இவர்களைப் போற்றிப்பாடுவதற்கு மேல் இலக்கியவாதிகள் அக்கறை காட்டாத நிலையால் தமிழிலக்கிய உலகில் நாம் இழந்தது அதிகம். சிலப்பதிகாரம் மூலம் இளங்கோவடிகள் செய்த வழிகாட்டுதலை சமய மறுமலர்ச்சி காலம் கைவிட்டுவிட்டதன் விளைவு அது. லூதரன் இறைப்பணியாளர்கள் பதிவுகளால் அக்குறை சற்றே சரி செய்யப்பட்டுள்ளது.

ஐரோப்பியர் மத்தியில் இந்தியாவில் வாழ்பவர் நாகரிகமற்ற பண்பாட்டை உடையவர்கள் என்ற கருத்து நிலவியிருந்திருக்கிறது. அக்கருத்துக்கு முற்றிலும் மாறாக இலக்கியம், மொழி, மருத்துவம், கலை ஆகியவற்றில் இந்தியர் சிறப்புற்று இருந்தனர் என்பதை நேரடியாக அறிந்து கொண்ட மறைப்பணியாளர்கள் தாங்கள் அறிந்ததை தங்கள் எழுத்துகள் மூலம் ஐரோப்பிய மக்களுக்கு அறிவித்ததில் பெரும்பங்காற்றினர். முதலில் வந்த சீகன்பால்க் மலபார் (தமிழகம்) மக்களையும், தமிழையும் குறித்து ஐரோப்பாவிற்கு அனுப்பிய கடிதம் வழி இதை அறிவதற்கு முடிகிறது. அக்கடிதத்தில் நம்மில் பலர் எண்ணியிருப்பது போல மலபார் மக்கள் காட்டுவாசிகள் அல்லர், அவர்கள் பண்பட்ட மொழியைக் கொண்டவர்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார். இன்றைய அரசியல் எல்லைகளுடன் கூடிய இந்தியா என்ற நாடு உருவாவதற்கு முன்னர் வந்தவர் இந்த ஐரோப்பியர்கள் என்பதால், அவர்கள் ஆவணங்களில் அவர்களது தென்னிந்தியப் பகுதிக்கான பயணக்குறிப்பு ‘தமிழ்நாடு’ அல்லது ‘மலபார்’ என்றே குறிப்பிடப்பட்டுள்ளது என்பது வியக்க வைக்கும் தகவல். மேலும், தமிழகத்தில் இறைப்பணியாற்ற வருபவர்களை அவர்கள் தக்க முறையில் தயார்படுத்த விரும்பியதன் காரணமாக ஐரோப்பியப் பல்கலைக்கழகங்களில் தமிழைப் பாடமாக பயிற்றுவிக்க முயற்சியும் மேற்கொண்டனர்.

இவர்கள் தமிழக மருத்துவம், நோய் தீர்க்கும் மூலிகை ஆகியவற்றைக் குறித்தும் அறிந்துகொள்ள ஆர்வம் கொண்டிருந்தனர். இறைப்பணியாளர்களில் பெரும்பாலோர் அவர்களது இருபதுகளின் பிற்பகுதியில் இந்தியாவில் பணியேற்று, 40 வயதுக்குள் மறைந்து விடும் நிலையே இருந்திருக்கிறது. மீண்டும் திரும்பி தங்கள் நாட்டிற்குச் சென்றவரின் எண்ணிக்கையோ அல்லது ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகள் என நீண்ட காலம் வாழ்ந்தவரின் எண்ணிக்கையோ குறைவு. புதிய தட்பவெப்ப சூழ்நிலை

கொண்ட நாட்டில், புதிய உணவுமுறை வாழும் முறை ஆகியவை அவர்களை உடல்நலக் குறைவைத் தொடர்ந்து எதிர்கொள்ள வைத்ததுள்ளது. தங்கள் உடல்நலத்திற்காக இந்திய மருத்துவம் மற்றும் நோய் தீர்க்கும் முறைகளை அவர்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டியது வாழ்க்கையின் கட்டாயமாக இருந்தது. கரூண்ட்லர், பிரெசியர், வால்த்தர் போன்று மருத்துவத்தில் ஆர்வம் கொண்ட பாதிரிமார்கள் மருத்துவம் குறித்த சுவடிகளையும் சேகரித்தனர். அவற்றை தங்கள் நாட்குறிப்புகளில் குறிப்பிட்டனர். வருங்காலத்தில் அவர்களைப் பின்பற்றி தமிழகத்தில் இறைப்பணிக்காக வருபவருக்கு இக்குறிப்புகள் உதவக்கூடும் என்பது அவர்களது நோக்கம் என்று சுபாஷிணி சுட்டிக் காட்டுகிறார். அத்துடன் இறைப்பணியாளர்கள் தாங்கள் நடத்திய பள்ளியில் பயிலும் மாணவர்களுக்கு மருத்துவ உதவியும், அவர்களும் மருத்துவம் குறித்து பயிற்சி பெறவும் ஏற்பாடு செய்துள்ளனர் என்பதும் தெரிகிறது.

தமிழ்நூல் பதிப்புத் துறையின் முன்னோடிகள் ஐரோப்பியர் என்பதனை விளக்கும் முகமாக, ஐரோப்பியரின் வருகையால் ஓலைச்சுவடியில் இருந்து தமிழ், அச்சுநூல்கள் என்ற புதியவழியில் அடி எடுத்து வைத்தது என்பதற்கான சான்றுகளாக ஐரோப்பிய எழுத்தாளர்கள் மற்றும் அவர்களால் வெளியிடப்பட்ட நூல்கள் குறித்த தரவுகளை நூலில் ஒரு அத்தியாயமாகத் தொகுத்தளிக்கிறார் சுபாஷிணி. ஒரு தகவல் குறிப்பு தொகுப்பு நூலாக தமது நூல் பயன்படக்கூடிய அளவில், நூலின் இப்பகுதியில் சீகன்பால்க், க்ரூண்ட்லர், சூல்ட்ஷே, ப்ரெஸ்ஸியர், வால்த்தர், சர்ட்டோரியஸ், ஃபேப்ரிக்குஸ், ரோட்லர், ரைனுஸ், க்ரவுல் ஆகியோரின் நூல்கள் குறித்த தொகுப்பையும் முக்கியமான நூல்களையும், தரங்கம்பாடி அச்சுக்கூடம் வழியாக அச்சிடப்பட்ட நூல்கள் குறித்த தகவலையும் தொகுத்து வழங்குகிறார். தரங்கம்பாடியில் 1712 ஆம் ஆண்டில் சீகன்பால்க் அச்சகம் ஒன்றை உருவாக்கினார். இந்த அச்சுக்கூடத்தில் வெளியிடப்பட முதல் தமிழ்நூல் பைபிள்.

பைபிளின் புதிய ஏற்பாட்டை சீகன்பால்க் தமிழில் மொழிபெயர்த்து தரங்கம்பாடி அச்சகம் வழியே அச்சிட்டு 1714 இல் வெளியிட்டுள்ளார். சீகன்பால்க் எழுதிய நூல்களில் "Grammatica Damulica" என்ற தமிழிலக்கண நூல், "Genealogie Der Malabarishen Gotter" (மலபார் கடவுளர்கள் / தமிழ்க் கடவுளர்கள்) என்ற ஜெர்மானிய மொழி நூல்கள் குறிப்பிடத்தக்கவை. சீகன்பால்க் தாமும் உடன் பணியாற்றிய இறைப்பணியாளர்களும் தமிழில் எழுதியதாகவும், தமிழுக்கு மொழிபெயர்த்ததுமாக தமது கடிதமொன்றில் குறிப்பிட்ட 32 தமிழ் நூல்களின் பட்டியலை நூலாசிரியர் இறுதியில் இணைப்பாகக் கொடுத்துள்ளார். கத்தோலிக்க வீரமாமுனிவர் எழுதிய இலக்கண நூலும் 1718 ஆம் ஆண்டில் தரங்கம்பாடி அச்சுக்கூடத்தின் மூலம் வெளியிடப்பட்டுள்ளது. ஆகஸ்ட் பிரெட்ரிக் காமரெர் என்பவரால் ஜெர்மானிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் 1803 லேயே ஜெர்மனியில் அச்சுநூலாக வெளியிடப்பட்டுள்ளது. எழுத்துப்பணி அச்சுப்பதிப்புப்பணி மூலம் தமிழ் வளர்ச்சி புதுப்பரிமாணத்தை எட்டியதை இந்த அத்தியாயம் மிக விளக்கமாகத் தரவுகள் பலவற்றுடன் விளக்குகின்றது.

*அத்துடன் இந்நூலின் பின்னிணைப்பாக மற்ற ஐரோப்பிய நாடுகளில் இருந்தும், மற்ற கிறித்துவ சமயப் பிரிவுகளில் இருந்தும் தமிழகத்தில் இறைப்பணி செய்யும் நோக்கில் வந்தோர் 16 ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு எவ்வாறு தமிழ் வளர்ச்சியில் பங்கேற்றனர் என்ற தகவல் தொகுப்பும் கொடுக்கப்பட்டுள்ளது. இந்தப்பகுதி இத்துறையில் ஆய்வு செய்வோருக்கு இன்றியமையாத ஒரு பகுதி. இப்பகுதியில் ஆரம்பக்கால தமிழ் அச்சுநூல்கள் குறித்த வரலாறும் ஐரோப்பியர் வருகை எவ்வாறு ஓலைச்சுவடித் தமிழ் அச்சுப்பதிப்புகளாக திசைதிரும்பின என்பதை அறிவதற்கு நல்வாய்ப்பாக அமைகிறது. 15 ஆம் நூற்றாண்டின் அச்சு எந்திரம் உருவாக்கிய தொழிற்புரட்சியும், 20 ஆம் நூற்றாண்டின் தொழில்நுட்பப் புரட்சியும் விளைவித்த சமூகப்புரட்சிகளால் கல்வியும் மொழியும் பலரையும் சென்றடைய இந்த மாற்றங்கள்தானே உறுதுணையாக அமைந்துவிட்டிருக்கிறது.*

*போர்த்துக்கீசிய பாதிரியார் அண்டிறிக்கி அடிகளார் (Henrique Henrique) முன்னெடுப்பில் 1578 இல் வெளியான, 16 பக்கங்கள் கொண்ட 'தம்பிரான் வணக்கம்' (Christian doctrine in Tamil) என்று லத்தீன் மொழியில் இருந்து தமிழுக்கு மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு அச்சுநூலாக பதிப்பிடப்பட்ட நூலே தமிழில் வெளிவந்த முதல் அச்சுநூல். இந்திய மொழியில் முதலில் அச்சுநூல் வெளியானதும் தமிழில்தான். இவர்கள் தவிர்த்து ராபர்ட்-டி-நோபிலி, வீரமாமுனிவர் எனத் தன்னை குறிப்பிட்டுக் கொண்ட கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி போன்ற கத்தோலிக்கப் பிரிவு ஐரோப்பியர் ஆற்றிய தமிழ்ப்பணிகளும் என்றும் தமிழக வரலாற்றில் நிலைத்து நிற்பவை. இக்கால தொழில்நுட்ப வளர்ச்சியில் அச்சுநூல்கள் எண்ணிம வடிவ மின்னூல்களாக மாறிய திருப்புமுனையுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது, ஐரோப்பியர் கொணர்ந்த அச்சுநூல் பதிப்பு இயந்திரம் தமிழ் மொழி வளர்ச்சிக்குக் கொடுத்த தாக்கம் எளிதாகப் புரியும்.*

*தமிழின் வரலாற்றில், தமிழகத்தில் வரலாற்றில் விடுபட்ட பகுதிகளை, நாம் அறிந்திராத மக்களின் சமூக வாழ்வியல் குறிப்புகளை அறிவதற்குத் தமிழகத்தில் இறைப்பணியாற்றிய ஐரோப்பிய திருச்சபையினரின் நூல்களின் மூலமும் ஆவணக்குறிப்புகள் மூலமும் அறிவதற்கு வேண்டியத் தேவை இருப்பதை இந்த நூலைப்படிப்பதன் மூலம் நம்மால் தெரிந்துகொள்ள முடிகிறது. ஐரோப்பியர் பாதிரிமார்கள் கிறித்துவ சமயத்தை கீழை நாடுகளில் பரப்ப வந்தவர் என்ற குறுகிய நோக்கில் மட்டும் நாம் புரிந்து கொண்டிருப்பது இந்திய, தமிழக வரலாற்றிற்கு இழப்பு என்பதை ஆய்வாளர் எச்சரிப்பதை நூலைப்படித்து முடித்த பின்னர் உணர முடிகிறது. தொடர்ந்து தமிழர் தம் வரலாற்றை நிறைவு செய்யும் நோக்கில் நம் கவனத்தை அயல்நாட்டார் பதிவு செய்தவற்றில் இருந்து அறிந்து கொள்ளும் வண்ணம் ஆய்வுப்பணிகள் மேற்கொள்ளப்படவேண்டும். அவர்கள் எழுத்து வடிவில் விட்டுச் சென்ற தரவுகளில் நம் வரலாற்றின் பகுதிகள் நம் கவனத்திற்கு வராமல் அவரவர் நாடுகளின் ஆவணச் சேகரிப்புகளில் உள்ளன. ஆய்வாளர் சுபாஷிணி போன்றோரை முன்மாதிரியாகக் கொண்டு அயலகத்தில் வாழும் ஆய்வார்வமும் தமிழார்வமும்*

*உள்ளவருக்கு நல்லதொரு வாய்ப்பு. குறிப்பாகத் தமிழகத்தில் வணிகத்தொடர்பு அல்லது சமய பரப்பல் என்று ஆர்வம் காட்டிய ஐரோப்பிய நாடுகளான போர்த்துகல், ஸ்பெயின், இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி, நெதர்லாந்த் (ஹாலந்த்), டென்மார்க், இங்கிலாந்து ஆகிய நாடுகளில் வாழும் தமிழர் அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய வாய்ப்பைப் பயன்படுத்தி ஐரோப்பிய-தமிழக ஆய்வுகளை முன்னெடுக்க வேண்டும்.*

*நூலறிமுகம்:—*
*நூல்: ஜெர்மன் தமிழியல் — நெடுந்தமிழ் வரலாற்றின் திருப்புமுனை*
*ஆசிரியர்: முனைவர் க. சுபாஷிணி*
*வகை: ஆய்வு நூல்*
*வெளியீடு: காலச்சுவடு பதிப்பகம்*
*ஆண்டு: நவம்பர் 2018*
*விலை: ரூ 200*
*ISBN: 9789386820754*

*நன்றி - சிறகு: http://siragu.com/தமிழ்-வளர்ச்சியில்-ஐரோப்/*

*தொடர்பு: தேமொழி (jsthemozhi@gmail.com)*

## 34. தமிழ் ஆள; தமிழ் பேசு...

**— வித்யாசாகர்**

ஜென்மராஜ், ப்ரஷாத், ஹரிஷ், ஹிருதிக், கௌரி, சாந்தினி, சௌமியா, சோபியா, மிளன், ராபர்ட், ஆல்வின், நிஷா, அமித், முஸ்தாக், வித்யா, வித்யாசாகர் என பல பெயர்களை நாம் அன்றாடம் காண்கிறோம். ஆனாலும் இவையெல்லாம் தமிழ்ச்சொல் அல்ல எனும் ஏக்கம், மறுப்பு, வருத்தமும் நம்மிடையே இப்போதெல்லாம் எண்ணற்றோருக்கு உண்டு.

என்றாலும் மொழி வளர்ச்சி, வாழ்வுநிலை, சுற்றத்தார் பொருத்து மொழியும் பல மாறுதலுக்கிணங்க தானே திரிந்தும் கலந்தும் விடுகிறது. எனவே எதையும் முற்றிலும் தமிழில்லை என்று அகற்றிவிடலாமா? அல்லது தனித்தமிழ் அல்ல என்று ஒதுக்கலாமா? எல்லாம் தமிழ்தான் ஆயினும் கலப்புத்தமிழ் இல்லையா என்று வருந்தியே நகர்வதா???

இவையெல்லாம் சமஸ்கிருத, ஹிந்தி மற்றும் பிற மொழிச் சொற்கள் அல்லது பிற மொழிக் கலாச்சாரத்தால் வந்த சேர்ப்புகள் இல்லையா ? என்றாலும், அனைத்து மொழிக்குமே தாய் 'நம் ஆதி மொழி' தமிழ் தான் என்பதிலும் எண்ணற்றோருக்கு உலகளவில் மாற்றுக் கருத்தில்லையே.

எனவே இவையெல்லாம் தமிழுக்கு பிறமொழிகளிடமிருந்து வந்துள்ளது என்பதை விட, தமிழிலிருந்து தான் பிற மொழிகள் வந்துள்ளன என்பதை உலகமே இதோ மெல்ல மெல்ல ஏற்று வருகிறது. இவ்வருட கனடா ஜப்பான் லண்டன் அமெரிக்கா வளைகுடா நாடுகள் என உலகளாவிய பல பொங்கல் தினக் கொண்டாட்டங்களும் அதற்கொரு சான்று.

என்றாலும் குழந்தைகளுக்கு பெயரிடுகையில், விளக்கமளிக்க அவசியமற்றவாறு தனித்தமிழில் மிக அழகாக எவ்வித சார்புமற்று வைக்கலாம். வெண்ணிலா, அறிவு, செல்வன், மதிநிறை, குறள், அருவி, மல்லி.. என்றெல்லாம்.

வெள்ளைக்காரர்கள் இப்படித்தான் அவர்கள் மொழிக்கு நிறைவாக, ஸ்டவ், ஸ்ட்ரீட், ட்ரீ, ஸ்டீல், கேவ், மூன், கேட், ஃபிஷ், ஜாஸ்மின், காட் என்றெல்லாம் வைக்கிறார்கள்.

நாம் கூட முன்பு இப்படியெல்லாம் வைத்திருந்தோம்; சிவப்பு, செவலை, கருப்பு, தேனு, அடுப்பு, பறி, சூரியன், சந்திரன் என்றெல்லாம் நிறைவாக நம் சொல்லினிக்க மொழியினிக்க வைத்திருந்தோம்.

*ஏனென்றால்  பெயர் என்பது ஒருவரை அழைக்க, குறிப்பிட என்றாலும் வாழ்நாள் முழுவதும் வெற்றி வெற்றி என்று அழைப்பதொரு போற்றுதலும் இல்லையா? தாத்தா போல வரவேண்டும், பாட்டி போல இருக்க வேண்டும், சூரியனைப்பொல ஒளிர வேண்டும், அருவி போல நிறைய வேண்டும் எனப் பலவாறு எண்ணற்ற மேற்கோள்கள், எதிர்பார்ப்புகள், நன்னெறி கொண்ட சிந்தனைகள், மொழிச் சீர் கொண்ட சொற்கள், பலவகைகள், தவிர நேர்மறை எண்ணங்கள் புக, வர, வளர என பல ஆழப் பார்வை பெயர் வைக்கையில் உளம்நிறைவதுண்டு.*

*இடையே கூட ஒரு குழந்தைக்கு ‘மதிநிறைச் செல்வன்’ என்று வைத்தோம், அவர்கள் வீட்டில் மதி என்றழைக்கிறார்கள், அழைக்க ஏதுவாக இருக்குமென்று.*

*அப்படி மதி, குயில், அகில், முகில், குறள், வெள்ளி, வாணி, அருள், மணி, சுடர், பாரி, ஓரி, நீதி, கொடை, தனம், அன்பு, நதி, மணி, முத்து, மரகதம், பவளம், குழலி, எழிலி, குறளி, வெண்பா என எண்ணற்ற அழகிய தமிழ் சொற்கள் பெயர்கள் மிகச் சிறப்பாக நம்மிடையே உண்டு அவற்றையெல்லாம் நாம் பார்த்து பார்த்து வைத்துப் பழக பழக மேலுள்ள கலப்புவகைப் பெயர்களின் மீதான ஆசை தானே ஒழியும். பின் பழக்கமும் அங்ஙனம் மெல்ல மாறிவிடும்.*

*பிறமொழி புகுதலை தடுத்து நிறுத்துகையில் தான் நம் மொழியின் வளம் மிகப் பெருகும். இது நமது தமிழுக்கென்று மட்டுமல்ல அவரவர் தாய்மொழிக்கும் பொருந்தும்.*

*வெறுமனே, ஒரு எண்ண பரிமாற்றம் தானே மொழி என்றெண்ணக்கூடாது. தகவலறிவிக்கத் தானே என்று விட்டுவிடலாகாது தமிழை நம்மால். மொழி தான் நிலத்தைப் பிரிக்கிறது என்பார் ஐயா கவிஞர் வைரமுத்து.*

*அங்ஙனம் நிலம் பிரிகையில் இனம் மாறிவிடுமோ எனும் நெடிய பதட்டம் இருக்கிறது. சான்றுகளை நாம் பல மாநிலப் பிரிவுகளின் வழியே கண்டுதான் வருகிறோம். அன்று நாம் சேர்ந்து கட்டிய நதியிலிருந்து வரும் தண்ணீரின்றி மொழிவாரியாகப் பிரிக்கப்படுகிறது.*

*ஆக, இனம் மாறிக்கொண்டால் பழக்கவழக்கங்கள் சிதையும். அல்லாது, வெற்றிக் குவிப்புகள் இடம் மாறிவிடும். வரலாறு பிழையாக பிழையாக பேசப் புறப்பட்டு விடுவர் பலர். எண்ணற்ற குழப்பங்கள் மொழி திரிவதால் காலமாற்றங்களிடையே நிகழ்ந்துவிடும்.*

*எனவே மொழிமீது அக்கறை கொள்ளுங்கள். அவரவர் மொழிமீது அவரவர் அக்கறை கொள்ளுங்கள். தெலுங்கு பேச சந்தர்ப்பமோ, ஹிந்தி பேச சூழலோ,*

ஆங்கிலம் பேச கட்டாயமோ இருப்பின் அங்கே கசடற பேசுவோம். பேசப் பயிற்சி எடுப்போம்.

பல மொழி கற்றுக்கொள்வது பல மனிதர்களைப் புரிய அணுக ஏற்க மறுக்க வாதிடச் சொல்லித்தர வணிகம் செய்ய தேவைப்படும். பிற மொழிகளைக் கற்றல் என்பது திறனைக் கூட்டும். அவர்களின் பண்பாடு, வரலாறு உயர் குறிப்புகள் என அனைத்தையும் அறியலாம் தவறில்லை.

ஆனால் எவ்வாறு அம்மொழிகளைக் கற்று மிக நேர்த்தியாகப் பேசுகிறோமோ; அங்ஙனம் நம் மொழியையும் அதன் செழுமையோடு பேசுவதும் உச்சரிப்பதும் எழுதுவதும் பகிர்வதும் இன்றியமையாத ஒன்றாகும். எம்மொழியும் செறிவோடு பேசுகையில் கேட்கையில் அழகுதாம்.

ஆயினும் நமக்கு நமது தமிழ் மிகச் சிறப்பான ஒன்றாகும். மூப்பு நிறைந்த நமது மொழியைப் பிற மொழிகளைக் கலந்து சிதைப்பது நல்ல அறிவன்று. நீங்களே அதைத் தனித்து தமிழில் பேச பேச முற்றிலும் உணர்வீர்கள்.

எனவே முதலில் நேரம் சொல்வதில், வழி சொல்வதில், பெயரிடுவதில், தொழில் துவங்குவதிலிருந்து துவங்குங்கள். இவை தான் இன்றைய முழுச் சான்றுகள் நாம் நமது அழகு தமிழை சிதைத்துவிட்டோம் என்பதற்கு.

எனவே அங்கிருந்து துவங்கி எங்கும் நிறைந்த மொழி எம் தமிழை ஒரு தமிழரின் மரபு அறிய, மறம் உணர்த்த, மாண்பு நிலைக்கத் தூக்கி பிடித்திருப்போம். தவறில்லை. மெல்ல மெல்ல வெறியின்றி குழப்பம் விடுத்துத் தெள்ளு தமிழில் பேசி நமக்குள் நாம் மகிழ்வோமே உறவுகளே.

தவறாக எண்ணாதீர்கள், இவையெல்லாம் என் அறிவிற்குப் பட்டது. எல்லாம் சரியென்றில்லை. பிற கருத்துக்களும் அமையலாம். அவரவர் கருத்தை நான் ஏற்கத் தயார் எனினும் தமிழ் நம் மூலம் என்பதை எல்லோருமே அறிகிறோம், பிறகதை அழகுறப் பேசுவதற்கு, பெயர் சூட்டுவதற்கு தமிழை எப்போதும் நம் இனியதொரு அடையாளமாக வைத்திருப்பதற்குத் தயங்குவானேன்.

குறைந்த பட்சம் வீட்டில் பிறமொழி கலப்பின்றி பேச முயலுங்கள். நண்பர்களோடு உறவினர்களோடு அக்கம்பக்கம் பழகுகையில் தூய தமிழ்பேசி பழகுங்கள். குழந்தைகள் நம்மிடம் பேசுகையில், குழந்தைகளிடம் நாம் பேசுகையில், குழந்தைகள் பிறரிடம் பேசிப் புழங்குகையில் பிறமொழி கலவாமல் பேசச் சொல்லிக்கொடுங்கள்.

குழந்தைகள் நம் வரம். தமிழ் அவர்களுக்கு நாம் தரும் வரம். அதை உடைக்காது தருவோமே? எனக்கு நம்பிக்கையுண்டு; இப்போதெல்லாம் நம் மக்கள் மிக அறிவாகச்

செறிவாக பாரம்பரியம் கெடாது வாழத்துவங்கி விட்டனர். எனவே தமிழையும் அழகாக உணர்வோடு சேர்த்து கலப்பின்றி பேசி மகிழ்வாரென்று எனக்குப் பெரிய நம்பிக்கையுண்டு.

என்றாலும் ஒன்று உண்மை. மொழி சார்ந்து நாமெல்லாம் சிந்திக்க பழகிவிட்டோம். இனி; நம் காதுகளில் பேசக்கேட்கும் பேசப்படும் தமிழும் மேலும் இனித்துவிடும் என்பது சத்தியம்.

அதற்கு நன்றி. வணக்கம். வாழ்க!!

குறிப்பு: நீ முதலில் வித்யாசாகர் என்ற பெயரை தமிழில் வையிடான்னு திட்டி விடாதீர்கள். ஒன்று; வித்யா என்பது அன்று என் இறந்த தங்கையின் பெயர். அதனால் இன்று எனது மகளின் பெயர். எனவே அஃதென் பெயரும் கூட... எல்லாவற்றையும் விட, அறிவுக்கடல்னு தமிழில் வைத்தால் மிக அதீதமாகிவிடலாம். நான் கடல் அல்ல; நீங்களெல்லாம் கலந்திருக்கும் கடலின் ஒரு துளி.

தொடர்பு: வித்யாசாகர் - www.vithyasagar.com; (vidhyasagar1976@gmail.com)

## 35. கனவது விரியட்டும்; தமிழெங்கும் பரவட்டும்...

***— வித்யாசாகர்***

*தட்டுங்கள் திறக்கட்டும், தீப்பொறி பறக்கட்டும்*
*முட்டுங்கள் ஓடட்டும், தமிழரைத் தொட்டால் தீ மூளட்டும்,*
*எம்மட்டும் இவ்வாட்டம் யெம் அறம்வென்று அது காட்டும்*
*திமிராட்டம் ஒடுங்கட்டும் 'எம் தமிழருக்கு இனி விடியட்டும்!*

*திக்கெட்டும் நாடட்டும் தமிழர் கூடிகூடி வெல்லட்டும்*
*எந்நாடு எம்மக்கள் எல்லாம் ஈரேழுலகமும் பாடட்டும்,*
*கடுங்கோபம் பொங்கட்டும் கனல் கொட்டி ஆடட்டும்*
*சிந்திய துளி இரத்தத்திற்கெல்லாம் நீதி கிட்டும் வரை இனி போராட்டம்!!*

*வெண்சங்கு முழங்கட்டும்*
*தமிழா விழி விழியென யெம் பறை ஒலிக்கட்டும்,*
*நீதி கேட்டு சொற்கள் அறையட்டும்*
*நெற்றிப் பொட்டிலும் நேர்மையே தெறிக்கட்டும்!*

*எத்தனை மார்புகள் வேண்டும் விரியட்டும் விரியட்டும்*
*அவர்கள் சுடட்டும், நெஞ்சு நிமிர்த்தி நில் தாங்கட்டும்,*
*ஒரு தமிழச்சி, தமிழ்மண் காக்க*
*எம்முயிர் வேண்டுமோ; கொண்டு மூடட்டும்!*

*சடுசடுவென சுட்ட கூட்டம்; இனி எம் மண்ணில்*
*தலை காட்டாமல் நில்லட்டும்! குத்தி குத்தி*
*உயிர்க்கொன்ற கொண்டாட்டம் இனி*
*இறுதியென்றுச் சொல்ல எம் இளைஞர் கூட்டம் வெகுண்டெழட்டும்!*

*நடுநடுங்க ஓடட்டும் சதி தீர தூர ஒழியட்டும்*
*சட்டங்கள் திருந்தட்டும் திருத்தங்கள் வெல்லட்டும்,*
*திபுதிபுவெனக் கொன்ற வெறியாட்டம் இனி*
*அடியடியென அடிக்க ஓயட்டும்!*

*மூடுங்கள் மனக்கதவுகளை இனி*
*அறிவு கொஞ்சம் விழிக்கட்டும்,*
*மூடாத தொழிற்கழிவுகள் ஒழியட்டும், பிறர்*
*தந்திரங்கள் மொத்தமும் தோற்கட்டும்!*

மண் மெல்லச் சுவாசிக்கட்டும்
வசந்தம் மீண்டுமெமெக்கு வரட்டும்,
நாடு நாடு அது  நமக்காகட்டும், வீடு அரசியல் லட்சியமெல்லாம்
எம் விடுதலை விடுதலையொன்றே மூச்சாகட்டும்!!

தொடர்பு: வித்யாசாகர் - *www.vithyasagar.com;  (vidhyasagar1976@gmail.com)*

## 36. யார் தமிழன்?

***— நரசிங்கபுரத்தான் ஜெய். சுரேஷ்குமார்***

*அவன்: நீ எந்த நாட்டின் குடிமகன் ?*
*நான்: இந்தியன்*
*அவன்: உன் கடவுச்சீட்டு கொடு*

*அவன்: நீ எந்த இனம் ?*
*நான்: தமிழன்*
*அவன்: உன் சாதிச்சான்று கொடு*

*தமிழினத்தின் வரையறைக்கு*
*சாதிச்சான்றுதான் ஆதாரமா ?*
*திராவிடம் / தமிழ்த் தேசிய*
*அரசியலின் சா(வே)தனையா?*

*தொடர்பு: நரசிங்கபுரத்தான் ஜெய். சுரேஷ்குமார் (jaisureshkumar@gmail.com)*

## 37. வரலாற்றுக்கான உரிமை...

***— ஆர்.பாலகிருஷ்ணன், இஆப***

*"வரலாறு கிடக்கிறது*
*அது என்ன*
*வாழ்வாதாரமா?" என்று*
*கடந்து செல்லலாம்*
*கண்டு கொள்ளாமல்...*

*ஆனால் அப்படி*
*கடந்து செல்லவேண்டாம்.*

*வரலாறு*
*வாழ்ந்ததற்கான ஆதாரம்...*

*யார் யாரோ*
*அரியணை ஏறிய தேதியும்*
*அமரரான தேதியும்*
*அவர்களின்*
*அந்தப்புரத்து மக்கள் தொகையும்*
*அல்ல நமது அக்கறை.*

*இது நமது வரலாறு.*
*நமக்கான வரலாறு.*
*வேர்கள் பற்றிய*
*விசாரணை.*

*எத்தனை மலைகள்*
*ஏறி இறங்கினார்கள்*
*பாரியின், ஓரியின்*
*முன்னோர்கள்..*

*எத்தனை தலைமுறைகளின்*
*கதைகளை*
*கருவில் வைத்து*
*கடத்திவிட்டார்கள்*
*அவ்வைப் பாட்டிகள்...*

*இதோ*
*நோகாமல் நொங்கு*
*எடுக்கிறார்கள்*
*போலி வரலாற்றுப்*
*பொய்த் தரகர்கள்.*

*எழுதி "வைத்தது" தான்*
*வரலாறு என்றால்*
*23 ஆம் புலிகேசிகள் தான்*
*எப்போதும் நாயகர்கள்.*

*இதோ.*
*மொகஞ்சதாரோவின்*
*'நடன மங்கை' யின்*
*வளையல் கைகளில்..*
*இன்னும் வாசிக்கப்படாத*
*"வரலாற்றின்"வசீகரம்.*

*கீழடியின்*
*ஆழ அடுக்கில்*
*அகழ்ந்தெடுத்த பானையில்*
*இன்னும்*
*மிச்சம் இருக்கிறது*
*பொங்கலின் வாசம்.*

*இது*
*வெறும் பெருமை அல்ல*
*நமது*
*வரலாற்றுக்கான உரிமை...*

*— ஆர்.பாலகிருஷ்ணன், இஆப.,*
*புவனேஸ்வரம்.*

## 38. அறிவும் உணர்ச்சியும்

***— ரவி அண்ணாசாமி***

*அறிவொருபுறமு ணர்ச்சியோர்புறம்*
*அடிதடிஎன்னுள்ளும் அன்றாடம் நிகழும்*
*உணர்ச்சியோர் பேதையென் றறிவு கூறும்*
*அறிவே நீ பேடியெனுணர்ச்சி கூவும்*
*அந்தந்த நொடிகளில் ஒன்றே வெல்லும்*

*அறிவதுவும் உணர்ச்சியதும் பொருள்வேறல்ல*
*அடித்தளத்தில் இருபொருளும் ஒன்றாம் உணர்வாம்*
*தெரியும் பொருள் தெளிந்தபின்பே அறிவாய் மாறும்*
*அறியப்படா நிகழ்வு தோன்றில் உணர்ச்சி ஓங்கும்*
*ஆண்பெண்ணாய்க் கூடுமிவை ஆக்கம் சேர்க்கும்*
*அடக்குமுறை ஆட்சி பெற்றால் அழிவே மிஞ்சும்*

*இரண்டிலும் உணர்ச்சியே அறிவிலும் மேலாம்*
*நிகழுணர்வின் வெளிப்பாடாம் பயனும் நேராம் - அறிவை*
*அடக்குதலும் அனுமதிப்பும் அதனின் செயலாம்*
*உணர்ச்சியை உள்வாங்கி உணர்வில் நின்றால்*
*உண்மைப்பொருள் உணர்வாகி அறிவாய்த் தோன்றும்*
*உணர்ச்சியும் காதல்கொண்டறிவை நோக்கும்*

*தொடர்பு: ரவி அண்ணாசாமி (ravi.annaswamy@gmail.com)*

## 39. சந்தை

**— ருத்ரா இ.பரமசிவன்**

*சந்தை களம் கட்டியது.*
*தரகர்கள் துண்டுக்குள்*
*கைவிரல் நுழைத்து*
*பேரம் பேசுகிறார்கள்.*
*இன்னும் மணி அடிக்கவில்லை.*
*அப்போது தான்*
*முகங்கள் முகமூடிகளைக்*
*கழற்றிக்கொண்டு*
*வெளியே வரும்.*

*யாரிடம் சரக்கு இருக்கிறது?*
*யார் வாங்குகிறார்கள்?*
*யார் விற்கிறார்கள்?*
*இந்த மூடு மந்திரம் தான்*
*இந்த தேர்ச்சக்கரத்தை*
*உருட்டிக்கொண்டு இருக்கிறது.*
*இது "காகித நதியில்"*
*நடைபெறும் கும்பமேளா.*
*கங்கைகளும் யமுனைகளும்*
*காவிரிகளும்*
*மனிதர்களின் வாக்கு ஆபாசங்களால்*
*சாக்கடைகளாக உருமாறின.*

*திருவிழாவின் நெருக்கடிகளில்*
*பலூன் விற்பவர்கள்*
*சவ்வு மிட்டாய் விற்பவர்கள்*
*பொம்மைகள் விற்பவர்கள்*
*தள்ளுவண்டிகளில்*
*ஈக்களோடும் பூச்சிகளோடும்*
*தின் பண்டங்கள் விற்பவர்கள்.*
*மிளகாய் பஜ்ஜி இனிப்பு பூரி*
*இத்யாதி இத்யாதி*
*விற்பவர்கள்*
*சில்லரைச்சத்தங்கள் சலசலக்க*
*மொய்த்துக்கொண்டிருக்கிறார்கள்.*
*கெடுபிடி செய்யும்*
*காவலர் வாகனங்கள்*
*ஜனத்திரளை விலக்கி விலக்கி*
*வழி ஏற்படுத்துகின்றன,*
*காந்தியின் புன்னகைக்கட்டுகள்*
*எங்கே எங்கே*
*எந்த டிக்கியில் இருக்கிறது?*
*எந்த புளி மிளகாய்ச்சிப்பங்களில்*
*பொதிந்து கிடக்கிறது*
*என்று*
*மோப்பம்*
*பிடித்துக்கொண்டிருக்கின்றன.*

*மக்களெல்லாம் கூறு  கட்டப்பட்டு*
*பொட்டலம் பொட்டங்களாக*
*பணத்துக்கு*
*அடிமாட்டு விலையில்*
*வியாபாரம் ஆகின்றன.*
*நஷ்டங்கள் லாபங்களாக*
*பாலிஷ் ஏற்றப்பட்டு*
*பண்ட மாற்றம் செய்யப்படுகிறது.*
*சமுதய மொத்தமும் மூச்சுத்திணறி*
*சிந்திக்கும் தூய காற்று கிடைக்காததால்*
*முகமூடி போட்டுக்கொண்டு*
*முட்டி மோதிக்கொண்டிருக்கிறது.*
*இதற்கு ஆக்சிஜன் சிலிண்டர்*
*மாட்டுவதென்றால்*
*எத்தனை ஆகாயத்தை*
*வெட்டி எடுப்பது?*
*மணல் அள்ளும் மாஃபியாக்களிடம்*
*தான்*
*டெண்டர் விடவேண்டும்.*
*அப்புறம் சூரிய சந்திரர்கள்*

வரும் பாதையும் பள்ளமாகி
எங்காவது விழுந்து கிடப்பார்கள்.
குவாரிக்காரர்கள் அவற்றையும்
க்ரஷ் செய்து ரோட்டுக்கு
ஜல்லியாக்கி விடுவார்கள்.

குழப்பத்தின் மேல் குழப்பம்.

வாக்கு போட்டு வாக்கு போட்டு
வாக்கு எண்ணி வாக்கு எண்ணி
..............
....................
இந்த உற்"சவங்களில்"
சவமாக ஆகிக்கொண்டிருப்பது
நம் ஜனநாயகம் மட்டுமே.

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன்
*(ruthraasivan@gmail.com)*

## 40. கற்பனை ஊற்றுக்கண்ணின் அடைப்பு ---ச்சி

***— முனைவர் ச.கண்மணி கணேசன்***

*அறியாப் பருவத்தில் பாட்டிகள் சூட்டிய பட்டம்*
*அறிந்தபின்னரோ அண்ணன்தம்பிகள் தட்டிய மட்டம்*
*நாற்றாய் நடப்பட்டபின் நாயகரின் அரட்டல்*
*நாற்காலி வீற்றிருக்கும் தலைமுறையின் மிரட்டல்*

*மாறி மிஞ்சுநரை எய்திவிட்டால்- அதுவரை*

*கொஞ்சிநின்ற பாலகரின் மீசைமுறுக்கும் உருட்டல்*
*கிழடுகட்டை திட்டுஒன்றே வயோதிகம் வந்து கிட்டல்*
*இடைஞ்சல்பிறவிகள் இவரென்று முகம்திருப்பும் முட்டல்*
*வாரிசாய் வந்துசேரும் வளைக்கரத்தார் சுட்டல்*

*வேராயிருந்து உயிர்ப்பித்த விழுதுகளை வேண்டாமெனும் கட்டம்*
*கோரப் பார்வைதான் சமூகத்தின் சட்டம்*
*பொருந்தாத உறவுகளாய்ச் சதுரத்துக்குள் வட்டம்*
*திருந்தாத மனங்களுக்குச் சொல்வதென்ன திட்டம்!*

*பிஞ்சுப் பருவமுதல் இவரென்றும் சினம்தாங்கித் தவிக்கிறாரே ஏன்?*
*பஞ்சுமனமென்றும் ஆறாமல் பற்றி எரிவதும் ஏன்?*
*விஞ்சும் அன்பிற்கென்றும் வேதனையே பிரதியாவது ஏன்?*
*தஞ்சமெனச் சென்றுஎன்றும் சுமைதாங்கி ஆனாரே ஏன்?*

*முட்களாய்த் தைக்கும் கேள்விக்குறி முனைகள்*
*இதயச்சுவரில் ஏற்படுத்தும் இடைவிடாத ரணங்கள்*
*ராஜாங்கம் நடத்தவந்த ராணியர் சோர்ந்துபோய்*
*தாஜாங்கம் செய்துசெய்தே தான்தேய்ந்தார் வாழ்க்கையிலே*

*மகிழ்ச்சிப் பால்வீதியில் பந்தங்களுடன் பவனிவரத் துடித்தவர்*
*நிகழ்ச்சி மாறிவிட்டதில் - விழிகளைமட்டும் விண்மீன்களில் சிக்கவிட்டு*
*உறவுக்கும்பலுக்கு இடையில் ஒன்றியும் தனியாகவே தவிக்கிறார்*
*பிரச்சினைச் சுழிகளுக்கு இடையில் சிக்கிக்கொண்ட படகானார்*

*விடிவுக்கரை காணத் தீர்ப்பொன்று தீட்டுகிறார்!!*

*தொடர்பு: முனைவர் ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

## 41. ஒரு தாலாட்டு

### — ருத்ரா இ.பரமசிவன்

*மயிலே கிளியே*
*மனங்களின் மடியில் வா!*
*இன்பத்தின் சிறகுகள் கொண்டு*
*மனங்களின் மடியில் வா!*
*வானமும் கடலும்*
*உன் கூட வரும்.*
*என் வாழ்வு நீளும்*
*என் தாகம் மூளும்.*
*நீ தானே கை விளக்கு!*
*காதல் தந்த எழுத்திலே*
*ஒரு சொல் ஆகினாய்.*
*இரவு உராய்வுகளின்*
*தீப்பொறிகள் பொசுக்கிய*
*விடிவுகளின் ரகசியம்*
*எல்லாம் நீயே!*
*என் போல் நீ ஆகும்போது*
*உன் போல் நான்*
*உன் உள்ளே புகுவேன்*
*அறிவாயா?*
*உன் பிஞ்சுவிரல்கள்*
*விரிந்த போது*
*எல்லா செங்கடல்களும்*
*பிளந்து போகும்.*
*தேவ வசனங்கள்*
*மூளியாகும்.*
*சொர்க்கம் வேண்டாம்.*
*வைரங்கள் வேண்டாம்.*
*உன் முறுவல்*
*ஒன்று தா!..கண்ணே*
*உன் முறுவல் ஒன்று தா!*
*தாலேலோ..தாலேலோ*
*தமிழே தமிழே தாலேலோ*

*தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)*

## 42. தந்தைமை

*— முனைவர் ச.கண்மணி கணேசன்*

*என்னைச் சுமப்பதே சுகம் என்று நீங்கள் தூக்கித் திரிந்த காலம்*
*உங்கள் தோளில் நாடியைப் பதித்துக் கொண்டு உலகைச் சுற்றிப்பார்த்த காலம்*
*இரண்டு கைகளிலும் இரண்டு மிட்டாய்கள் கொடுத்துத் திண்ணையில் இறக்கிவிட்ட காலம்*
*முதன்முதலாய்த் தெருப்புழுதியில் கால்பதித்த போது உங்கள் சுண்டுவிரலைப் பிடித்த காலம்*
*எனக்குப் பிடித்த குளோப்ஜாமூன் வாங்கிக்கொடுத்து குஷியாக்கிய காலம்*
*வணிகப்பயணம் மேற்கொள்ளும் முன்னர் அண்டன்பேக்கரி வரை உடனழைத்துச் சென்ற காலம்*
*கைநிறையப் பொட்டலங்கள் கொடுத்து டாடா காட்டிய காலம்*
*அம்மாவுக்குப் பயந்து உங்களிடம் ரகசியமாய்ப் பேனா வாங்கிய காலம்*
*'எம்பொண்ணுக்குப் படிப்பெல்லாம் தேவையில்லை' என்று கொடிபிடித்த காலம்*
*சென்ற தீபாவளிக்கு எடுத்த அதே கலர்; அதே டிசைன்; அதே ரகதாவணியை இந்தத் தீபாவளிக்கும் கொடுத்த காலம்*
*எனக்குப் பரிசாகக் கிடைத்த 'பாரதியார் கவிதைகள்' புத்தகத்தைக் கடைத்தெரு முழுதும் காட்டித் திரிந்த காலம்*
*சொந்தக்காலில் நான்நிற்க நீங்கள் தவித்த காலம்*
*'மாப்பிள்ளைக்குத் தலைக்கறி தாண்டா பிடிக்குமாம்; சமைத்துப் பழகிக்கொள்' என்று வற்புறுத்திய காலம்*
*கைப்பிடித்துக் கொடுத்தவேளை மருண்டகோலம்; 'சம்பளத்த முழுசா மாமியார் கையில குடுத்துருப்பா' என்று பதறிய காலம்*
*என்னிடம் வாங்குவது மானக்கேடு என்று ஒதுங்கிய காலம்*
*நான் வெய்யிலில் வாடாதபடி; 'ஐயா அலைஞ்சி வாங்கிட்டு வந்துர்ரேண்டா; நீ வீட்டுக்குப் போடா' என்று என்னைப் பொத்திய காலம்*
*'மாங்காய் போட்டு மீன்குழம்பு; எங்கம்மா சமைத்தமாதிரி' என்று ருசித்த காலம்*
*'கண்ணா'... என்று வாய்நிறைய அழைத்து; அந்தக்குரலில் அன்பையும், நம்பிக்கையையும் வெளிப்படுத்திய காலம்*
*இன்று என்கையைப் பற்றிக்கொண்டு எத்தனையோ சொந்தங்கள்;*
*எனக்குப் பிடித்துக்கொள்ள தந்தையின் சுண்டுவிரல்.......?*

*தொடர்பு: முனைவர் ச. கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

## 43. நாற்பது பேர்

**— ருத்ரா இ.பரமசிவன்**

*நம் "இனியவை நாற்பது"க்கெல்லாம்*
*அடித்தளமாக*
*படுத்துக்கிடப்பது*
*ஒரு தேசிய சோகத்தின்*
*இந்த "இன்னா நாற்பது" தான்.*
*கம்பீரமாய் இந்த அசோகசக்கரம்*
*இப்படி மீசை முறுக்கி நிற்பதன்*
*மாறாத வீரத்தையும் துணிவையும்*
*மண்ணுக்குள் கிடந்தாலும்*
*செதுக்கிக்கொண்டிருப்பவர்கள்*
*இந்த நம் தவப்புதல்வர்களே.*
*அழுது புலம்பும் தன் மனைவி*
*எனும் தாயின்*
*அந்த கர்ப்பத்துக்குள்ளும்*
*ஒரு எரிமலைப்பிஞ்சை*
*பதியம் செய்து இருக்கிறோம்*
*என்ற நினைப்பில் அல்லவா*
*அவன் அந்த சவப்பெட்டியில்*
*கிடக்கிறான்.*
*ஏதோ*
*தீபாவளிக்கு அப்பா தைத்துத்தந்த*
*புதுச்சட்டையை அணிந்து கொண்டது*
*போல் அல்லவா*
*அந்த பெட்டிக்கு ஒரு மூவர்ண*
*சட்டையை*
*போட்டுக்கோண்ட திருப்தியில்*
*படுத்துவிட்டான்.*
*வாளோடு வாள்மோதும்*
*யுத்தம் எல்லாம் செய்யத் திராணியற்ற*
*மலட்டு மிருகங்களின்*
*இந்த சதிகள் எல்லாம்*
*தவிடு பொடியாக*
*நொறுக்கப்படவேண்டும்.*
*பாரதத்தின்*
*எல்லாமொழியும் உருண்டு திரண்டு*
*இப்போது*
*தீப்பிழம்பாக வெளிச்சம் ஏற்றுகிறது.*
*நம் மண்ணின் நாடி நரம்புகளின்*
*பின்னல் எல்லாம்*
*நம் எல்லா மாநிலங்களிலும்*
*மூவர்ணத்தின் ஒரே அக்கினி*
*வர்ணத்தை*
*உயர்த்திக்காட்டுகிறது.*
*நம் தேசியக்கனலின் அதன்*
*ஒரே மொழி*
*இதோ ஒலிக்கிறது…....*

**"வந்தேமாதரம்"**

*தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)*

## 44. மரத்தின் சிரிப்பு

***— திருத்தம் பொன். சரவணன்***

*அந்த மாமர இலைகளிடம்*
*அப்படி என்ன நகைச்சுவையைக்*
*கூறிச் சென்றதோ காற்று*
*குலுங்கிச் சிரித்தன இலைகள்.*

*காற்றும் மரமும் நண்பர்களோ*
*காற்று பேசும் போதெல்லாம்*
*குலுங்கிச் சிரித்தன இலைகள்*
*கைதட்டிச் சிரித்தன நெற்றுக்கள்*

*காற்றும் கொடியும் காதலரோ*
*காற்று தீண்டும் போதெல்லாம்*
*நெளிந்து அசைந்தது அதன்இடை*
*நெகிழ்ந்து சிரித்தது அதன்மலர்*

*தொடர்பு: திருத்தம் பொன். சரவணன் (vaendhan@gmail.com)*

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

***தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்திகள்***
***http://thf-news.tamilheritage.org/***

---

***மண்ணின் குரல் - மரபுக் காணொளிகள் வெளியீடு***
*https://www.youtube.com/channel/UCbPUhkB63Rooe7RQ94kGWag/playlists*

***ஜனவரி - 2019:***
நோர்வே தமிழரின் ஆவணச் சேகரிப்புகள்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/ETLDVUPYd1s*

நோர்வே வந்த முதல் தமிழர்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/CpIt7les8NE*

***பிப்ரவரி - 2019***
இலங்கைக் கோட்டையின் வரலாறு அறிவோம்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/_5Jze6hm2rA*

திருப்புடைமருதூர் ஸ்ரீநாறும்பூநாதர் சித்திரக்கூடம்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/oJ8H-IPJS14*

மதுரை ஸ்ரீ பாண்டி முனீஸ்வரர் கோயில் பௌத்த தொடர்புகள்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/4IxJX2IEyQo*

சங்கமித்தை – மாதகல் சம்பில்துறை பௌத்த அடையாளங்கள்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/IYqzUPjfizI*

***மார்ச் - 2019***
நம்பியாண்டார் நம்பிகள் பிறந்த தலம் – திருநாரையூர்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/FGvsQqyVvJM*

கல்வி வரம் தந்த துறவி சுவாமி சகஜானந்தா
*@YouTube: THFi- Channel: https://youtu.be/aFk4cebz3D8*

கன்னியாகுமரி – புத்தம்புது காலை
*@YouTube: THFi- Channel: https://youtu.be/TeI_OXtGX7w*

மகேந்திரவாடி மகேந்திரவர்மன் பெயர் சொல்லும் வரலாறு
*@YouTube: THFi- Channel: https://youtu.be/VvC2HVRKXVA*

மகேந்திர தடாகமும் சிதலமடைந்த பிள்ளையார் கோயிலும்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/tNlAiOCCBV8*

***ஏப்ரல் - 2019***
திருவலம் – வந்தியத்தேவன் பெயர் சொல்லும் ஊர்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/bz263F4ZqII*

ஆற்காடு டெல்லி கேட்
*@YouTube: THFi- Channel: https://youtu.be/4a63fxgij7Y*

### தமிழ் மரபு அறக்கட்டளை மின்னூல் வெளியீடு

மனுமுறைகண்ட வாசகம்-மனுச் சோழன் *-31/1/2019*
*http://www.tamilheritage.org/old/text/ebook/THF-manumuraikanda_Vallalar.pdf*

ரெவரென்ட் ஜான் ரத்தினம் பிள்ளை வாழ்க்கைக் குறிப்பு *-25/3/2019*
*http://tamilheritage.org/old/text/ebook/THF-EBOOK-Rev.John_Ratnam_%20DDF-Book.pdf*

தமிழ் மரபு அறக்கட்டளை
Tamil Heritage Foundation
THF
தமிழர் வரலாற்றுக்கு ஓர் அரண்




Electronic Preservation of Tamil Heritage Materials
e-BOOK Series

an international NGO initiative to digitize
old Tamil Books and Palm Leaf Manuscripts
visit: http://www.tamilheritage.org/

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி
மேலும் அறிய: http://www.tamilheritage.org/




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை



## "நம் மண் - நம் மரபு"

*தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)*
*வெளியிடும் காலாண்டு மின்னிதழ்*
*மின்தமிழ்மேடை - காட்சி: 17*
*ஏப்ரல் – 2019*




**17**